இவற்றை எங்களுக்கு விஸ்தாரமாய்ச் சொல்லுவீராக. உலகம் உம்மையே எல்லாமறிந்தவராகக் கொண்டாடுவதால் உம்மையே நாங்கள் நாடி வந்தோம்.

நாகதந்தர் இவ்வாறு கேட்டதும் வியாஸர் பகவானைத் தியானம் செய்து சொல்லலானார்:—

3—ம் அத்.

*தக்ஷனுடைய யாகத்துக்கு கருடன் வந்தார்.*

வியாஸர்—

முன்பு தக்ஷன் யாகம் செய்தான். தேவர்களும் நாரதாதி[1] மஹரிஷிகளும் அந்த யாகத்திலிருந்தனர். உத்காதா ஸௌபர்ண ஸூக்தத்தை[2] கானம் செய்தார். உடனே ஆகாசத்தில் பெரிய முழக்கம் உண்டாயிற்று; பூமி நடுக்கம் கொண்டது; யாகத்திலிருந்தோர் யாவரும் திகைத்தனர். ஆகாசத்தில் ஸாமகானம் கேட்கப் பட்டது. மிக்க பரிமளம் வாய்ந்ததாயும் மிருதுவாயுமுள்ள கா[ற்]றை வீசிக்கொண்டு—வளைந்த மூக்கு[3], பெரிய பற்கள், பருத்து நீண்ட கைகள், கிரீடம், பாம்புகளால் அமைந்த கர்ண குண்டலம் கைகளிலும் கால்களிலும் அணிந்த காப்புகள்—முதலியவற்றோடு விளங்கும் வேதாத்மாவான கருடன் அங்கு வந்தார்.

யாகத்திலிருந்தோர் பெரிதும் களிப்புற்று,—வேதம் யாகம் மந்திரம் யாவும் கருடனுடைய சரீரத்திலேயே அமைந்திருப்பதாயும், யாகஸ்வரூபியான கருடனே யாகத்துக்கு வந்தது பெரும் பாக்கிய மென்றும் கருடனை ஸ்தோத்திரம் செய்து, தங்களை ரக்ஷிக்கவேண்டு மென்றும் பிரார்த்தித்தார்கள். உங்களுக்கு வேண்டும் வரத்தைக் கேளுங்களென்று கருடன் சொன்னார். ரிஷிகள் அவரை அடி பணிந்து வரம் கேட்டனர்.

1. நாரதர் தக்ஷயாகத்திருந்தபோதே காருட புராணம் கேட்டிருப்பார். ஜனகயாகத்தில் வியாஸரிடம் வந்து காருடபுராணம் கேட்கும் ரிஷிகளிலும் நாரதர் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. யஜுர்வேதம், ஸம்ஹிதை, 4—ம் காண்டம், முதல் பிரச்னம் 10வது அனுவாகம், கடைசி பஞ்சாதி—"ஸுபர்ணோஸி கருத்மான்—" என்று ஆரம்பம்.

3. நாம் படங்களில் காண்பதுபோலவே இங்கு கருடன் வர்ணிக்கப்படுகிறார்.

4—ம் அத்.

*கருடன் யாகத்தில் புராணத்தை நிர்மித்தார்.*

ரிஷிகள்—

கருட பகாவானே! ஸகல வித்தைகளும் வேதத்தில் அடக்க மாயிருப்பதாலும், நீரே வேதமயமா யிருப்பதாலும் உமக்குத் தெரிந்துள்ள ஸகல தத்துவங்களையும் எங்களுக்குச் சொல்லுவீராக.

வியாஸர்—

ரிஷிகள் இவ்வாறு வேண்டிக்கொண்டதும், கருடன் ஒரு புராணத்தை நிர்மித்து ஸகல தத்துவங்களையும் ரிஷிகளுக் கறிவித்து ஆகாசத்தில் பறந்து போனார். பிறகு, பிரம்மா அந்த யாகத்துக்கு வந்து—"அஷ்டாதச புராணங்களும் இதிஹாஸங்களும் வேதோப ப்ரம்ஹணத்துக்காக ஏற்பட்டவை. வேதாத்மாவாயும் வேத புரு ஷனுக்கு வாஹனமாயுமுள்ள கருடன் அழிவில்லாதவர். ஆதலால், அவர் செய்த புராணம் மற்றைய புராணங்களையும்விட சிரேஷ்ட மானது"—என்றார்.

ரிஷிகள்—

பிராணிகள் யாவும் காலத்தினால் அழிக்கப்படுகின்றன. ஸ்தா வர ஜங்கமமான உலகம் முற்றிலுமே காலத்தின் வாய்ப்பட்டதா யிருக்கையில், கச்யபருக்குப் பிள்ளையாய்ப் பிறந்த[1] கருடன் அழி வில்லாதவரென்று எப்படிச் சொல்லுகிறீர்?

பிரம்மா—

கர்ம வச்யர்களைத்தான் காலம் அழிக்கும். ஸர்வேச்வரன் நித்தியன். காலசக்கரத்தைச் சுழற்றுகிறவன் அவனே. அவனு டைய விபூதிகள் அனந்தம். அவன் லீலையாக ஜகத்தை ஸ்ருஷ்டிக் கையில் அவனும் ஸ்வேச்சையாகப் பல ஜன்மங்களை எடுக்கிறான், அவனைச் சேர்ந்தவர்களும் அவனுடைய இச்சையின்படியே பல ஜன்மங்களை எடுக்கிறார்கள். ஆகையால், கருடனும் ஸர்வேச்வர னுடைய இச்சையினாலேயே கச்யபருக்குப் பிள்ளையாகப் பிறந்தார். கருடன் செய்த புராணம் சிரேஷ்டமாய் விளங்கும்.

1. கருடனுடைய ஜனனம் கடைசியில் வரும் விமரிசத்தில் சுருக் மாகச் சொல்லப்படும்.

வியாஸர்—

பிரம்மா இவ்வாறு சொல்லி மறைந்தார். ரிஷிகளும் யாகத்தைப் பூர்த்தி செய்தனர். யாகத்தில் கருடன் சொன்னபடியே நான் அந்தப் புராணத்தைச் சொல்லுகிறேன்.

5—ம் அத்.

வியாஸர் ஜகத் ஸ்ருஷ்டியின் விவரத்தைச் சொல்லுகிறார்.

வியாஸர்—

பிரம்மாத்மகமான இந்த ஜகத்து பிரம்மத்தினிடமிருந்தே உண்டாயிற்று; பிரம்மத்தினிடமே நிலைத்திருக்கிறது. ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் செய்வதும், அதை அனுபவிப்பதும் பிரம்மமே.[1]

பிரம்மத்தினுல் பதினுலு உலகங்கள் உண்டாக்கப்பட்டன. பூதங்களை தேவ, மனுஷ்ய, திர்யக், ஸ்தாவரம்—என்று நாலு விதமாக ப்ரம்மம் ஸ்ருஷ்டித்தது. பூதங்கள் பலவிதமாகப் பிறப்பதற்கும் அவற்றின் உயர்வு தாழ்வுகளுக்கும் அவற்றின் கர்மமே காரணமாகும்.[2]

பரப்ரம்மம் ஒன்றே ஸர்வபூத நியந்தா. பரம புருஷனும், எல்லா காரணங்களுக்கும் காரணமாயும், ஸர்வேச்வரனும் விஷ்ணுவாயுமுள்ள நாராயணனை பகவானுக்கே பரப்ரம்மம் என்று முக்கியமான பெயர். மற்றவர்களிடத்தில் பிரம்மம் என்ற பெயர் உபசாரமாக ப்ரயோகிக்கப்படுகிறது.[3]

இப்பொழுது சுருக்கமாகச் சொன்னேன். விஸ்தாரமாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

6—ம் அத்.

வியாஸர் ரிஷிகளுக்குப் பஞ்சபூதம் முதலானவற்றின் உத்பத்தி க்ரமத்தைச் சொல்லுகிறார்.

வியாஸர்—

பகவான் முதலில் எல்லாவற்றையும் மனதால் நிர்மித்து, தன் சக்தியினுல் ஆவிஷ்டனுன புருஷனை உண்டாக்கி, ஸ்ருஷ்டி காலத்தில்

1. இது இரண்டாம் அத்தியாயத்தின் முதல் கேள்விக்கும் நான்காம் கேள்விக்கும் பதில்.
2. இது இரண்டாவது கேள்விக்கு பதில்.
3. இது மூன்ருவது கேள்விக்கு பதில். ஐந்தாம் கேள்விக்கு பதில் ஏழாம் அத்தியாயம்.

அனேகம் பூதங்களை ஸ்ருஷ்டித்தார். காலம் நித்யம். ஸர்வேச்வரனே காலாத்மா வாயிருக்கிறான்.

*தத்துவங்களின் உத்பத்தி—*

தமஸ்ஸிலிருந்து[1] மஹானும் மஹானிலிருந்து அஹங்காரமும் உண்டாயின. அஹங்காரம் ஸத்வம், ரஜஸ், தமஸ்—என்ற மூன்று குணங்களின் சேர்க்கையினால் வைகாரிகம், தைஜஸம், பூதாதி—என மூன்று வகைப்படும்.

*பூதங்களின் உத்பத்தி—*

பூதாதி யென்னும் தாமஸ அஹங்காரத்திலிருந்து சப்த தன்மாத்ரையும்[2] சப்த தன்மாத்ரையிலிருந்து ஆகாசமும் உண்டாயின. ஆகாசத்துக்கு சப்தம் குணம்.

ஆகாசத்திலிருந்து ஸபர்ச தன்மாத்ரையும் ஸ்பர்ச தன்மாத்ரையிலிருந்து வாயுவும் உண்டாயின. வாயுவுக்கு ஸ்பர்சம் குணம்.

வாயுவிலிருந்து ரூப தன்மாத்ரையும் அதிலிருந்து தேஜஸ்ஸும் உண்டாயின. தேஜஸ்ஸுக்கு ரூபம் குணம்.

தேஜஸ்ஸிலிருந்து ரஸ தன்மாத்ரையும் அதிலிருந்து ஜலமும் உண்டாயின. ஜலத்துக்கு ரஸம் குணம்.

ஜலத்திலிருந்து கந்த தன்மாத்ரையும் அதிலிருந்து பூமியும் உண்டாயின. பூமிக்கு கந்தம் குணம்.

*பிரம்மா முதலானவர்களின் உத்பத்தி—*

பூதங்கள் இம்மாதிரியே ஸ்ருஷ்டிக்கப்பட்டன. பூதங்கள் ஒன்று சேர்ந்து அண்டம் உண்டாயிற்று. அண்டத்தில் பகவான் பிரம்மாவை ஸ்ருஷ்டித்தார்.

ஆயிரம் யுகம் சேர்ந்து பிரம்மாவுக்கு ஒருநாள். பிரம்மாவின் காலத்துக்குள் பதினாலு மனுக்களும், பதினாலு இந்திரர்களும் வருகிறார்கள்; தேவர்களும் ஸூரியன் முதலானோர்களும் மாறுகிறார்கள்.

---

1. இருபத்திநாலு தத்வங்களிலும் முதன்மையான ப்ரக்ருதி தத்துவத்தின் அவஸ்தா விசேஷம் தமஸ். இந்த நுட்பங்களை மணவாளமாமுனிகளுடைய தத்துவத்ரய வியாக்யானத்திலும் தேசிகன் அருளிச்செய்த கிரந்தங்களிலும் விவரமாய்க் காண்க.

2. ஆகாச தன்மாத்ரையென்று மூலத்தில் சொல்லப்பட்டாலும் ஆகாசத்துக் காரணமான சப்த தன்மாத்ரையே யாகும். தன் மாத்ரைகளாவன பூதங்களினுடைய ஸூக்ஷ்மாவஸ்தைகள்.

பிரம்மாவினிடமிருந்து சக்தியைப் பெற்ற ப்ரஜாபதிகள் கர்மத் துக்குத் தக்கவாறு ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தார்கள். பிரஜைகள் கர்மத் துக்கேற்ற பலனையே அனுபவிப்பார்கள். ஒவ்வொருவரின் உயர்வு தாழ்வுக்கும் கர்மமே காரணமாகிறது.

பிராணிகள் பகவானுடைய அனுக்ரகத்தினால் கர்மத்தை நசிப் பித்துப் பரமபதம் சேர்கின்றனர். தம்முடைய தர்மத்தையும், ஆசாரத்தையும் அறிந்து, சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டு பகவா னையே ஆராதிப்பவர்களுக்குத்தான் பகவானுடைய அனுக்ரஹம் கிடைக்கும். நாராயணனையே கதியாகப் பற்றியவர்கள் கர்மத்தை நசிப்பிப்பார்கள். நாராயணனைப் பற்றாதவர்கள் தம்முடைய நிழலைப் போல கர்மத்தையும் அழிக்கமுடியாது.

இப்படி பூதஸங்கம் தாமஸ அஹங்காரத்தினின்றும் உண்டா யிற்று.

இந்திரியங்களின் விவரம்—

ஸாத்விகாஹங்காரமான வைகாரிகத்திலிருந்து பத்து இந்திரியங் களும் பதினோராவதான மனஸ்ஸும் உண்டாயின. கர்மேந்திரியங் களைந்தும் ராஜஸ அஹங்காரமான தைஜஸத்திலிருந்தும் உண்டான தாகச் சிலர் சொல்லுவார்கள்.

காது, மெய், கண், மூக்கு, நாக்கு—இவ்வைந்தும் ஞானேந்திரி யங்கள். இவற்றுக்கு க்ரமமாக சப்தம், ஸ்பர்சம், ரூபம், கந்தம், ரஸம்—இவைகளே குணங்கள். வாய், கை, குறி, மலத்துவாரம், கால்—இவ்வைந்தும் கர்மேந்திரியங்கள். இவற்றுக்கு முறையே பேச்சு, சில்பம், ஜல விஸர்ஜனம், மல விஸர்ஜனம், கமனம்—இவை களே குணம். மனஸ்ஸு ஸங்கல்ப விகல்ப ரூபமாயிருக்கும். வியவ ஸாயத்தை யுடையது புத்தி.

இன்னும் நீர் கேட்க விரும்புவது யாது?

7—ம் அத்.

வியாஸர் பூமியின் அளவு முதலியவற்றைச் சொல்லுகிறார்.

நாகதந்தர்—

பூமியின் பிரமாணத்தையும் மலை, துவீபம், ஸமுத்திரம்—இவற் றின் விசேஷத்தையும் பூர்ணமாகச் சொல்லும்.

வியாஸர்—

பகவானுடைய விபூதியை தேவர்களாலும், ராக்ஷஸர்களாலும், மற்று யாராலும் சொல்லமுடியாது. நான் சுருக்கமாய்ச் சொல்லு கிறேன்:—

பூமியின் பிரிவு—

பூமி ஒன்பது வருஷங்களாகவும் ஏழு துவீபங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது.

துவீபங்கள்—

ஜம்பூ த்வீபம், ப்லக்ஷ த்வீபம், சால்மலி த்வீபம், குச த்வீபம், க்ரௌஞ்ச த்வீபம், சாக த்வீபம், புஷ்கர த்வீபம்—என்று துவீபங்கள் ஏழு.

ஸமுத்திரங்கள்—

உப்பு ஸமுத்திரம், இக்ஷு ஸமுத்திரம் (கரும்பு), ஸுரா ஸமுத்திரம் (கள்), ஸர்ப்பி ஸமுத்திரம் (நெய்), ததி ஸமுத்திரம் (தயிர்), துக்த ஸமுத்திரம் (பால்), ஜல ஸமுத்திரம்—ஆக ஸமுத்திரங்கள் ஏழும் ஒரு துவீபத்துக் கொரு ஸமுத்திரமாக ஏழு துவீபங்களையும் சூழ்ந்து கொண்டிருக்கின்றன.

வருஷங்கள்—

பாரதவர்ஷம், கிம்புருஷ வர்ஷம், ஹரி வர்ஷம், இளாவ்ருத வர்ஷம், பத்ராச்வ வர்ஷம், கேதுமால வர்ஷம், ரம்ய வர்ஷம், ஹிரண்மய வர்ஷம், உத்தர குருவர்ஷம்—என்று ஒன்பது வருஷங்கள். இதில் முதலாவதான பாரத வர்ஷமும் ஒன்பது கண்டங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது.

துவீபங்களின் விஸ்தாரம்—

ஜம்பூ த்வீபத்தின் விஸ்தாரம் லக்ஷம் யோஜனை. ப்லக்ஷத் வீபம், ஜம்பூ த்வீபத்தைவிட இரண்டு பங்கு. இப்படி ஒவ்வொரு துவீபமும் மற்றொன்றைவிட இரண்டு பங்கு பெரிதாயிருக்கும். பூமண்டலம் முழுவதும் ஐம்பதுகோடி யோஜனை விஸ்தாரமுள்ளது.

மேல் உலகங்கள் எழுபதினாயிரம் கோடி யோஜனை விஸ்தார முள்ளவை.

கீழ் உலகங்கள்—

அதலம், விதலம், நிதலம், கபஸ்திமத் எனப்படும் தலாதலம், மஹாதலம், ஸுதலம் பாதாளம்—என்று கீழே ஏழு உலகங்கள். இவை ஒவ்வொன்றும் பதினுயிரம் யோஜனை விஸ்தாரமுள்ளது.

சேஷன் என்னும் பிரம்ம சக்தி பூமண்டலம் முழுவதையும் கீழே தரித்துக் கொண்டிருக்கிறது.

ஸூரிய சந்திரர்களின் காந்தி எவ்வளவு தூரம் பரவுகிறதோ அவ்வளவு விஸ்தாரமுள்ளது பூமியும் ஆகாசமும்.

கிரஹங்கள்—

பூமிக்கு மேல் ஸூரியன், சந்திரன், புதன், சுக்ரன், அங்காரகன், குரு, சனி—ஆக இந்த கிரஹங்கள் முறையே ஒவ்வொன்றும் மற்றொன்றைவிட லக்ஷம் யோஜனை உயரத்திலிருக்கின்றன.

சனிக்கு லக்ஷம் யோஜனை உயரத்தில் ஸப்தரிஷி மண்டலம். ஜோதிசக்ரத்துக்கு லக்ஷம் யோஜனை உயரத்தில் த்ருவ மண்டலம்.

மேல் உலகங்கள்—

வாயுவினுல் பிராணனை தரிக்கிற பாகம் முழுவதும் பூலோகம். பூலோகத்துக்கும் ஸூரிய மண்டலத்துக்கும் இடையிலுள்ளது புவர்லோகம்.

ஸூரியனுக்கும் த்ருவனுக்கும் இடையிலுள்ளது ஸுவர்லோகம். பூ:, புவ:, ஸுவ: என்ற இம்மூன்று உலகங்களுக்கும் தான் த்ரைலோக்ய மென்று பெயர்.

த்ரைலோக்யத்துக்குக் கோடி யோஜனை உயரத்தில் மஹர்லோகம்.

மஹர்லோகத்துக்கு இரண்டு கோடி யோஜனை உயரத்தில் ஜனேலோகம்.

ஜனேலோகத்துக்கு நாலு கோடி யோஜனை உயரத்தில் தபோலோகம்.

தபோலோகத்துக்கு ஆறு கோடி யோஜனை உயரத்தில் ஸத்யலோகம்.

இப்படிப் பாதாளம் முதலாகவுள்ள பதினுலு உலகங்களையும் அவற்றின் பிரமாணத்தையும், அண்டத்தின் விஸ்தாரத்தையும் நாகதந்தரே! உமக்குச் சொன்னேன்.

ஆவரணங்கள்—

இப் பதினாலு உலகங்களையும் அண்டபித்தி சூழ்ந்திருக்கிறது. அண்ட பித்தியை ஜல தத்துவமும், ஜல தத்துவத்தைத் தேஜஸ் தத்துவமும், தேஜஸ் தத்துவத்தை வாயு தத்துவமும், வாயு தத்துவத்தை ஆகாச தத்துவமும், ஆகாச தத்துவத்தை அஹங்காரமும், அஹங்காரத்தை மஹத் தத்துவமும். மஹத் தத்துவத்தை அவ்யக்தமும் சூழ்ந்திருக்கும். மஹான் முதலான இவ்வளவு தத்துவங்களையும் மூல ப்ரகிருதி சூழ்ந்திருக்கிறது. மூல ப்ரகிருதி காலத்தினாலும் திக்கினாலும் அளவிட முடியாததாயும் அழிவற்றதாயு மிருக்கிறது.

மூல ப்ரகிருதியை ஜீவாத்மா வியாபித்திருக்கிறது. மூல ப்ரகிருதியும் ஜீவாத்மாவும் பகவானுடைய சக்தியினால் வியாபிக்கப் பட்டுள்ளன. அந்த சக்தி ஸ்ரீமந் நாராயணனிடமே யுள்ளது. நித்யனுபுள்ள ஸ்ரீமந் நாராயணனே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்கிறான்.

8—ம் அத்.

பகவத் ஸம்பந்தம் பெற்றவைகளே புண்ணிய தீர்த்தங்களென்று சொல்லுகிறார் வியாஸர்.

நாகதந்தர்—

பூமியிலுள்ள புண்ணிய தீர்த்தங்களையும் புண்ணிய க்ஷேத்திரங்களையும் சொல்லுவீராக.

வியாஸர்—

விஷ்ணுவின் ஆலயமே புண்ணிய க்ஷேத்திரம். அவனுடைய பாத தூளியினால் பரிசுத்தமான தீர்த்தமே புண்ணிய தீர்த்தமாகும். பகவான் ஒருவனே புண்ணிய வஸ்து வாகையால், பகவத் ஸம்பந்தம் பெற்றதுதான் புண்ணிய வஸ்து. எல்லா வஸ்துக்களும் குணத்ரயாத்மகங்களாயும், குணங்கள் தோஷம் நிறைந்தவையாயு மிருப்பதால், நினைத்தமாத்திரத்தில் பாபங்களைப் போக்கவல்ல பகவத் ஸம்பந்த மொன்றினாலேயே ஸகல வஸ்துக்களும் பரிசுத்தமாகின்றன.

பகவானுடைய பாதத்திலிருந்து உண்டாகும் கங்கா தீர்த்தத்தினால் எல்லா பாபங்களும் போகும். யமுனை, பத்மினி, காவேரி— முதலிய நதிகளும் பகவத் ஸம்பந்தத்தினாலேயே புண்ணிய தீர்த்தங்களாயின.

பகவானுடைய தரிசனம், நாம ஸங்கீர்த்தனம், கதைகளைச் சொல்லுதல், ஆலயத்துக்குப் போதல், புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தல் முதலிய காரியங்களினால் ஜனங்கள் பாபத்திலிருந்து விடுபடுவார்கள்.

9—ம் அத்.

*வியாஸர் யமுனையின் மஹிமையைச் சொல்லுகிறார்.*

நாகதந்தர்—

*ஸ்வாமி! கங்கை முதலிய நதிகள் அனைத்திலும் எது மிகப் புனிதமானது?*

வியாஸர்—

*தீர்த்தத்தின் மஹாத்மிய மறிந்தவர்கள் கங்கையையே சிரேஷ்டமான நதியாகச் சொல்லுவார்கள். கங்கையின் பிரயாகை முதலிய புண்ணிய தீர்த்தங்களைப்[1] பற்றிச் சொல்ல இப்பொழுது நான் சக்தனல்ல.*

*யமுனை ஸகல துக்கங்களையும் போக்கவல்லது. கிருஷ்ண பகவான் எப்பொழுதும் அங்குதான் வஸிக்கிறார். அவருடைய அடிச்சுவடுகள் இப்பொழுதும் அங்கே காண்கின்றன. யமுனை எல்லா மஹரிஷிகளாலும் ஸேவிக்கப்படுகிறது. சந்திரன்போல் வெளுப்பாயும் மிருதுவாயுமுள்ள மணல்களாலும், கரையில் நிற்கும் பலவிதப் புஷ்ப விருக்ஷங்களாலும் யமுனை விளங்குகிறது. கிருஷ்ண பகவானுடைய பலவித விளையாட்டுக்களுக்கு இடமாயிருந்த பல தீர்த்தங்கள்[2] யமுனையிலுள்ளன.*

*எல்லா நதிகளிலும் உத்தமமானதைச் சொல்லுகிறேன்; கேளும்.*

---

1. *துறைகள்.*

2. *தீர்த்தங்களாவன:— மதுரா தீர்த்தம், புண்டரீக தீர்த்தம், காளிந்தீஹ்ரதம், கோபால தீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம், கோமதீ தீர்த்தம், கோஹ்ரதம், கோதனம், வத்ஸதேனு, வத்ஸபாலம், கிருஷ்ண தேனு, ஸுவர்ணகம், கிருஷ்ணநாபம், புராணகம்—ஆகப் பதினாலு தீர்த்தங்கள் இங்கு சொல்லப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலும் நதியின் துறைகளாகவும் நதிக்கப்பாலுள்ள இரண்டொன்று தனித் தீர்த்தங்களாகவும் இருக்கக்கூடும். தீர்த்தமென்றே எல்லாம் சொல்லப்படுகின்றன.*

10—ம் அத்.

*வியாஸர் ஸரஸ்வதி, ஸரயூ, காவேரிகளின் மேன்மையைச் சொல்லுகிறார்.*

வியாஸர்—

ஸரஸ்வதி மிகப் புண்ணியமான நதி. அது தேசத்துக்குத் தக்கவாறு மறைந்தும் வெளிப்படையாயுமிருக்கும். பிரம்ம பத்தினியான ஸரஸ்வதியே இப்படி நதீரூபமாயிருக்கிறாள். மிகுந்த பலனைக் கொடுக்கவல்ல ப்லக்ஷவணம் உத்தாலம், பரிஸாரகம்—முதலான புண்ணிய தீர்த்தங்கள் ஸரஸ்வதி நதியிலுள்ளன.

கங்கை, யமுனை, ஸரஸ்வதி—இம்மூன்றும் சிரேஷ்டமான நதிகள். கங்கை உத்பத்தி முதல் மிகவும் சிரேஷ்டமானது. வட தேசத்தில் புஷ்கரமும் தென் தேசத்தில் சந்திர ஸரஸ்ஸும் எல்லா ஸரஸ்ஸுக்களையும் விடச் சிறந்தவை.

ஸரயூ நதியும் காவேரியும் உத்பத்திக்குப் பிறகுகூட சிரேஷ்டமாய் விளங்குகின்றன.

ஸரயூ நதி கோஸல தேசத்திலுள்ளது. அதன் கரையிலுள்ள அயோத்தியா புரியில் ராவண வதத்துக்காகப் பிரார்த்திக்கப்பட்ட பகவான் தசரத சக்ரவர்த்திக்குப் பிள்ளையாகப் பிறந்து லக்ஷ்மியின் அம்சமாய் அவதரித்த ஸீதை யென்னும் தன் மனைவியோடு ஸ்நானம் செய்ததாலும், ஸ்ரீரங்கவிமானம் நெடுநாள் இருந்ததாலும் ஸரயூ ஸகல நதிகளுக்கும் சிரேஷ்டமாயிற்று.

விபீஷணன் வெகுவாய்ப் பிரார்த்தித்தும் ரங்கநாதன் காவேரியை விட விரும்பாததால் அதுவே ஸர்வோத்தமமான நதி. நெடுநாள் கழித்து வந்த பர்த்தாவை இருகைகளாலும் கட்டியணையும் காதலிபோல், காவேரி ரங்கநாதனை ஆலிங்கனம் செய்துகொண்டு இருபுறத்திலும் பாய்கிறது. சந்திர தீர்த்தமும் சேர்ந்ததால் காவேரி சிறந்த நதியாயிற்று. ஸனக ஸநந்தனாதி மஹர்ஷிகள காவேரி தீரத்திலேயே ஸ்தாவர வஸ்துக்களாக நித்திய வாஸம் பண்ணுகிறார்கள். புண்ணியவான்களும் பிராம்மணர்களும் காவேரி தீரத்திலேயே வஸிக்கிறார்கள். காவேரி தீரத்தில் புண்ணிய க்ஷேத்திரங்களும் புண்ணிய தீர்த்தங்களும் உள்ளன.

ஸ்வர்கத்வாரம் என்றொரு புண்ணிய க்ஷேத்திரம் அங்கேயுள்ளது. ரிஷிகளே! நீங்கள் அங்கே அவசியம் போகவேண்டும்.

புண்டரீகம்[1] என்ருெரு புண்ணிய தீர்த்தம் இருக்கிறது. அங்கே ஒரு ஆல மரமும், குசலம் என்ற பர்வதமு முள்ளன. அந்த மலையில் பகவான் இருக்கிருர். பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதற்காக அம்மலையில் தவம் கிடந்த சிவபிரானுடைய பாபத்தை பகவான் போக்கடித்தார்.

குசல பர்வதத்துக்குக் கிழக்கே வகுள தீர்த்தம் இருக்கிறது. அங்கு இந்திரன் நெடுநாள் தவம் கிடந்து ஐசுவரியம் பெற்ருன்.

11—ம் அத்.

*ஸ்ரீரங்க விமானம் ஸ்தாபிக்கப்பட்ட அநந்த சய்யை என்னுமிடத்தின் வைபவத்தை வியாஸர் சொல்லுகிருர்.*

நாகதந்தர்—

ஸ்ரீரங்க விமானம் விபீஷணனுல் காவேரி தீரத்தில் ஸ்தாபிக்கப்பட்ட வ்ருத்தாந்தத்தை விஸ்தாரமாகச் சொல்லும்.

வியாஸர்—

வகுள தீர்த்தத்துக்கு நேராகத் தெற்கில் மஹான்களுக்குப் புருஷார்த்தம் ஸித்திக்க வல்லதாயும் எப்பொழுதும் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸான்னித்தியம் வாய்ந்ததுமான அநந்த சய்யை[2] என்ருெரு ஸ்தலமுள்ளது. அங்குள்ள தீர்த்தத்தை ஸ்பரிசித்த மாத்திரத்தில் ஸகல பாபங்களும் போய்விடும். மிகப் புண்ணியமான அந்த ஸ்தலம் ஸகல காமங்களையும் கொடுக்கவல்லது. அங்கே ஒரு நாள் வஸித்தாலும் ஸம்ஸார துக்கம் நீங்கும். தேவர், ஸித்தர், மஹரிஷிகள்—முதலானோர் தம்முடைய தபோபலத்தினுல் செடியாயும், புதராயும், ஸ்தாவரமாயும் அங்கே வஸிக்கிருர்கள். அங்கே விளையாட்டாகச் சிறிய தவறுதல் செய்யும் பெரிய புண்ணியவானும் பெரும் பாவியாவான். அங்குள்ள பிராணிகளும் மஹா ஞானிகளாயிருக்கும். அங்குள்ளோர்க்குப் பசி தாஹம்—முதலிய துன்பமே கிடையாது. அங்குச் செல்லும் நாஸ்திகனும் ஆஸ்திகனுவான். ரங்கநாதன் அவ்விடத்தில் வஸிக்கும் வாஞ்சையை விடவில்லை. இப்படியான அநந்த சய்யை என்னுமிடத்துக்கு விபீஷணன் ரங்கவிமானத்தைக் கொண்டு போனுன்.

---

1. இது திருவெள்ளறை க்ஷேத்திரம்.
2. இதன் விவரத்தைக் கடைசியில் வரும் விமரிசத்தில் காண்க.

**12—ம் அத்.**

ஸுபோத ஸத்தியர்களின், வ்ருத்தாந்தம். இவர்களுடைய வஸ்திரம் கமண்டலு முதலியவை காவேரி ப்ரவாஹத்தில் அடித்துக் கொண்டுபோகப்பட்டன.

நாகதந்தர்—

அந்த தேசத்தில் நடந்த ஆச்சரியங்களைக் கேட்க விரும்புகிறேன், சொல்லும்.

வியாஸர்—

ஸுபோதர் ஸத்தியர் என்பவர்களின் புண்ணியமான கதையைச் சொல்லுகிறேன் :

சக்தியின் புத்திரரான பராசருடைய சிஷ்யர்கள் ஸுபோதர் ஸத்தியர்—என்ற இருவரும் கங்காத்வாரத்தில் தவம் புரிகையில், இந்திராதி தேவர்கள் இடையூறு செய்தனர். அவர்கள் அவ்விடம் விட்டுத் தீர்த்த யாத்திரையாக ஸஞ்சரித்து பகவானுக்கு வாஸஸ்தானமாயுள்ள அநந்த சய்யை என்னுமிடத்துக்குப் போய், காவேரியில் ஸ்நானம் செய்து, காவேரி தீர்த்தத்தைப் பானம் பண்ணித் தவம் கிடந்து ஸித்திபெற்றார்கள். பறவை மிருகம் முதலியவற்றுக்கும் ஞானத்தைப் பிறப்பிக்கும் காவேரியின் தீர்த்தத்தினால் ஞானிகளான ரிஷிகள் ஸித்தி பெறுவதில் ஸந்தேஹ மேது!

ஒரு நாட் காலையில் ரிஷிகள் இருவரும் ஸ்நானானுஷ்டானத்துக்காகக் காவேரிக்குப் போயினர். சிரிப்பு போலப் பெருகும் நுரைகளும், பெரிய பெரிய சுழல்களும், பரிசுத்தமான ஜலமும், மிகுந்த வேகமும் வாய்ந்த காவேரியில் முதல் நாள் மாலையில் ரிஷிகள் வைத்த ஸ்நான வஸ்திரம் கமண்டலு முதலியவை பிரவாஹத்தில் அடித்துக்கொண்டு போகப்பட்டன. அதுகண்ட ரிஷிகள் காவேரி மேல் மேலும் பெருகி உலகத்தையே மூழ்கச் செய்யாமலிருப்பதற்கான காரியத்தைச் செய்யலானார்கள்.

**13—ம் அத்.**

ஸுபோதர் காவேரியைப் பானம் பண்ண ஆரம்பித்தபோது பகவான் தடுத்து, ஸுபோதர் பிரார்த்தித்தபடியே காவேரிக்கு எல்லா மேன்மையும் உண்டாகுமாறு அனுக்ரஹித்தார்.

வியாஸர்—

காவேரீ உலகத்தை அழிக்காமலிருப்பதாக ஸுபோதர் அதன் ஜலம் முழுவதையும் பானம் பண்ணத் தீர்மானித்து ஜலத்தைக் கையில் அள்ளி நாற்புறமும் சுற்றிப்பார்த்தார். உலகம் முழுவதும் கலக்க முற்றது! இந்திரன் பிரம்மா முதலானோர் திகைத்தனர்!

"இந்த நதி ஜனங்களை ரக்ஷிக்கவல்லது. இதனைப் பானம் செய்யவேண்டாம். இதன் தீரத்திலிருப்பது பகவானுடைய சேஷசயனம். இந்த சேஷசயனமே பகவானுக்குப் பிரம்மாண்டமத்தியிலுள்ள ஸ்தானமாகும். ஸம்ஸார தாபத்தினால் தவிப்பவர்களுக்குப் புகலிடமாம் இது ஸ்ரீ எனப்பெயர் பெற்ற லக்ஷ்மி வினோதமாயிருக்கவல்ல ரங்கஸ்தலமாகையால், ஸ்ரீரங்கமெனப்படும். இது காவேரியின் தென்[1] பாகத்திலுள்ளது. மஹரிஷியே! உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும்"—என்று அசரீரிவாக்கு கேட்கப்பட்டது.

"எனக்குப் பிரத்தியக்ஷமாகி உம்முடைய ரூபத்தை நான் ஸேவிக்கும்படி செய்வீராக"—என்று பிரார்த்தித்தார் ஸுபோதர்.

பகவான் தம்முடைய ரூபத்தைக் காட்டினார். ஸுபோதர் அவரைக் கண்ணாற ஸேவித்து, வாயாறத் துதித்து—"உலகிலுள்ள ஸகல புண்ணிய தீர்த்தங்களும் இக்காவேரியில் சேருமாறும், இதில் ஸ்நானபானம் பண்ணுகிறவர்களுக்கு ஸம்ஸார துக்கம் நீங்குமாறும் இங்குச் செய்யும் ஸத்காரியத்துக்கு விசேஷபலன் கிடைக்குமாறும் அனுக்ரஹிக்க வேண்டும்"—என்று ஸுபோதர் வரம் கேட்டார்.

**14—ம் அத்.**

பகவான் ரங்கவிமானத்தின் வரலாற்றை ஸுபோதருக்குச் சொல்லுகிறார்.

பகவான்—

நீர் கேட்டபடியே ஸகல புண்ணிய தீர்த்தங்களும் இந்தக் காவேரியிலிருக்கும். இங்கே செய்யும் ஸத்காரியங்களுக்கு விசேஷ பலன் உண்டு.

---

1. இத்தால் ஸுபோதர் தவம் செய்து நடக்கும் இந்த விருத்தாந்தம் ஸ்ரீரங்கத்தின் வடபுறத்திலுள்ள கொள்ளிடம் என்னும் நதியில் நடந்ததாகத் தெரிகிறது.

ஒப்புயர்வற்ற ஸர்வேசுவரன் நானே. ஸமுத்திரத்தில் சயனித்திருந்து ஸகலருக்கும் நானே ஹிதம் செய்கிறேன். முன்னொருகால் தவம் கிடந்த பிரம்மாவுக்கு நான் பிரத்தியக்ஷமானபோது, அவர் எப்பொழுதும் என் ரூபத்தை ஸேவிக்க விரும்பினர். நான் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கையில் ஆதிசேஷன் மீது சயனித்து—"பிரம்ம தேவரே! உமக்காகவே நான் இவ்வுருவம் எடுத்தேன். நான் இப்படி சயனித்திருக்கும் ஸ்தானத்தை ரங்கம் என்றே உலகத்தில் யாவரும் சொல்லப் போகிறார்கள். இந்த சயனம் எப்பொழுதும் அழியாமலிருக்கும். இதைப் பெற்றுக்கொண்டு என்னைப் பூஜித்து வாரும்."—என்று சொல்லி ரங்கவிமானத்தை ப்ரம்மாவுக்குக் கொடுத்தேன்.

பிரம்மா அதைப் பூஜித்துவிட்டு மனுவுக்குக் கொடுத்தார் மனு அதைத் தன் பிள்ளை இக்ஷ்வாகுவுக்குக் கொடுத்தது முதல், ராமன் வரைக்குமுள்ள இக்ஷ்வாகு குலத்தரசர்களால் அது ஆராதிக்கப்பட்டு வந்தது. தனக்கு ஹிதம் செய்த விபீஷணனுக்கு ராமன் அந்த விமானத்தைக் கொடுத்தார். விபீஷணன் அதை எடுத்துச் சென்று காவேரிக் கரையில் வைத்ததும், நான் இங்கேயே இருக்க விரும்பி விபீஷணனை ஸமாதானப்படுத்தி அனுப்பிவிட்டேன். அது முதல் நான் இவ்விடத்திலேயே இருக்கிறேன். ஸுபோதரே! நீர் போய் என்னை ரங்கவிமானத்தில் தரிசியும்.

**15—ம் அத்.**

*வியாஸர் ஸ்ரீரங்க மாஹாத்மியத்தைப் படிப்பதாலுண்டாகும் பலனைச் சொல்லுகிறார்.*

இந்தக் காவேரி ஸகல பாபங்களையும் போக்கவல்லது. இதை நீர் பானம் செய்ய வேண்டாம். இதில் ஸ்நான பானம் செய்து என்னை ரங்க விமானத்தில் பூஜியும்—என்று ஸுபோதருக்குச் சொல்லி பகவான் மறைந்தார்.

வியாஸர்—

ஆச்சரியமான இச்சரித்திரத்தைக் கேட்பவர்கள் தம்முடைய நிலைமைக்குத் தகுந்த பலனை அடைவார்கள். அவர்களுடைய பாபங்களும் நசிக்கும்.

16—ம் அத்.

*வியாஸர் நாகதந்தருக்கு ஸனத்குமார வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறார்: ஸனத்குமாரருடைய தபஸ்ஸினால் உலகங்கள் தவிப்பதை பிரம்மா முதலானோர் விஷ்ணுவினிடம் தெரிவிக்கப் போயினர்.*

வியாஸர்—

நாகதந்தரே! புஷ்கரிணியில் நடந்த மற்றொரு ஆச்சரியத்தைக் கேளும்:—

ஸனத்குமாரர் புஷ்கரிணிக்குப் போய்க் கடுமையாகத் தவம் செய்தார். இந்திரன் வெகுவாய் இடையூறு செய்தும் மஹரிஷி சிறிதும் சலியாமல் பஞ்சாக்னி மத்தியில் தவம் செய்ததால் உலகங்கள் தவித்தன. ரிஷி விரும்புவதனைத்தையும் கொடுத்து உலகத்தைக் காக்கவேண்டு மென்று இந்திரன் பிரம்மாவை வேண்டிக் கொண்டான். ஸனத்குமாரரின் விருப்பம் யாதென்று பிரம்மா தெரிந்து கொள்ள முடியாமல், அங்கு வந்த சிவபிரானையும் அழைத்துக்கொண்டு திருப்பாற்கடல் போய்,—எல்லோரும் விஷ்ணுவை ஸ்தோத்திரம் செய்தார்கள்.

17—ம் அத்.

*விஷ்ணு பிரத்தியக்ஷமானார்.*

வியாஸர்—

பிரம்மாதிகளின் ஸ்தோத்திரத்தைக் கேட்டு விஷ்ணு பிரத்தியக்ஷமானார். எல்லோரும் விஷ்ணுவை தரிசித்து ஸ்தோத்திரம் செய்தார்கள். தேவர்கள் வந்த காரியத்தை வினவி, ஸனத் குமாரருடைய தபஸ்ஸினால் உலகங்கள் தவிப்பதை பிரம்மாவினிடமிருந்து தெரிந்துகொண்டு விஷ்ணு புன்சிரிப்போடு பேசலானார்.

18—ம் அத்.

*பகவான் உபாத்தியாயராக வேஷம் தரித்து ஸனத்குமாரரிடம் சென்றார்.*

வியாஸர்—

"அந்த ரிஷியின் விருப்பத்தை நான் அறிவேன்; அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன்."—என்று சொல்லி பகவான் பிரம்மாதிகளை அனுப்பிவிட்டு, சங்கு சக்கரம்—முதலான திவ்யாயுதங்களையும், ஆதிசேஷன் கருடன்—முதலான நித்திய ஸூரிகளையும் தமக்

குச் சிஷ்யராக்கித் தாமும் உபாத்தியாய ரூபம் தரித்து, ஸனத்குமாரர் இருக்குமிடத்துக்குப் புறப்பட்டார். வேதங்களும் ஸகல சாஸ்திரங்களும் சிஷ்ய ரூபமெடுத்து உபாத்தியாயரைப் பின்பற்றின. ரிஷிகளும் தேவர்களும் இவ்வாச்சரியத்தைக் கண்டு பின்தொடர்ந்தார்கள். பாதம் பாதமாகவும், ஸூக்தம் ஸூக்தமாகவும், உச்ச நீச ஸ்வரங்களோடும் உபாத்தியாயர் சொல்லுகிறபடியே எல்லோரும் ஸாம கானம் செய்துகொண்டு ஸனத்குமாரரிடம் போயினர்; இவர்கள் யாரென்று ஸனத்குமாரர் ஆலோசிக்கலானார்.

## 19—ம் அத்.

ஸனத்குமாரர் உபாத்தியாயரை இன்னாரென்று தெரிந்து கொள்கிறார்.

உபாத்தியாயர்—

மஹர்ஷியே! நீர் யார்? எதற்காகத் தவம் செய்கிறீர்? இந்த தவத்துக்குப் பலன் யாது?

ஸனத்குமாரர்—

நான் ஸனத்குமாரன். பகவானை ஆராதிக்க வேண்டிய இடம் இதுவாகையால தவம் செய்கிறேன். அவனை அடைவதே என் தவத்துக்குப் பலன். உம்முடைய தரிசனத்தினாலேயே என் பாவம் தொலைந்தது. நீர் யார்? எங்கிருந்து, எதற்காக வந்தீர்?—என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

உபாத்தியாயர்—

நான் உபாத்தியாயர். உமக்கு மேன்மை கிடைப்பது தவிர எனக்கு வேறு பலன் கிடையாது.

ஸனத்குமாரர்—

நீர் விஷ்ணுவா? இந்திரனா? பரமசிவனா? இன்பமாய் வேத கானம் செய்யும் இவர்கள் யார்?

உபாத்தியாயர்—

நான் இந்திரனுமல்ல; சிவனுமல்ல. உலகத்தின் கஷ்டத்தைப் போக்கவல்ல நான் சிடீரென்று இங்கு வந்தேன். ஸாமகர்களான இவர்கள் என்னுடைய சிஷ்யர்கள். நித்தியனாயுள்ள நான் எல்லோருக்கும் உபாத்தியாயர். மஹரிஷியே! நீர் வேதம் வல்லவராகிறீர்; என்னுடைய கேள்விகளுக்கு உத்தரமளிப்பீராக:—

1. எல்லா வர்ணத்தார்களும் செய்யவேண்டியதென்ன?
2. எப்பொழுதும் எல்லோரும் எதைச் சொல்ல வேண்டும்?

3. எல்லா ஜந்துக்களுக்கும் எது கண்?
4. எப்பொழுதும் ஒன்றாயும் பலவாயுமுள்ளது எது?
5. ஆதாரமில்லாதிருப்பது யாது?
6. பெரிதாயும் சிறிதாயுமுள்ளது எது?
7. ஸத் அஸத்— என்பவை யாவை?
8. அவற்றைவிட வேறாயிருப்பது எது?
9. பிறவாததும் பல பிறவி யுள்ளதும் எது?
10. சராசரமான இந்த ஜகத்து யாரால் உண்டாயிற்று?

ஸனத்குமாரர் —

நீரே ஸ்ருஷ்டிகர்த்தாவான நாராயணனாகிறீர். பிராணிகளை அனுக்ரஹிப்பதற்காக நீர் இங்கு அவதரித்திருக்கிறீர். உம்முடைய கேள்விகளுக்கு மஹாக்ஞானிகளாலும் பதில் சொல்லமுடியாது. அவையனைத்துக்கும் நீரே பதில் சொல்லும்.

உபாத்தியாயர் —

உம்முடைய தபஸ்ஸுக்குப் பலன் கொடுக்குமாறு தேவர்கள் வேண்டியவாறே நான் இங்கு வந்தேன். நானே என் கேள்விகளுக்கு பதில் சொல்லிவிடுகிறேன்.

**20—ம் அத்.**

உபாத்தியாயர் ஸனத்குமாரருக்குத் தத்துவங்களை விளக்கிக் காட்டுகிறார்.

உபாத்தியாயர் —

1. எல்லா வர்ணத்தார்களும் எப்பொழுதும் செய்ய வேண்டியது அவரவர்களுக்கு ஏற்பட்ட தர்மம்.
2. எப்பொழுதும் எல்லோரும் ஸத்தியமே சொல்லவேண்டும்.
3. பகவானுடைய திவ்ய சக்தியினால் ஆவேசிக்கப்பட்ட ஸூரியனே எல்லோருக்கும் கண்.
4. எப்பொழுதும் ஒன்றாயிருக்கும் பிரகிருதியே காரியரூபமாய் அநேகமாயுள்ளது.
5. ஆதாரமில்லாதிருப்பது பிரம்மம்.
6. அதுவே பெரிதாயும் சிறிதாயுமுள்ளது.
7. அழிவில்லாதிருப்பது ஸத்; அழிவதே அஸத்.
8. இவற்றில் வேறுபட்டிருப்பது பிரம்மம்.
9. பிரம்மமே பிறவாமலும் பல பிறவியோடு முள்ளது.
10. விதை போன்ற ஈசுவரனாலேயே இந்த ஜகத்து உண்டாயிற்று.

ஸனத்குமாரர்—

1. எது தர்மம்?
2. எது ஸத்யம்?
3. விஷ்ணுவுக்கு எல்லா வஸ்துக்களிலும் சக்தியினால் ஆவேசம் எப்படி?
4. ஒரே வஸ்து எப்படி அனேகமாயிருக்கும்?
5. பிரம்மம் எப்படி ஆதாரமில்லாமலிருக்கும்?
6. ஒரே வஸ்து பெரிதாயும் சிறிதாயுமிருப்பதெப்படி?
7. *
8. ஸத், அஸத்—இவ்விரண்டையும் விட பிரம்மம் வேறு என்று எப்படிச் சொன்னீர்?
9. ஒரே வஸ்துவைப் பிறவியில்லாததாயும் பிறவியுள்ளதாயும் எப்படிச் சொல்லுவது?
10. *

இப்படி எல்லாம் ஸந்தேஹமாயிருப்பதால் ஸந்தேஹத்தைத் தீர்ப்பீராக.

உபாத்தியாயர்—

இதில் ஸந்தேஹத்துக்கு இடமேயில்லை. ஆனாலும், தெளிவாய்ச் சொல்லுகிறேன்; கேளும்.

1. எல்லாப் பிராணிகளுக்கும் வேதமே கதியாகையால், வேத விஹிதங்களாயும் பகவானையே உத்தேசித்து செய்யப்படுபவைகளாயுமுள்ள யாகம் ஹோமம்—முதலான கர்மங்களே தர்மம்.

2. அஹிம்ஸையாயுள்ள வார்த்தைதான் ஸத்தியம்.

3. விஷ்ணுசக்தி ஆவேசித்திருப்பதால்தான் பிரபஞ்சம் நடக்கிறது. ஆத்மா இல்லாததால் பிணம் ஒரு காரியமும் செய்ய முடியாதன்றோ! பிரபஞ்சத்தின் காரியம் முழுவதும் பகவானுக்கு அதீனமாயுள்ளது. அவன் ஆவேசித்தால்தான் அக்னி, வாயு, ஸூரியன் முதலியவை யாவும் காரியம் செய்யும். பகவான் ஸகல லோகங்களையும் தன் வசப்படுத்தி, அவைகளை ஆட்டி வைத்துக்கொண்டு பரமபதத்தில் ஸுகமாயிருக்கிறான். நீர் காணும் ஒவ்வொரு வஸ்துவும் விஷ்ணு சக்தியின் விலாஸமென்று தெரிந்து கொள்ளும்.

---

*ஏழாவது கேள்விக்கு உபாத்தியாயர் கொடுத்த பதிலில் ஸனத்குமாரருக்கு ஸந்தேஹமில்லைபோலும்! ஆகவே, அவர் 7வது விஷயத்தைப் பற்றி யாதும் கேட்கவில்லை. இப்படியே 10வது விஷயத்திலும் நீர் மானிக்கவேண்டும்.

4. ஒரே வஸ்து பலவாயிருப்பதில் யாதொரு விரோதமு மில்லை. காரிய காரண பாவத்தினால் ஒன்று பலவாயிருக்கும். வெட்டின மரத்திலிருந்து அநேகம் மரங்கள் உண்டாகின்றன. ஒரு வஸ்துவுக்கே அங்கோபாங்கங்கள் அனேகம் உண்டு. உருவத்தின் பேதத்தினால் ஒரு வஸ்துவே அனேகமாயிருக்கும். வஸ்து பலவானா லும் அவற்றின் ஜாதி ஒன்று. எல்லாவற்றுக்கும் காரணமான மூலப்ரகிருதி ஒன்றாகையால், அதுவே காரண ரூபத்தில் ஒன்றாயும் காரிய ரூபத்தில் பலவாயுமுள்ளது.

5. பரப்ரம்மமே எல்லாவற்றுக்கும் ஆதாரமாகையால், அதற் கொரு ஆதாரம் கிடையாது. பரப்ரம்மத்துக் கொரு ஆதாரம் இல் லாததாலும், இருக்க முடியாததாலும், அதுவே எல்லாவற்றுக்கும் ஆதாரமாயிருப்பதாலும், சேதனா சேதனங்களான ஸகல பதார்த்தங் களும் பிரம்மத்தைவிட அல்பங்களாய் பிரம்மத்துக்கு ஆதாரமா யிருக்க முடியாததாலும் பிரம்மமே எல்லாவற்றுக்கும் ஆதாரம்.

6. ஒரே வஸ்து ஸங்கோச விகாஸங்களால் பெரிதாயும் சிறி தாயு மிருக்குமாகையால் பிரம்மம் பெரிதாயும் சிறிதாயுமிருப்பதில் யாதொரு விரோதமுமில்லை.

7. *

8. ஸத் அழிவற்றது. அஸத் அழிவுள்ளது. பிரம்மம் அழிவற்றதாகையால் அஸத்தை விட வேறு. தோஷமில்லாத தாயும், ஒப்பில்லாததாயும், அளவிட முடியாத பெருமையுள்ளதாயும் கல்யாண குணங்களும் ஆனுகூலியங்களும் நிறைந்ததாயு மிருப்ப தால் பிரம்மம் அஸத்தையும்விட வேறுபட்டிருக்கிறது.[1]

9. பிரம்மா முதலானவர்களின் சரீரத்திலுள்ள ஜீவாத்மா ஜன்ம கர்மங்களுக்கு வசமாயிருக்கும். பகவான் எவ்வளவு ஜன்ம மெடுத்தாலும் ஜன்ம கர்மங்களுக்கு வச்யனல்ல. கர்மவச்யனாயிரா மலும் ஸர்வ சக்தனாயுமுள்ள பகவான் பல பிறவி யெடுத்தாலும் பிறவி யில்லாதவனே.

10. *

1. சித், அசித், ஈசுவரன்—என்று தத்துவம் மூன்று எனக் கொள்ளும்விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமே இந்த கிரந்தத்தின் கருத்து என்று தீர்மானிக்கலாம்.

21—ம் அத்.

ஞானமே சிறந்ததென்று உபாத்தியாயர் ஸனத்குமாரருக்குச் சொல்லுகிறார்.

ஸனத்குமாரர்—

உபாத்தியாயரே! வேதாந்த விஷயம் இப்பொழுது உம்மால் ஸந்தேஹமறச் சொல்லப்பட்டது. ஆனாலும், ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே அடிக்கடி பிறப்பதும் இறப்பதுமாய், இஷ்டம் நிறைவேறாததாலும் அனிஷ்டம் சூழ்வதாலும், கிழத்தனத்தினாலும் மரணத்தினாலும், பிள்ளை, பெண்டிர், நண்பர், பொருள், வீடு—முதலியவை கிடைக்காததாலும் தவித்துக்கொண்டிருக்கும் எனக்கு என்ன கதி? இந்த ஸம்ஸாரத்தை நான் எப்படித் தாண்டுவேன்?

உபாத்தியாயர்—

மனக் கண்ணில் படிந்துள்ள அக்ஞானம் ஞானாஞ்சனத்தினால் தான் நீங்கும். ஞானமொன்றுதான் ஸர்வ சிரேஷ்டமானது. சுத்தி, ஸுகம்—முதலிய யாவும் ஞானத்தினாலேயே உண்டாகும். ஆகை யால், மஹரிஷியே! நீர் ஞானமார்கத்தையே பின்பற்றுவீராக. அதனால் இந்த ஸம்ஸாரத்தை நீர் தாண்டிவிடுவீர். ஆத்மாவைவிட வேறாயுள்ள சரீரத்தில் ஆத்மபுத்தியை வைப்பதுதான் ஸம்ஸார மாகிற விருக்ஷத்துக்கு வேராகும்.

22—ம் அத்.

உபாத்தியாயர் ஸனத்குமாரருக்கு ஞானயோகத்தை அங்கமாக வுடைய பக்தியோகானுஷ்டானத்தை உபதேசிக்கிறார்.

ஸனத்குமாரர்—

ஸ்வாமி! நான் உம்மால் கிருதார்த்தனானேன். அத்யாத்ம விஷயமான பேச்சுக்களையே நான் இன்னும் கேட்க விரும்புகிறேன்; சொல்லுவீராக.

உபாத்தியாயர்—

மஹரிஷியே! இதோ சொல்லுகிறேன். ஸாவதானமாய்க் கேளும்.

எப்பொழுதும் யோகானுஷ்டானம் வேண்டும். யோகத்தினால் தான ஆத்மாவை அனுபவிக்க முடியும். ஸம்ஸாரமாகிற விஷ

விருக்ஷத்துக்கு யோகமே சிறந்த ஔஷதம். ஸத்கதியை அடைய விரும்பும் நமக்கு யோக மில்லாவிடில் சுத்தியில்லை. ஸ்வபாவத்தில் ஸாத்விகமாயே யிருந்து சாஸ்திரங்களில் ஆஸ்திக்ய புத்தியையும் செலுத்த வேண்டும். விதிக்கப்பட்ட கர்மங்களை ஒருகாலும் விடக் கூடாது. ஸ்வஸ்திகம் முதலான ஆஸனங்களில் ஏதேனுமொன்றை அப்யஸித்துக் கொள்ள வேண்டும். கொஞ்சமாக ஆஹாரத்தை உட்கொண்டு, தனிமையான இடத்திலிருந்து, சோம்பலில்லாமல், சரீரத்தையும் இந்திரியங்களையும் விஷயங்களிலிருந்து திருப்பி சாசுவதமான ஆத்மாவினிடத்திலேயே மனதை நிலை நிறுத்துவீராக. பரிசுத்தமாயும் சுபத்துக்கு ஆச்ரயமாயுமுள்ள ஆத்மாவினிடத்திலேயே அஹங்கார மில்லாமல் மனதை நிலை நிறுத்தி ஸுகித்திருப்பீராக.

23—ம் அத்.

*உபாத்தியாயர் ஸனத்குமாரருக்கு பரப்ரம்மத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லி மறைந்தார்.*

ஸனத்குமாரர்—

ஸ்வாமி! பரப்ரம்ம விஷயமாகவே இன்னும் சொல்லுவீராக. பிரம்மத்தை எப்படி அறிவது, எப்படி அடைவது—என்பதை விஸ்தாரமாகச் சொல்லும்.

உபாத்தியாயர்—

பரதத்துவத்தை அறிந்தவர்களுக்குக்கூட இந்த ஸந்தேஹம் உண்டாகும். ஆயினும், உம்மிடத்திலுள்ள பிரீதியினால் உமக்குச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்.

பிரம்மத்தை வேதத்தினால் தான் தெரிந்துகொள்ள வேண்டும் கல்யாண குணங்களும் ஆனந்தமும் நிறைந்து ஜகத்துக்கு ஆதாரமாயுமுள்ள பிரம்மம் ஸகல பிராணிகளின் அந்தராத்மாவிலுமுள்ளது. அவரவர்களின் கர்மத்தினாலும் பரிசுத்தமான மனதினாலுமே அந்த பிரம்மத்தை அடைய வேண்டும். அது பரமபதத்திலுள்ளது; நித்திய ஸூரிகளுக்கன்றி மற்றொருவருக்கும் தென்படாது—என்று சொல்லி உபாத்தியாயர் தம்முடைய சிஷ்யர்களோடு மறைந்தார்.

ஸனத்குமாரர் உபாத்தியாயரையே நினைத்து நினைத்து வருந்தி புஷ்கரிணியிலேயே வஸித்திருந்தார்.

**24—ம் அத்.**

உபாத்தியாயரைக் காணுமல் வருந்தும் ஸனத்குமாரரை பிரம்மா ஸமாதானப் படுத்துகிறார்.

வியாஸர்—

யத்ருச்சையாக வந்த பிரம்மாவை உபசரித்துப் பின் வருமாறு ஸனத்குமாரர் கேட்கலானார்:—

ஸனத்குமாரர்—

அத்யாத்ம விஷயமான ஞானத்தையும் தர்மத்தையும் சொல்லி விட்டு அந்த உபாத்தியாயர் திடீரென்று மறைந்தார். அவர் யார் என்று எனக்குச் சொல்லுவீராக.

பிரம்மா—

மஹரிஷியே! நீர் கிருதார்த்தரானீர். ரங்க விமானத்தில் அனந்தசயனத்தில் சயனித்திருக்கும் ஸ்ரீமந் நாராயணனே அவர். அவரோடு வந்த சிஷ்யர்கள் அவருடைய ஆயுதங்கள். அவருடைய விபூதியை ஞானதிருஷ்டி வாய்ந்தவர்கள்கூடக் காணமுடியாது. ஆயினும், நீர் மட்டும் உம்முடைய ஸௌபாக்கியத்தினுல் அவரை தரிசித்தீர். உம்முடைய மனதை நிலை நிறுத்தி இந்தப் புஷ்கரிணிக் கரையிலேயே வஸித்திரும். இந்த ரங்க ஸ்தலத்திலேயே நீர் அவரை எப்பொழுதும் தரிசிப்பீர். இந்தப் புஷ்கரிணியிலேயே விஷ்ணு எப்பொழுதும் வாஸம் செய்கிறார். இந்த தீர்த்தத்தின் மாஹாத்மியத்தையும் சொல்லுகிறேன்; கேளும்.

**25—ம் அத்.**

பிரம்மா சந்திரபுஷ்கரிணியை ஞானதீர்த்தமென்றும் ஞானமே சிரேஷ்டமென்றும் சொல்லுகிறார்.

பிரம்மா—

புஷ்கரிணியை ஸ்மரித்த மாத்திரத்தில் பாவம் தொலையும். தீர்த்தங்களில் ஞானதீர்த்தமே சிரேஷ்டம்.

ஞானத்தினுல்தான் சுத்தி ஏற்படும். ஞானுக்னி ஸகல பாபங்களையும் தஹிக்கும். பகவத் ஞானத்தினுல் யாவருக்கும் தவறுமல் முத்தி உண்டாகும். பரம் அவரம்—இவற்றின் ஞானத்தைப் பெற்றவர்களே மஹான்கள். ஜாதியில் தாழ்ந்தவனுயினும் ஞானியே மேலானவன். தேவத்வம் முதலான மேன்மைகூட ஞானத்துக்கு ஈடாகாது.

ஆத்மாவுக்கு க்ஞானமே ஸ்வரூபம். ஸ்வயம் பவித்திரமாய், நிர்மலமாய், ஞானமயமாயுள்ள ஆத்மாவினுடைய ஸ்வரூபம் பிரகிருதி ஸம்பந்தத்தினால் மறைபடுகிறது; அசுபத்தினுடைய ஸம்பந்தத்தினால் அசுபமாகிறது. ஆத்மா ஸ்வயம் ஸுகியாயிருக்கும். ஜடமாய் நசிப்பதாய் முக்குணம் பொருந்தியதாயுள்ள பிரகிருதி ஸகல அசுபங்களுக்கும் இருப்பிடம்.

அவரவர்களுடைய கருமங்கள் தேசகாலங்களுக்குத் தக்கவாறு அவரவர்களுக்குப் பலனை விளைக்கின்றன. தேவர்கள் முதலான யாவரும் கர்ம பலனை அவசியம் அனுபவிக்க வேண்டும். பரிசுத்தமாயுள்ள ஸகல ஆத்மாக்களுக்கும் அசுபமாயுள்ள பிரகிருதியினுடைய ஸம்பந்தம் கருமத்தினாலுண்டாகிறது. கர்ம பரம்பரை உதயமாவதும் அஸ்தமிப்பதுமா யிருக்குமேயன்றி அழியாது. பீஜாங்குரங்கள் போலக் கருமங்கள் ஒன்றுக் கொன்று காரியமாயும் காரணமாயுமிருக்கும்.

ஆத்மாவினுடைய கருமத்துக்கு அநாதியாயுள்ள வாஸனை தான் காரணம். ஆத்மா பல ஜன்மங்களை யெடுத்து அவற்றில் செய்த கருமங்களுக்குத் தக்கவாறு ஸுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டேயிருக்கும். ஆத்மாவுக்கு ப்ரகிருதி ஸம்பந்தத்தினால் விருத்தியாகும் கருமம் க்ஞானக் கத்தியாலன்றி சேதிக்க வொண்ணாது.

க்ஞானமுண்டாவதற்காகவே யக்ஞம், தானம், விரதம்—முதலியவை ஏற்பட்டுள்ளன. இதைச்செய்யலாம், இதைச் செய்யக்கூடாதென்ற விவேகமும் சாஸ்திரத்திலேயே காட்டப்பட்டுள்ளது. சாஸ்திரம் விதிக்கும் யக்ஞாதி கருமங்கள் பகவானை உத்தேசித்துச் செய்யப்பட்டால் நல்லவையாயிருக்கும்; இல்லையேல் விபரீதமாகும்.

பகவத் க்ஞானமே சிறந்தது. அதுவே ஸம்ஸார துக்கத்தைப் போக்கவல்லது. பகவத் க்ஞானம்தவிர மற்றை க்ஞானங்கள் அக்ஞானங்களே. க்ஞானம் அகவிருளையும் புறவிருளையும் போக்க வல்

லது. க்ஞானமுண்டாகும் மார்கத்தை சாஸ்திரம் சொல்லுகிறது. யக்ஞாதிகளும் புண்ய க்ஷேத்திர புண்ய தீர்த்தவாஸமும் பாபத்தைப் போக்கி க்ஞானத்தை யுண்டாக்குகின்றன. க்ஞானிக்கு எவ்விதத் துன்பமும் நீங்கும்.

புண்யதீர்த்த ஸம்பந்தம் பகவத் ஞானத்தையுண்டாக்குகிறது. தீர்த்தங்களில் க்ஞானதீர்த்தமே சிறந்தது. க்ஞானத்துக்காகவே பெரியோர்கள் பிரயத்தனம் செய்வார்களாகையால், ஸனத் குமாரரே! நீரும் க்ஞானத்துக்காகவே தபஸ் செய்யும்.

தேவர்களுக்குள் விஷ்ணு மேலானவர்; நதிகளுக்குள் கங்கை மேலானது; தீர்த்தங்களுக்குள் புஷ்கரிணி மேலானது. புஷ்கரிணி தீர்த்தத்தைத் தொட்டாலும் பானம் பண்ணினாலும் அதில் ஸ்நானம் செய்தாலும் யாவரும் பரிசுத்தராவார்கள்.

## 26—ம் அத்

*பிரம்மா புஷ்கரிணியின் மாஹாத்மியத்தையும் அதில் செய்யும் ஸ்நானம் தானம் முதலியவற்றின் பலத்தையும் சொல்லுகிறார்.*

வியாஸர்—

புஷ்கரிணியின் வைபவத்தை மீண்டும் சொல்லுமாறு ஸனத் குமாரர் பிரம்மாவை வேண்டவும் பிரம்மா சொல்லுகிறார்:—

பிரம்மா—

புஷ்கரிணியின் மாஹாத்மியத்தைச் சொல்லுகிறேன். இம் மாஹாத்மியத்தைக் கேட்டோர் ஸகல பாபங்களினின்றும் விடுபடுவார்கள்.

மிகப் புனிதமாய் மங்களகரமாயுள்ள புஷ்கரிணி தீர்த்தமே மற்றைத் தீர்த்தங்களைவிட மேலானது. பகவானிடம் பக்தி கொண்ட புண்ணியவான்கள் இதில் ஸ்நானம் செய்து இதைப் பானம் செய்தே களித்துத் திரிகிறார்கள். புஷ்கரிணியில் ஸ்நானம்

செய்து ஜிதந்தே[1] மந்திரத்தினல் பகவானை ஸ்தோத்திரம் செய்பவன் விஷ்ணு ஸாயுஜ்யத்தை யடைவான். இதில் செய்யும் தானம் அழியாதிருக்கும். இதில் பகவானைத் தியானித்தால் பலன் தப்பாது. இதில் செய்யும் ஸ்வல்ப விரதங்களும் பெரிதாகும். புஷ்கரிணி ஸ்நானம் பிரம்மஹத்தி தோஷத்தையும் போக்கடிக்கும். இங்கு ஒரு நாளிருந்து செய்யும் தபஸ் முதலியவை கல்பகால மளவும் செய்தவற்றுக்கு ஈடாகும். இங்கு வேதத்தில் ஒரு பாதம் அத்தியயனம் செய்தவனும் ஸகல வேதங்களையும் அத்தியயனம் செய்தவனுவான்.

சுக்லபக்ஷ பஞ்சமியில், முதல் நாள் உபவாஸமிருந்து, பத்தினியோடு புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து, பிராம்மணர்களுக்கு மூன்று பாத்திரத்தில் எள்ளும், மூன்று பாத்திரத்தில் நெய்யும், மாகத ப்ரஸ்தம்[2] அளவுள்ள ஸுவர்ணமும்—எள்ளு நெய்—இவற்றுள் ஏதேனுமாவது தானம் செய்தால் ஆயுஷ்மானுயிருப்பான்; அவனுக்கு சீக்கிரத்தில் புத்திரன் பிறப்பான். நிஷ்கம்[3] அளவுள்ள தங்கத்தை தானம் செய்தால் வியாதி நீங்கும். வெள்ளைக் குஷ்டம் பிடித்தவன் தன்னைப்போலத் தங்கத்தால் பிம்பம் செய்து புஷ்கரிணியில் நீராடி வேதாத்தியயனம் செய்த பிராம்மணனுக்கு தானம் செய்ய வேண்டும். ஜன்ம நக்ஷத்திரத்தில் இங்கு ஸ்நானம் செய்பவன் ஸ்வஸ்தனுயிருப்பான். புஷ்கரிணியில் செய்யும் கோதானம் மிகவும் சிறந்தது. பசுவின்மேல் எவ்வளவு ரோமங்கள்

---

1. "ஜிதந்தே"—என்ற பதங்களை ஆரம்பத்திலுள்ள ஸ்தோத்திரம் இது; 112 சுலோகமாய் 5 பாகமாயுள்ளது. முதல் 'ஜிதந்தே' 14 சுலோகங்களுக்கு வியாக்கியானமும் எல்லா சுலோகங்களுக்கும் பதவுரையும் பெரியவாச்சான் பிள்ளையால் எழுதப்பட்டுள்ளன. இது ருக்வேதகிலம்; க்ஷீராப்திநாதனை தரிசிக்கப் போன நாரதபகவானுக்கு சுவேதத்வீபத்தில் தபஸ் செய்யும் ரிஷிகளால் உபதேசிக்கப்பட்டது என்று பெரிய வாச்சான் பிள்ளை.

2. மாகதமானம் களிங்கமானம்—என்று அந்தந்த தேசபேதத்தால் பலவித அளவுகள் உண்டு. இதை வைத்தியக்கிரந்தங்களில் காணலாம். ப்ரஸ்தம் என்றால் படி. மாகதப்ரஸ்த மென்றால் மகத தேசத்துப் படி.

3. நிஷ்கம்—ஒரு வராஹனுக்கு சமமான பண்டைக்கால நாணயம்.

உண்டோ அவ்வளவு நூறு வருஷம் ஸ்வர்கத்திலிருப்பான்; இந்த லோகத்தில் ஸ்ரீமானுயும் விளங்குவான்.

பிறந்த நக்ஷத்திரமும் மாஸமும் வருஷமும் சேரும்போது புஷ்கரிணியில் ஸ்நானம் செய்பவனுக்கு அசுவமேத யாகம் பண்ணின பலனுண்டு. பருவகாலத்தில் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்தவனுடைய பாபம் தொலேயும். ராஜா தன்னுடைய ஜன்ம நக்ஷத்திரத்தில் இங்கு ஸ்நானம் செய்தால் பூமண்டலம் முழுமையும் ஜயிப்பான். புஷ்கரிணி ஸ்நானமும் பகவத்தியானமுமே பாபிகளுக்கு கதி.

புஷ்கரன், புஷ்கராக்ஷன், குமுதன், காலன், ஸுப்ரதீகன்[1] என்னும் ஐந்து தீர்த்தாதிபதிகளே நாலு திக்குகளிலும் நடுவிலுமாக பிரம்மா நியமித்துள்ளார். முதலில் அவர்களுக்குத் திருப்தி செய்து பிறகு ஸ்நானம் செய்யவேண்டும்.

சந்திரன் பருவகாலந்தோறும் இதில் ஸ்நானம் செய்ததால் இது சந்திரபுஷ்கரிணி யாயிற்று.

ஸனத்குமாரரே! நீரும் இதில் ஸ்நானம் செய்து நல்ல ஸ்தானத்தை அடைவீராக; தபஸ்செய்து உலகத்தை ஹிம்ஸிக்க வேண்டாம். இந்தக் காவேரி தீரத்தில் வஸித்ததால் க்ருதார்த்தரானீர். இனி சாந்தராயிருப்பீராக.

வியாஸர்—

பிரம்மா இவ்வாறு சொல்லிச் சென்றுர். தேவர் முதலானேர் பிரம்மாவை ஸ்தோத்திரம் செய்தார்கள். ஸனத்குமாரர் புஷ்கரிணியிலேயே தினந்தோறும் மூன்று ஸந்தியிலும் ஸ்நானம் செய்து ஸுகித்திருந்தார்.

புண்ணியமான இந்தச் சரித்திரத்தைச் சொல்லுகிறவன் பாபங்களினின்றும் விடுபட்டு ஸநாதனலோகம் போவான். சிராத்த காலத்தில் இந்த உபாக்கியானத்தைச் சொன்னல் அந்த சிராத்தம் பித்ருக்களுக்கு அக்ஷயமாயிருக்கும். இந்தக் கதையைக் கேட்கும் க்ஷத்திரியர் முதலானேர் தமக்குரித்தான பலன்களேப் பெறுவார்கள்.

---

1. இவர்களில் யார் எந்த திக்கில் நியமிக்கப்பட்டார் என்று இங்கு தெரியவில்லே.

27—ம் அத்.

*மிகவும் க்ரூரனுயிருந்த சூத்ரனெருவன் பிராம்மணனிட மிருந்து புஷ்கரிணியையும் ரங்கவிமானத்தையும் பற்றிக் கேள்வியுற்றுப் பாபச் செயல்களை ஒழித்தான்.*

வியாஸர்—

திரவியத்தில் ஆசை கொண்ட ஒரு சூத்ரன் யாவரையும் ஹிம்ஸித்துக்கொண்டு பாபியாயிருந்தான். அவனுல் பிராம்மணர் முதலான யாவரும் அழிக்கப்பட்டனர்; பசுக்கள் அபஹரிக்கப் பட்டன. அவன் வழிப்போக்கர்களையும் ஹிம்ஸிப்பதற்காக வழியை மறித்து நிற்கையில் ஒரு பிராம்மணன் அகப்பட்டான். மிக்க ஏழையாயிருந்த பிராம்மணனிடம் திரவியம் யாதுமில்லாத தால் சூத்ரன் அவனைக் கொல்ல யத்தனித்தான்.

பிராம்மணன்—

நான் பரம ஏழை; என்னைக்கொன்று உனக்கு என்ன கிடைக் கும்?

சூத்ரன்—

நீ இவ்வளவு பருத்திருந்தும் வெறும் ஆள்தானு! நீ எங்கே யிருந்து வருகிறுய்?

பிராம்மணன்—

புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்துகொண்டு பூப்பிர தக்ஷிணமாக வருகையில் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து, ரங்க விமானத்தில் சயனித்திருக்கும் பகவானையும் தரிசித்து விட்டு ஊருக்குப் போகிறேன்.

மிகவும் பரிசுத்தனுயிருந்த பிராம்மணனேடு பேசியதும் சூத்ரனுக்கு நல்ல புத்தியுண்டாயிற்று; பரஹிம்ஸை செய்யும் எண்ணமொழிந்தது. ரங்கவிமானமும் புஷ்கரிணியும் அரை யோஜனை தூரத்திலிருப்பதாக சூத்ரன் பிராம்மணனிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொண்டு பிராம்மணனை அனுப்பிவிட்டான்.

28—ம் அத்.

*ஸ்ரீரங்கத்தில் வந்ததும் புண்ணியவானுன சூத்ரன் சாகும் போது, பூர்வபாபத்துக்காக அவனைப் பிடிக்கவந்த யம தூதர்கள் விஷ்ணுதூதர்களால் அடிக்கப்பட்டனர்.*

மஹானேடு பேசியதால் சூத்ரனுடைய பாபம் நீங்கலாயிற்று. அவன் பாப காரியங்களை விட்டொழித்தான். சில நாள் கழித்து

அவன் பிராம்மணனுடைய வார்த்தைகளை நினைத்துக் கொண்டே காவேரிதீரம் சென்றதும், அவனுடைய பாபம் முழுதும் நசித்து ச்ஞானம் உதயமாயிற்று. அப்பொழுதே அவனுக்கு ஆயுள்ஸாமம் கழிந்ததால் யமதூதர்கள் வந்து அவனைப் பிடித்துக் கொண்டனர்.

புஷ்கரிணியையும் ரங்கவிமானத்தையும் சுற்றி நாற்புறமும் இரண்டு மூன்று கவ்யூதி தூரம் வரைக்குமுள்ள இடத்தை விஷ்ணுபூதேசுவரர்கள் ரக்ஷிக்கிறார்கள். நான்கு திக்குகளிலுமுள்ள கஜானனர் முதலியவர்களால் பகவானுடைய ஸேனாபதியான விஷ்வக்ஸேனருடைய ஆக்ஞையின்படியே காவேரி தீரமும் அதிலுள்ள ஸாதுக்களும் ரக்ஷிக்கப்படுகின்றனர் தம்முடைய தேசத்தில் யமதூதர்கள் ஒருவனைப் பிடித்து வருத்துவது கண்ட விஷ்ணுபூதேசுவரர்கள் அவர்களை அடித்துத் தடுத்தார்கள். இருவருக்கும் நெடு நேரம் யுத்தம் நடந்தது. மிகவும் அடிபட்டு வருந்திய யமதூதர்கள் "நீங்கள் யார்?" என்று பூதேசுவரர்களைக் கேட்டனர்.

விஷ்ணு பூதேசுவரர்கள்—

இந்த தேசத்தை ரக்ஷிப்பதற்காக நாங்கள் பகவானால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட புண்ணியவான்கள். இந்த தேசத்தில் யாரும் பிரவேசிக்க முடியாது. எங்களுடைய அபிப்பிராய மறியாமல் இங்கு வாயு வீசாது. எங்களுடைய பிரபாவம் சொல்ல முடியாததாயிருக்கும். புஷ்பம் மலர்ந்து இலை அசையுமத்தனைக்குமேல் வாயு கடுமையாக வீசான். புஷ்பம் வாடும்படியாகவும் தாபமுண்டாகும்படியாகவும் சூரியன் பிரகாசியான். இங்கு சூரியனால் பகல் சந்திரனோடுள்ளதாயிருக்கும். சந்திரன் மிகுந்த குளிரைக் கொடாதிருப்பதால் இரவு சூரியனை உடையதாயிருக்கும். இங்கு பக்ஷி, மிருகம், மனுஷ்யர் முதலியவர்களுக்கு வியாதி முதலான துன்பமில்லை. விருக்ஷங்கள் யாது தீங்குமின்றி எல்லா ருதுக்களிலும் பலத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும். புத்திமான்களான மஹாத்மாக்கள் இங்கு பக்ஷிகளாக வஸிக்கிறார்கள். துஷ்ட மிருகங்கள்கூட இந்த தேசத்தில் பிரவேசித்தவுடன் சாந்தமாய் விடும். ரங்கநாதனுடைய தேஜஸ்ஸினால் இந்த தேசம் விளங்

குகிறது. இங்கு ரங்கநாதன் எழுந்தருளியிருப்பதை நீங்கள் கேட்டதுண்டா?

இந்த மனுஷ்யனை நீங்கள் இங்கு பிடிப்பது நியாயமல்ல. நீங்கள் யார்? இந்த தேசம் உங்களைப் போன்ற க்ரூரர்கள் வரத் தக்கதல்ல. ஸாதுக்களுக்கும் யோகிகளுக்குமே தகுதியாயுள்ள இந்த தேசத்தையும் பரிசுத்தமான காவேரியையும் பார்த்து பகவான் இங்கு சயனித்திருக்கிறார். இங்கு பக்தர்கள் வஸிக்கிறார்கள். தேவர், லோகபாலர்—முதலானோரும் இங்கு பலாத்காரமாகப் பிரவேசிக்கமுடியாது. இந்தப் புருஷனுக்கு நீங்கள் இங்கு செய்யும் தீங்கு எங்களுக்குச் செய்ததாகும். எங்களை அவமதித்து யாரும் ஜீவித்திருக்க முடியாது. நீங்கள் யார்? சொல்லுங்கள்.

கிங்கரர்கள் சொல்லலானார்கள்.

29—ம் அத்.

யம கிங்கரர்கள் யமனுடைய பராக்கிரமத்தைச் சொல்லுகிறார்கள்.

யம கிங்கரர்கள் —

நாங்கள் யமதூதர்கள். தர்மராஜனும் லோகபாலனுமாயுள்ள யமனைத்தவிர வேறு யாரும் எங்களை ஏவமுடியாது. யமன் பரம தார்மிகனாயிருப்பதை யறிந்தே எல்லோரையும் அழிக்கும் தொழிலில் அவனை பகவான் வைத்திருக்கிறார். ஸகல ஜீவராசிகளும் யமனுக்கு வசப்பட்டவைகளே. எல்லாம் யமன் குறித்த காலத்திலகப்பட்டுள்ளன. காலம் யாவற்றையும் அழிக்கும். காலத்துக்கு அழிவேயில்லை. காலசக்ரத்தைச் சுழற்றும் பகவானே காலஸ்வரூபி. இந்தப் புருஷனைக் காலம் அழிக்குந்தருவாயில் நாங்கள் கொண்டு போக வந்தோம். நாங்கள் பாபிகளுக்கு க்ரூரர்களாயும் ஸாதுக்களுக்கு ப்ரியர்களாயுமிருப்பவர். இவன் செய்த புண்ணியம் ஒன்றுமே யில்லை. இந்த அதமன் பிராம்மணர்களையும் பசுக்களையும் ஹிம்ஸித்தவன். யஜமானனுடைய ஆக்ஞையின்பேரில் இவனைப் பிடிக்க வந்த நாங்கள் உங்களால் மிகவும் துன்புறுத்தப் பட்

டோம். இது மிகவும் புண்ணிய பூமி; இவன் மஹாபாபி. இவனை அழைத்துச் செல்வதைத் தடுக்க வேண்டா.

30—ம் அத்

*விஷ்ணுபூதேசுவரர்கள் யம கிங்கரர்களிடமிருந்து சூத்ரனை ரக்ஷித்தனர்.*

விஷ்ணு பூதேசுவரர்கள்—

எல்லாம் காலத்தின் வசப்பட்டதென்பதும் யமனே உலகத்தை ஆள்கிறான் என்பதும் சரிதான். ஆனால், எல்லோருக்கும் இப்படியே கதியென்பது சரியல்ல. கர்மபலனை அனுபவிக்கிறவர்களுக்கு மட்டுமே இந்த கதி. பகவானை ஆச்ரயிக்கும் மஹான்களுடைய கதி மிகவும் சிறந்ததாயிருக்கும். கிருதக்னர்களானாலும் பாபிகளானாலும் இங்கு ப்ரவேசித்தவுடன் பரிசுத்தராவார். தங்கத்திலுள்ள அழுக்கை அக்னி ஸ்பர்சத்தினாலேயே போக்குவது போல பகவானுடைய ஸான்னித்தியத்தினால் இந்த தேசமே பாபத்தைத் தொலைக்கும். இங்கு வஸிக்கும் மஹான்களில் ஒருவருக்கும் ஜன்மாதிகளில் பிரவேசம் உண்டாகாது. ஸர்வ ஸ்ரீலபனாய் கால சக்ரத்தை ப்ரயோகிப்பவனுமாயுள்ள பகவானுக்கு இந்த நதீதீரம் மிகவும் பிரியமானது. இங்கு யமனுக்கு அதிகாரமில்லை. காலம் அதிகாரம் செய்யுமிடத்தில்தான் யமனுக்கும் அதிகாரம். இந்த தேசத்தைக் காலம் அழிக்க முடியாது. பிரபஞ்சம் முழுதும் கலங்கினாலும் இந்த தேசம் கலங்காது. இந்த சூத்ரன் பாபியானாலும் புண்ய தேசத்துக்கு வந்து புண்ய தீர்த்தத்தின் ஸம்பந்தம் பெற்றதால் விரைவில் சுத்தனாவான். ஆகையால், இவனை நீங்கள் அழைத்துச் செல்ல முடியாது. உங்களைவிட நாங்கள் பலிஷ்டர்கள். யமதூதர்களே! நீங்கள் இவ்விடம் விட்டுப் போங்கள்.

31—ம் அத்.

*யமதூதர்கள் யமனிடம் போய் முறையிட்டார்கள்.*

யமதூதர்கள் சூத்ரனை விட்டு ஓடினர். சூத்ரன் விரைவில் பரிசுத்தனானான். அவனை பயப்படவேண்டாமென்று ஸித்தர்கள் ஸமாதானப்படுத்தினார்கள். சூத்ரன் புஷ்கரணியில் நமஸ்கரித்து ரிஷிகளுக்கு அபிவாதனம் செய்து, அவர்களோடு ரங்கநாதனை தரிசிக்கப் போகையில் ஸேனாபதியால் மிகவும் கௌரவிக்கப்பட்டான்

யமதூதர்கள் யமனிடம் போய் முறையிட்டார்கள் :— "எங்கும் தடையின்றிச் செல்லும் உம்முடைய ஆக்ஞை வீணாயிற்று. விஷ்ணு பூதேசுவரர்களால் நாங்கள் அவமதிக்கப்பட்டோம். பாபியான ஒரு சூத்ரனைப் பிடிக்கையில் பூதேசுவரர்கள் எங்களை அடித்தனர் சூத்ரனை அங்கேயே விட்டு வந்தோம்."

அனைத்தையும் அழித்து ஆக்ஞாபிக்கும் நம் கட்டளையை இவ்வாறு செய்தது யார்?—என்று யமன் யோசித்து யாவற்றையுமறிந்து கொண்டான். உடனே அவனுடைய தலை வணங்கிற்று; கைகள் குவிந்தன; ரங்க விமானத்தை தியானித்துக் காவேரி தீரத்திலுள்ள புஷ்கரிணியையும் ஸ்மரித்தான்; அந்த தேசத்தைச் சுற்றிலுமுள்ள மாஹாத்மியத்தை அறிந்தான்; ரங்கநாதனையும் சூத்ரனையும் மனக் கண்ணால் பார்த்தவாறே தூதர்களிடம் சொல்லலானான்:—

"நீங்கள் அயுக்தமே செய்தீர்கள். விஷ்ணு பூதேசுவரர்களை அவமதிக்கக் கூடாது; அவர்களால் அபிமானிக்கப் பட்டவர்களைப் பிடிக்கக் கூடாது. அவர்களிடம் நீங்கள் அணுகவும் அருகரல்லர். ரங்கநாதன் இருக்குமிடத்துக்கு அரை யோஜனை தூரம் வரையில் மஹோதயமான தேசம். அந்த தேசம் ஸகல தீர்த்தங்களுக்கும் ஆச்ரயமானது. அங்குள்ள ஸ்தாவரம் பிராணிகள் யாவும் க்ஞானமும் சக்தியும் வாய்ந்தவை. காவேரி தீரம் ரங்கநாதனுக்கு மிகவும் பிரியமானது. அந்த தேசத்தை ரக்ஷிப்பதற்காக பகவான் ஒவ்வொரு திக்கிலும் பல ரக்ஷகர்களை ஸ்ருஷ்டித்திருக்கிறார். யாவற்றையும் அழிக்கும் காலம் அந்த தேசத்தையும் அங்குள்ள ப்ராணிகளையும் அழிக்க இயலாது. அங்குள்ள புல் பூண்டுகள்கூடக் கருமத்தாலன்றித் தம் இச்சையாலேயே சரீரமெடுப்பதும் விடுவதுமாயுள்ளன. நான் கர்மவச்யர்களுக்குத் தான் நியந்தாவேயன்றி மஹாத்மாக்களுக்கல்ல. அங்குள்ள ப்ராணிகள் நித்தியராகையால் நித்தியனுயுள்ள பகவானே அவர்களை ரக்ஷிக்கிறான். நீங்கள் உயிர் தரிக்க வேண்டுமாகில் இனி அங்குப் போகவேண்டா. விஷ்ணு பூதேசுவரர்கள் என்னையும்விட பலிஷ்டர்."

**32—ம் அத்.**

ரங்கவிமானம் காவேரி தீரத்துக்கு வந்ததை யமன் தூதர்களுக்குச் சொல்லுகிறான்.

தூதர்கள்— ரங்க விமானத்தின் பிரபாவம் யாது? அதை எந்த மஹாத்மா அங்கு கொண்டு வந்தான்?

யமன்— முன்பு விபீஷணன் காவேரி தீரத்தில் பூப்பறித்துக் கொண்டிருக்கையில் ரிஷிகளுக்கும் அவனுக்கும் நடந்த ஸம்பாஷணையைச் சொல்லுகிறேன் :—

ரிஷிகள்— விபீஷணா! நீ முன்பு ரங்க விமானத்தை இங்கு எப்படிக் கொண்டு வந்தாய்?

தூதர்கள்— விபீஷணன் அங்கு எதற்காக வந்தான்?

யமன்— முன்பு விபீஷணன் ராமபிரானிடமிருந்து ரங்க விமானத்தைப் பெற்றுக் கொண்டு வருகையில் காவேரி தீரத்தில் வைத்து பகவானைப் பூஜிப்பதற்காகப் பூப்பறிக்கச் செல்லுங்கால், ஸகல மஹரிஷிகளுக்கும் வாஸ ஸ்தானமாய் ஸகல தீர்த்தங்களுக்கு மிருப்பிடமாய் பாபங்களைப் போக்கவல்லதுமாயுள்ள புஷ்கரிணி தென்பட்டது. விபீஷணன் தன்னோடு கூட வந்த நாலு பரிசாரகர்களுடன் ரிஷிகளை நமஸ்கரித்தான். விபீஷணன் வந்ததை யறிந்து ரிஷிகள் ஸந்தோஷித்து, அவனைக் கட்டி யணைந்து— "தபஸ்விகளுக்குச் சத்துருவான தமையனை வதைக்க வழி தேடிய உன்னைப் பற்றி ராமனே எங்களுக்குச் சொன்னார்! நீ இங்கு வந்த காரணம் யாது?"—என்று கேட்டார்கள்.

விபீஷணன் சொல்லலானான்.

33—ம் அத்.

ரங்க விமானம் தனக்கு ராமனால் கொடுக்கப்பட்ட விவரத்தை விபீஷணன் மஹரிஷிகளுக்குச் சொல்லுகிறான்.

விபீஷணன்— ஸர்வலோக நாதனுயுள்ள ராமன் ராவணனை வதம் செய்ததும் லங்கா ராஜ்யத்தை எனக்குப் பட்டம் கட்டியதும் உங்களுக்குத் தெரியும். ராவண வதத்துக்குப் பிறகு, ராமன் அயோத்திக்குப் போய் ராஜ்யத்தை ஒப்புக் கொண்டு பரதனுடைய மனக்கவலையை ஆற்றினார். ஸுக்ரீவன் பட்டாபிஷேகத்தை நன்றாய் நடத்தி வைத்தான். பட்டாபிஷேகம் முடிந்ததும், பிரஜைகள் லக்ஷ்மணனுக்கு இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்று

விரும்பினர். லக்ஷ்மணன் இசையவில்லை; பரதனுக்கு இளவரசுப் பட்டம் கட்டப்பட்டது. பிறகு ராமன் பல வித பஹுமானங்களைக் கொடுத்து வானரர்களை அனுப்பினர். ஸுக்ரீவனும் மிக்க மன வருத்தத்தோடு ராமனைப் பிரிந்து சென்றான்.

—" இந்த பூமண்டலமும் சந்திர ஸூர்யர்களும் உள்ள வரையில் உனக்கு நான் கொடுத்த லங்கைசுவரியம் அழியாமலிருக்கும். நீ லங்கைக்குப் போய் பந்து மித்திரர்களோடு ஸகல ஸுகங்களையும் அனுபவி. நீ செய்த உபகாரத்துக்காக இந்த ரங்க விமானத்தை உனக்குக் கொடுக்கிறேன். பிரம்மா இதைப் பெருந்தவம் புரிந்து பெற்றுப் பூஜித்து விரும்பியவைகளைப் பெற்றார். பிரம்மாவினிடமிருந்து மனுவும், மனுவினிடமிருந்து இக்ஷ்வாகுவும் இந்த விமானத்தை அடைந்தார்கள். என் முன்னோர்கள் யாவராலும் இது பூஜிக்கப்பட்டது. இக்ஷ்வாகு வம்சத்துக்கே தனமாயுள்ள இதை உனக்கு ப்ரீதியால் என் உயிரைக் கொடுப்பது போலக் கொடுக்கிறேன். இதைப் பெற்றுக்கொண்டு லங்கைக்குப் போய்ப் பூஜித்து விருப்பமனைத்தையும் பெறுவாயாக."— என்றார் ராமன்.

ரங்க விமானத்தை சிரஸா வஹித்துப் புறப்பட்டேன். பார்த்தாலும், தொட்டாலும், பருகினாலும், நினைத்தாலும், பாபத்தைப் போக்கும் இக்காவிரியைக் கிட்டியதும் பூஜாஸமயம் நேர்ந்ததால் விமானத்தை இங்கு வைத்துப் புஷ்பம் பறிக்கிறேன். நீங்கள் வந்து பகவானை தரிசியுங்கள்.

யமன்— விபீஷணன் சொன்னது கேட்டுக் களித்த மஹரிஷிகள் மீண்டும் அவனைக் கட்டியணைந்தனர்.

34—ம் அத்.

*ரங்கவிமானம் தனக்கு ராமனால் கொடுக்கப்பட்ட விவரத்தை விபீஷணன் ரங்கநாதனிடம் சொல்லுகிறான்.*

யமன்—

விபீஷணன் புஷ்பங்களை எடுத்துக் கொண்டு புஷ்கரிணியில் நீராடி, ரிஷிகளோடு ரங்க விமானத்தருகில் போனான். ரிஷிகள்

ரங்கநாதனை தரிசித்து ஸ்தோத்திரம் செய்தனர். விபீஷணன் நெடு நேரம் ரங்கநாதனை ஆராதித்துப் பிறகு, விமானத்தைத் தூக்க முயன்றான்; முடியவில்லை. ரிஷிகளுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. விபீஷணன் வெகுவாய் முயன்றும் விமானத்தை அசைக்க முடியா மல் களைத்துக் கீழே வீழ்ந்து புலம்பினான். ரங்கநாதன் பிரத்திய க்ஷமாகி—

"இந்த தேசம் மிகவும் இனிதாயுள்ளது. நதியின் தீர்த் தம் மிக்க ரமணீயமானது. நான் லோகக்ஷேமத்துக்காக இங் கேயே படுத்திருக்கிறேன். விபீஷணா! நீ லங்கைக்குப் போய், அங்கிருந்தே என்னைப் பூஜித்து பந்து மித்ரர்களோடு ஸுகித்திருப் பாயாக. உனக்கு க்ஷேமமுண்டாகும்; கவலைப்படாதே"— என்றார்.

விபீஷணன் இதைக் கேட்டு மீண்டும் கலக்கமுற்று ரங்க நாதனுடைய திருவடிகளிலே வீழ்ந்தான். ரங்கநாதன் அவனை எழுப்பி ஸமாதானப் படுத்துகையில் விபீஷணன் பூர்வ விருத்தாந் தத்தைச் சொல்லலானான் :—

"ராமன் வைகுண்ட யாத்திரை[1] செய்யும்போது அவரோடு கூடச் செல்ல விரும்பிய என்னைப் பார்த்து— 'லங்கையிலேயே இருந்து நான் கொடுத்த லங்கா ராஜ்யத்தை என்னுடைய கைங்கரி யமென்றே பரிபாலிப்பாயாக. என்னிடமுள்ள பக்தியால் கடைசி யில் என்னிடமே வருவாய்'— என்றார்.

—'உம்முடைய ஆராதனம் தவிர, மோக்ஷத்தையும் நான் விரும்பேன். என்னுடைய அபராதத்தைப் பொறுத்து என்னை ரக்ஷிக்கவேண்டும்.

---

1. ராம பட்டாபிஷேகமானவுடன் ரங்கவிமானம் தனக்குக் கொடுக்கப்பட்டதாக 33-ம் அத்தியாயத்தில் சொன்ன விபீஷணனே ராமனுடைய வைகுண்ட யாத்திரையில் கொடுக்கப்பட்டதாக இங்கு சொல்லுகிறான். இந்த விரோதத்தை எப்படிப் பரிஹரிப்பது? தெலுங்கு எழுத்தில் அச்சிட்ட புஸ்தகம் தவிர கிரந்த லிபியிலுள்ள கையெழுத்துப் புஸ்தகத்திலும் இவ்விரண்டு அத்தியாயங்கள் இப்படியே யுள்ளன.

—'பிரணவாகிருதியான இந்த விமானமே நான். என்னுடைய ஆத்மாவான ஸ்ரிய:பதி இதில் சயனித்திருக்கிறார். என்னைப் பூஜிப்பதாகவே இவரைப் பூஜித்து வா! என்றார் ராமன்; தேவரீரோ இப்படிச் சொல்லுகிறீர்! நான் என் செய்வேன்!'— என்றான் விபீஷணன்.

பகவான் மீண்டும் விபீஷணனை ஸமாதானப்படுத்தி லங்கைக்கு அனுப்பினார்.

குளிர்ந்த ஜலமும் இனிய சோலைகளுமாயுள்ள ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதன் இன்னும் சயனித்திருக்கிறார். அது திவ்ய தேசம். எவ்விதத் துன்பமும் அங்கு கிடையாது. காவேரி திவ்ய நதி அதன் ஜலம் திவ்ய தீர்த்தம். உங்களுக்கு அங்கு யாதொரு காரியமுமில்லை. அந்த தேசம் தவிர மற்றை இடத்துக்குமட்டுமே நான் யஜமானன்.

வியாஸர்—

யம தூதர்கள் இவ் வார்த்தையைக் கேட்டு மிக்க பயங் கொண்டார்கள். இச் சரித்திரம் கேட்போரின் பாபம் நீங்கும். அவர்களுக்கு யமபாதை கிடையாது. அவர்கள் பாபம் நசித்துப் பரமபதம் சேருவர்.

35—ம் அத்.

தக்ஷப்ரஜாபதியின் சாபத்தினால் வந்த க்ஷயரோகம் போவதற்காக சந்திரன் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்தான்.

நாகதந்தர்—

வியாஸ முனிவரே! பருவ காலந்தோறும் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று சொன்னீர்.[1] அதெப்படி?

வியாஸர்—

தக்ஷப்ராஜாபதி தன்னுடைய இருபத்தேழு பெண்களையும்

1. 26-வது அத்தியாயம் பார்க்க.

சந்திரனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தான். சந்திரன் ரோஹிணியினிடத்தில் மாத்திரம் பிரீதியோடிருந்ததால் மற்றைப் பெண்கள் பிதாவினிடம் முறையிட்டனர். தக்ஷன் சந்திரனை வரவழைத்து எல்லா மனைவிகளிடத்தும் ஒரே விதமான ப்ரீதியோடிருக்குமாறு சொல்லியும் சந்திரன் கேளாததால்— "க்ஷயரோகத்தால் வருந்துவாய்" என்று சபித்தான்.

சந்திரன் ரோகம் நீங்குவதற்காகப் புஷ்கரிணியில் பதினைந்து வருஷம் ஸ்நானம் செய்து அதில் விகஸிக்கும் தாமரைகளைக் கொண்டு பத்து வருஷ காலம் ரங்கநாதனை ஆராதித்தான். பகவான் பிரத்தியக்ஷமானார்; சந்திரன் ஸ்தோத்திரம் செய்தான்.

## 36—ம் அத்.

சந்திரனுடைய ஸ்தோத்திரம் கேட்டு பகவான் பிரத்யக்ஷமானார்.

**நாகதந்தர்—**

சந்திரன் பகவானை எவ்விதம் ஸ்தோத்திரம் செய்தான், சொல்லும். ஸகல தோஷங்களும் போகுவதற்காக அந்த ஸ்தோத்திரத்தை நான் கேட்க விரும்புகிறேன்.

**வியாஸர்—**

சந்திரன் பகவானைப் பல சுலோகங்களால்[1] ஸ்தோத்திரம் செய்து— "ஜகத்தை விருத்தி பண்ணு என்று எனக்குக் கட்டளையிட்டு உம்முடைய சக்தியையும் கொடுத்தீர். மனுஷ்யர், ஓஷதிகள்— முதலிய ஸகல ப்ராணிகளையும் ரக்ஷிக்கிற என்னை "க்ஷயரோகத்தினால் பீடிக்கப் படுவாய்"— என்று தக்ஷ ப்ரஜாபதி சபித்தான். ரோகம் விருத்தியாவதால் நான் உம்முடைய கட்டளையின்படி ஜகத்தை ரக்ஷிக்க முடியவில்லை. இந்த க்ஷயரோகத்தை நீரே க்ஷயிப்பிக்க வேண்டும். எல்லோரிடத்திலும் ஸமமாயிருந்தும் சக்தி விசேஷத்தினால் ஒவ்வொன்றிலும் தாரதம்யமுள்ள காரியங்க

1. எட்டு சுலோகங்களால் ஸ்தோத்திரம் செய்த பிறகு ஐந்து சுலோகங்களால் பிரார்த்திக்கிறான்.

னேயே செய்யும் உம்மைவிட எனக்கு வேறு கதியில்லை.''— என்று ப்ரார்த்தித்தான்.

பகவான் சந்திர புஷ்கரிணிக் கரையில் பிரத்தியக்ஷமாகிப் பேசலானார்.

37—ம் அத்.

பகவான் சந்திரனுடைய ரோகத்தைப் போக்கி, ஜனங்களுக்கு தரிசனம் கொடுப்பதற்காகவே புஷ்கரிணிக் கரையில் தான் இருப்பதை அறிவித்து,— பருவ காலந்தோறும் புஷ்கரிணிக்கு வா என்று சொல்லுகிறார்.

பகவான்— சந்திரா! நீ விரும்புவது யாது? என் தரிசனத்தினாலேயே உன் விருப்பம் நிறைவேறும்.

சந்திரன்— ஹ்ருதய கமலவாஸியான உம்மை இன்றே நேரில் தரிசித்தேன்; என்னுடைய துன்பமும் நீங்கிற்று.

பகவான்— என்னை தரிசித்து பாபிகளும் பரிசுத்தராகையில் எனக்கு ப்ரியனான நீ பரிசுத்தனாவதில் ஸந்தேஹமில்லை. உன்னுடைய க்ஷயம் நீங்கும். நீ உலகத்தை ரக்ஷித்துக் கொண்டு முன் போல விளங்குவாய். நீ இந்தப் புஷ்கரிணியில் தபஸ் செய்ததால் இதற்கும் உன்னுடைய பெயரே உண்டாகும். இது மிகவும் உத்தமமான தீர்த்தம்.

சந்திரன்— இப்பொழுது போலவே எப்பொழுதும் நான் உம்மை தரிசிக்க விரும்புகிறேன்.

பகவான்— மஹான்களுக்கும் தென்படாத நான் உனக்குத் தென்படுவதெப்படி?

சந்திரன்— ஞானமில்லாத அல்பர்களும் உம்மை தரிசிக்கும் உபாயத்தையாவது சொல்லும்.

பகவான்— இந்த தேசத்தில் வஸிப்பவர்களுக்கு மட்டும் நான் தரிசனம் கொடுப்பேன். மற்றவர்களுக்கு நான் பிரத்தியக்ஷனல்ல. விபீஷணனுக்காக நான் எப்பொழுதும் எல்லோருக்கும் இங்கு ப்ரத்தியக்ஷனாயிருக்கிறேன். ஆகலால் தான், பூமி யாது

துன்பமுமின்றி மிக்க மங்களமாயிருக்கிறாள். விபீஷணன் என்னுடைய வாஸஸ்தானத்தைப் புஷ்கரிணிக் கரையில் வைத்து லங்கைக்குப் போனதாமுதல் நான் இங்கேயே ஸுகமாய் சயனித்திருக்கிறேன். நீ என் வாஸஸ்தானமான விமானத்தில் என்னை தரிசிக்கலாம். லோகானுக்ரஹார்த்தமாக நான் விமானத்தில் பிரத்தியக்ஷமாயிருக்கிறேன். சந்திரா! நீ ஒவ்வொரு பருவ காலத்திலும் இங்கு வந்து என்னை தரிசி. உன்னுடைய காந்தியால் உலகம் பரிசுத்தமாகும்.

## 38—ம் அத்.

*வியாஸர் மஹரிஷிகளுக்குப் புஷ்கரிணியின் மாறுபாட்டையும் கலியின் விபரீதத்தையும், கலியில் சிவ பாரம்யத்தையும், சொல்லுகிறார்.*

கிருதயுகம் திரேதாயுகமென்று காலம் மாறுகையில் அந்த தேசமும் புஷ்கரிணியும் குறைந்து போகும்; ப்ராணிகள் யாவும் மறையும். புஷ்கரிணி கிருதயுகத்தில் பத்து யோஜனை விஸ்தாரமுள்ளதாயிருந்தது; திரேதாயுகத்தில் பாதியும் துவாபரயுகத்தில் பாதியுமாகக் குறைந்து, கலியுகம் வந்தவாறே அதனிலும் பாதியாகக் குறையும். (ஆகவே, கலியுகத்தில் புஷ்கரிணி அரைக்கால் பாகமேயுள்ளது.) அஸ்தமிக்கும் சூரியனுடைய கிரணங்கள் போலப் புஷ்கரிணி கலியுகத்தில் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே யிருந்து மிகவும் சிறிதாய் விடும். ஸுகந்தமாய், தெளிவாய், குளிர்ச்சியுமாயுள்ள புஷ்கரிணி தீர்த்தம் கலியுகத்தில் துர்கந்தமாயிருக்கும். ராஜமரணம், ராஜ்யநாசம், பிரஜாக்ஷயம்— இவை நேரும் போது, புஷ்கரிணி ஜலம் சிவப்பாயும், பச்சையாயும், புழுக்கள் நிறைந்ததாயுமிருக்கும்; நுரைகளுண்டாகி உஷ்ணமாயிருக்கும்; அரசர்கள் சாந்தராயிருந்தால் பால் போலவும், பிராமணர்கள் சாந்தராயிருந்தால் ஸ்படிகம் போலவுமிருக்கும்; மழை பெய்து ஸுபிக்ஷம் ஏற்படும் போது தெளிவாயிருக்கும்; மழையில்லாக் கொடுமை வருமாகில் வறண்டு போகும். மனிதரில்லாமல் அரண்யமாயுள்ள அந்த தேசத்தில் ஜனங்கள் வாஸம் செய்யும்போது உலகுக்குத் தீங்கு சேரிடும். புஷ்கரிணியில் புலப்படும் நல்லவையெல்லாம் நன்மைக்காக; தீயவை தீங்குக்காக.

அந்த தேசம் முப்பத்திரண்டு யோஜனை விஸ்தாரமுள்ளது. காலம் மாறும்போது அந்த தேசமும் குறுகிவிடும்.

கலியுகத்தில் ஸகல தர்மங்களுக்கும் திடீரென்று ஆபத்து உண்டாய் விடும். ஜனங்கள் பாபிகளாய், வேதத்தை தூஷிப்பவர் களாய், விஷ்ணு த்வேஷிகளாய், தர்மமறிந்த பெரியோர்க்குப் பகை வராய், ஸாதுக்களுக்கு பயங்கரர்களாய், ஆசார மற்றவர்களாய், பாஷண்டிகளாய், தீச்செயல் செய்பவர்களாய், அல்பாயுஸ்ஸுக்களு மாயிருப்பார்கள். வேதவிரோதிகள், தர்மத்தை தூஷிப்பவர், அஸு ரர், ராக்ஷஸர், பிசாசர், பிரம்ம ரக்ஷஸ்ஸுகள், சுடுகாடர், பிராம்மண தூஷகர்— இவர்களுக்கே சிவன் முக்கிய தெய்வம்.

பஞ்ச பூதங்களும் பிரகிருதியின் விகாரங்கள். பிரகிருதி ஸத் வம், ரஜஸ், தமஸ்— ஆக முக்குணம் பொருந்தியது. தமோ குண ப்ரவர்த்தகர் சிவன்; ரஜோ குண ப்ரவர்த்தகர் பிரம்மா; ஸத்வ குண ப்ரவர்த்தகர் விஷ்ணு. ஸத்வ குணம் வாய்ந்தவர் விஷ்ணுவையே பூஜிப்பார்கள்; ராஜஸர் பிரம்மாவையும், தாமஸர் சிவனையும் பூஜிப் பார்கள். ஸத்வ குணமே ஸகல தர்மங்களுக்கும், ஞானத்துக் கும், சாசுவதமான ஸுகத்துக்கும் காரணம்; ரஜோ குணம் ஆசைக்குக் காரணம்; தமோ குணம் அறிவின்மை, சோம்பல், துக் கம், மோஹம்— இவற்றுக்குக் காரணம். ஸாத்விகர் உஜ்ஜீவனத் துக்கு வேண்டிய மார்கத்தைப் பற்றிப் பரம புருஷனை அடைவார் கள்; தாமஸர் அதோ கதிக்குப் போவார்கள்; ராஜஸர் கருமத்தி லேயே உழலுவார்கள். கிருத த்ரேதா யுகங்களில் ஸத்வ குணம் நிறைந்திருக்கும்; துவாபரத்தில் ரஜோ குணமும், கலியில் தமோ குணமும் நிறைந்திருக்கும்.

கலியுகம் வந்தவாறே—பிராணிகள் தாமஸராவார். தமோ குணம் ஸத் கர்மங்களை யெல்லாம் அழிக்கவல்லது. தாமஸர் ஸாதுக்களின் தர்மங்களை தூஷித்துக்கொண்டு தமோகுண ப்ரவர்த் தகனுன ருத்ரனை அடைவார்கள். சிவன் ஜகத்தை மோஹிப்பதற் காக மோஹ சாஸ்திரத்தைச் செய்கிறுர். அந்த மோஹ சாஸ்திரம் கலியுகத்தில் எல்லாவிடங்களிலும் உண்டு. யாவரும் லோபத்தை அனுஸரிப்பவராதலால், மோஹ சாஸ்திரத்தின் படியே நடந்து, வேதங்களை தூஷித்துக்கொண்டு வேதோக்தங்களான தர்மங்களையும்

தியஜிப்பார்கள்; சிவனை ஆச்ரயித்து ஸப்த லோகங்களையும் சஹிப்பார்கள்; ராவணன் சிவபக்தனாயிருந்தே உலகத்தை வருத்தினான்; ஹிரண்யன், ஹிரண்யாக்ஷன், ராஹு, பலி, வாலி— முதலான கொடியவரும் ஜராஸந்தன் முதலான அரசர்களும் சிவனைப்பூஜித்தே தர்மத்தைக் கெடுத்தார்கள். கலியுகம் வந்ததும் ஸாத்விகர் நசிப்பர்; ராஜஸர் இருப்பர்; தாமஸர் விருத்தியடைவர். கலி யுகத்தில் மோஹ சாஸ்திரத்தை அவலம்பித்துக் காரியம் ஸாதிப்பவரின் மனோரதமே நிறைவேறும்; வைதிகரின் பிரயத்னம் முற்றிலும் வீணாகும். மோஹ சாஸ்திரம் வைதிகர்களையும் மோஹிப்பிக்கும். மோஹ சாஸ்திரத்தை ப்ரவர்த்திப்பவரே வியாதியற்றவராய், பலிஷ்டராய், ஐசுவரியவான்களாய் காலத்திலேயே விருத்தியடைபவர்களுமாயிருப்பர். கலி காலம் நசிக்கையில் தாமஸரும் அழிவார்கள். ஸ்தாவர ஜங்கமங்களனைத்தையும் சிவன் அழிப்பார். ஸகல பூதங்களையும் அழிக்கும் கலியில் பரம புருஷனை ஒருவரும் பூஜியார். கலியுகத்தில்கூட விஷ்ணு பக்தராயிருப்போர் மோஹத்தையும் மோஹ சாஸ்திரத்தையும் ஜயித்து மேன்மை பெறுவார்கள்.

கலி காலத்தில் ஸாதுக்களுக்கும் தேவர்களுக்கும்கூட தர்மம் மாறிக் கிடக்கும்; அசக்தன் சக்தனாயும், நல்லது கெடுதலாயும் மோஹ சாஸ்திரமே உத்கிருஷ்டமாயுமிருக்கும். கிருத யுகத்தில் தத்துவம் மாறுமனாலும், திரேதா யுகத்தில் மறைந்தும், கலியில் விபரீதமாயுமிருக்கும்.

சாஸ்திரங்கள் மூன்று விதம். ஸத்வ மூர்த்தியான விஷ்ணுவைப் பற்றியது ஸாத்விகம். பிரம்மா, அக்னி, தேவி, ஸரஸ்வதி— இவர்களுக்குப் பரத்வம் சொல்லுவது ராஜஸம். லிங்கத்துக்கு மாஹாத்மியத்தையும் சிவனுக்குப் பரத்வத்தையும் சொல்லும் சாஸ்திரம் தாமஸம். ஒரு சாஸ்திரம் மற்றொன்றுக்கு விரோதமாயிருப்பதால் கலியில் ஸாத்விக சாஸ்திரம் தலை சாயும், தாமஸமே பிரபலமாயிருக்கும். இவ்வளவு கலக்கமும் கலி காலத்தின் கோலம்.

இந்தக் கலக்கம் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்துக்கு மட்டும் உண்டாகாது. விபீஷணனுக்காக ரங்க விமானத்தில் சயனித்திருக்கும் பகவான் ஸ்ரீரங்கத்தை உபேக்ஷியார். கலிக்கும் ஒரு கலி யுண்டாகை

யால் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களால் லீலே செய்யும் பகவான் ஜகத்தை ஸம்ஹரிக்கும் போது கலியும் கெடும்.

ரங்க நாதன் எப்பொழுதும் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் பிரீதியுள்ளவர். அவருடைய ப்ரீதிக்காகவே ஸ்ரீரங்க க்ஷேத்திரமும் காவேரி நதியும் விளங்குகின்றன.

39—ம் அத்.

*பிரம்மஹத்தி தோஷத்தினல் ஏற்பட்ட பஞ்சம்கூட ஸ்ரீரங்கத்தை அழிக்க முடியவில்லே யென்று வியாஸர் சொல்லுகிருர்.*

வியாஸர்— நாரதந்தரே! இந்த தேசத்தில் முன்பு நடந்த இன்னெரு விருத்தாந்தம் சொல்லுகிறேன்.

முன்னெரு காலத்தில் பனிரண்டு வருஷம் மழையில்லாமல் பஞ்சம் நேரிட்டு உலகம் நசித்தது. ராஜ தோஷத்தினல் இந்தப் பஞ்சம் நேரிட்டது பற்றி பகவானும் இதை கவனியாதிருந்தார்; பூமியிலுள்ள ஸகல ஜீவராசிகளும் நசித்தன. நதிகள் ஜலமில்லாமல் மணல் மிகுந்து மிருத்யுவுக்கு விளையாட்டு பூமியாயின. ஆனல், காவேரியில் மட்டும் ஜலம் இருந்தது. ரிஷிகள் காவேரி தீரத்திலேயே வசித்தார்கள். ஸகல ப்ராணிகளுக்கும் காவேரி தான் சரணமாயிருந்தது. ரங்கநாதனுடைய தேஜஸ்ஸினல் செழிப்பாயிருந்த காவேரி தீரத்தில் எல்லா ரிஷிகளும் குடியேறினபோது, நாளடைவில் அங்குள்ள ஜலமும் வறண்டு போயிற்று. உடனே, ஸ்ரீரங்கத்தைக் காக்கும் பூதேசுவரர்கள் மேக மண்டலத்தில் பிரவேசித்து அதனைப் பிளந்ததும், பெரிய பெரிய கட்டிகளாக ஜலம் வீழ்ந்து காவேரி நிரம்பிற்று. ஜனங்கள் அந்த ஜலத்தைப் பானம் பண்ணி ஜீவித்தார்கள். சில நாள் சென்றதும், இந்தப் பஞ்சத்துக்குக் காரணமான பிரம்மஹத்தியே வந்து காவேரி ஜலமனைத்தையும் குடித்துவிட்டாள். மேகத்திலிருந்து ஜலம் இடை விடாமல் வீழ்ந்தபோதிலும், பிரம்மஹத்தி அனைத்தையும் பானம் பண்ணி வாயைப் பிளந்து கொண்டு காவேரியை மறித்து நிற்பது பூதேசுவரர்களுக்குத் தெரிந்தது. பிரம்மஹத்தி ஓட்டம் பிடிக்கையில்,— "நீ யார்? நீ யார்?"

என்று கேட்டுக் கொண்டே பூதேசுவரர்கள் பின் தொடர்ந்தனர். பிரம்மஹத்தி சொல்லலானாள்:—

பிரம்மஹத்தி—

நான் பாபமூர்த்தி; நான் ராஜனிடமிருந்து உண்டாகி யாவற்றையும் அழிக்கும் பிரம்மஹத்தி. ஸகல பாபங்களுக்கும் நானே பெரியவள். என்னுடைய வரலாறு யாதெனில்,— இந்த தேசத்துக்கு அரசனாயுள்ள ஸோமகன் யாரோ ஒருவன் செய்த குற்றத்துக்காக வேத வித்தான ஒரு பிராம்மணனைக் கொன்று விட்டான். நேரில் நடக்கும் பாபத்தைத் தடுக்காதார்க்குப் பாபத்திலும் பாகமுண்டு—என்ற நியாயத்தை அறிந்து அந்த ராஜனுடைய மந்திரிகளும், பிரஜைகளும், அயல் தேசத்தில் வஸிப்பவர்களும்கூட ராஜனைக் கண்டித்தும் அவன் பிராம்மணனை வதம் செய்தான். அதனால் இந்தப் பஞ்சமும் மற்றைய ஆபத்துகளும் உண்டாயின. இதற்கு ராஜன் ஏதொரு பரிஹாரமும் செய்ய வில்லை. ஆகையால், நான் இந்த ஜகத்தை ஹிம்ஸிக்கிறேன். நீங்கள் யார்? நீங்கள் என்னை ஏன் கொல்ல வருகிறீர்கள்? என்னை ஒருவரும் கொல்ல முடியாது.

40—ம் அத்.

*பிரம்மஹத்தி பூதேசுவரர்களுக்கு பயந்து மறைந்தாள்; உலகில் பஞ்சம் நீங்கிற்று.*

பூதேசுவரர்கள்—

மற்றைய இடங்களைப் போல நினைத்து இவ்விடத்தையும் நீ அழிக்க வந்தாய் போலும்! நீயே அழிவாய். இது விஷ்ணுபூதேசுவரர்களால் ரக்ஷிக்கப்படும் தேசம். ஸகல தீர்த்தங்களும் சேர்ந்ததான இக்காவேரி ரங்கநாதனுடைய ஸம்பந்தம் பெற்றதால் தொட்ட மாத்திரத்திலேயே பாபத்தைப் போக்கடிக்கும். மஹா பாபிகளையும் பரிசுத்தமாக்கவல்லது இந்த நதி. இதைப் பானம் பண்ணியதால் ஜகத்துக்கும் உனக்கும்கூட முக்தி உண்டாகும். நீ அபஹரித்த ஜலம் முழுவதையும் இங்கேயே விட்டு விரைவில் போ! இல்லையேல், உன்னைக் கொல்லுவோம்!

வியாஸர்—

பூதேசுவரர்கள் இப்படிச் சொல்லுகையிலேயே பிரம்மஹத்தி

மறைந்தாள்.[1] விஷ்ணு பூதேசுவரர் தம்மிருப்பிடம் சேர்ந்தனர். பிறகு, நல்ல மழை பெய்தது; பாபம் நீங்கிற்று; ஜனங்கள் களிப்புடன் வாழ்ந்தனர்.

இப் புண்ய கதையைக் கேட்போரும் பாபம் நீங்கப் பெறுவர்.

## 41—ம் அத்.

*விமானத்தினுடைய நிழலைத் தாண்டக் கூடாது. அதைத்தாண்டிய ஓர் கந்தர்வன் த்வீபாந்தரத்தில் எறியப் பட்டான்.*

வியாஸர்— நாகதந்தரே! இன்னொரு விருத்தாந்தம் சொல்லுகிறேன்:—

மதம் கொண்ட **சித்திரஸேனன்** என்னும் கந்தர்வன் மற்றைய கந்தர்வர்களோடு பாடிக்கொண்டு ஆகாசத்தில் ஸஞ்சரிக்கையில் ஸ்ரீரங்க விமானத்தின் நிழலைத் தாண்டிச் சென்றான். புண்ய வஸ்துக்களின் நிழலைத் தாண்டக் கூடாதென்று அறிந்த மற்றைய கந்தர்வர்கள் ஒதுங்கிச் சென்றனர். விமானத்தைத் தாண்டின கந்தர்வனை விஷ்ணு பூதேசுவரர்கள் பிடித்து எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே மாரீசனை ராமபாணம் எறிந்ததுபோல எறிந்துவிட்டார்கள். கந்தர்வன் நெடுந்தூரத்துக்கப்பால் ஓர் த்வீபத்தில் வீழ்ந்து அசைவற்றுக் கிடந்தான். மற்றைய கந்தர்வர்கள் சித்திரஸேனன் வீழ்ந்த இடத்துக்குப் போனார்கள்; தன்னை யார் எறிந்ததென்று சித்திரஸேனன் கேட்டான். ஸ்ரீரங்கவிமானத்தின் நிழலைத் தாண்டிய பலன்—என்றனர் கந்தர்வர். சித்திரஸேனன் சிறிதும் லக்ஷியம் செய்யாமல் தன்னிருப்பிடம் போவதற்காக எழுந்திருக்கலானான்; முன்போல ஆகாசத்தில் கிளம்ப முடியவில்லை. கந்தர்வன் வெகுவாய் அழுது வருந்தி, – "என்னை இப்படிச் செய்தது யார்? அவர்களைச் சொல்லுங்கள். அவர்களை இந்திர கோபத்துக்கு இரையாக்குகிறேன். என்னோடுகூட வந்த நீங்கள் விழாமல் நான் மட்டும் இப்படி வீழ்ந்ததுபற்றி எனக்கு ஸந்தேஹம் உண்டாகிறது. இவ்விஷயத்தில் பெரியதோர் பக்ஷபாதம் இருக்கவேண்டும்.

1. ஸோமசனைப் பீடிக்க வேண்டிய பிரம்மஹத்தி பிரபலமிருந்ததால் உலகத்தையே பீடித்தது. உருவத்தோடு திரிந்த பிரம்மஹத்தி காவேரி தீர்த்தத்தின் ஸம்பந்தத்தால் நீங்கிற்றென்று காண்க.

என்னை யார் இப்படிச் செய்தது—சொல்லுங்கள்"—என்று கந்தர்வர்களைக் கேட்டான்.

42—ம் அத்.

*சித்திரஸேனனுக்காக விஷ்ணுபூதேசுவரர்களோடு யுத்தம் செய்யச் சிவபிரானால் அனுப்பப்பட்ட ஸுப்ரம்மண்ய ஸைனியம் தோல்வியடைந்தது.*

"சித்திரஸேனா! நீ இப்படிச் சொல்லக்கூடாது. ஒருவருடைய காரியம் மற்றொருவரால் அனுபவிக்கமுடியாது. தேவர், மனுஷ்யர், மிருகம், முதலிய பேதம் அவரவர்களின் செய்கையாலுண்டாயிற்று. நீ ரங்கவிமானத்தின் நிழலை கர்வத்தினால் தாண்டினாய். அது பூஜிக்கத் தக்கதாகையால் நாங்கள் தாண்டவில்லை. ஆதலால்தான், எங்களுக்கு யாதொரு தடையுமுண்டாகாமல் உனக்குமட்டும் உண்டாயிற்று. சித்திரஸேனா! கோபம் கொள்வதில் பயனில்லை. இதற்குப் பரிஹாரம் தேடு. உன்னை யார் எறிந்தாரென்று நாங்கள் அறியோம். நாம் இந்திரனிடம் போகலாம் வா! நீ செய்ததை இந்திரனுக்குச் சொல்லுவோம். ஆகாசம் முதலான பூதங்களே உலகத்தில் நடப்பவற்றுக்கு ஸாக்ஷியாகையால், அவற்றையே நீ வீழ்ந்ததற்குக் காரணம் கேள். விமானமுள்ள இடத்துக்கும் நீ இப்போதுள்ள இடத்துக்கும் நெடுந்தூரமுள்ளது. நீ அங்கு நடந்து செல்வதற்கும் இடராய் இடையே கடல்களும் மலைகளும் ஏராளமாயுள்ளன. ஆகையால், நீ இங்கிருந்தே பரிஹாரம் செய்தால் உனக்கு க்ஷேமம் உண்டாகும்." என்று சொல்லி கந்தர்வர்கள் தம்மிடத்துக்குப் போயினர். சித்திரஸேனன் அந்தத் தீவில் தனியாயிருந்து அழுது வருந்திக் கடைசியில் சிவபிரானை ஸ்தோத்திரம் செய்தான். சிவன் பிரத்யக்ஷமாகி சித்திரஸேனனிடமிருந்து யாவற்றையு மறிந்து, அவன் வீழ்ந்த காரணத்தை ஆலோசித்துத் தன்னுடைய ப்ரமத கணங்களை அனுப்பினார்.

ஸுப்ரமண்யனால் நடத்தப்பட்ட சிவஸைன்யம் ரங்கவிமானமிருக்கும் இடத்துக்குப் போய்ப் பெரு முழக்கம் செய்துகொண்டு காவேரி தீர்த்தத்தைக் குடிக்க வாரம்பித்தது. ஜலம் வற்றிப்போய் காவேரியில் மணல் மேலிட்டது. ஜலத்தில் மிதந்த பூக்கள் மரக்கிளைகளில் தொங்கலாடின. காவேரி ஜலம் முழுவதும் குடிக்கப்பட்

டதுகண்ட விஷ்ணு பூதேசுவரர்கள் ஓடிவந்து சிவஸைன்யத்தை அடித்து விரட்டினார்கள். ஸுப்ரம்மண்யன் அடி தாங்காமல் ஓடினான். ஸைன்யம் முழுவதும் அடிபட்டு ஓடிவருவதுகண்ட ருத்ரன்,—"யார் இப்படிச் செய்தது! இதென்ன!" என்று திகைத்து ஆலோசிக்கையில் ஸுப்ரம்மண்யன் நடந்ததனைத்தையும் சொன்னான். "பலிஷ்டரோடு விரோதம் கூடாது; சித்திரஸேனா! நீ எங்கேனும் போ" என்றார் சிவன்.

43—ம் அத்.

*சித்திரஸேனனுக்காக தேவஸைனியத்தைத் திரட்டி வந்து யுத்தம் செய்த இந்திரன் விஷ்ணு பூதேசுவரர்களால் தோல்வியடைந்தான்.*

தன்னுடைய தோழன் சித்திரஸேனன் இவ்வாறு கிடப்பதறிந்த இந்திரனுக்குக் கோபமுண்டாயிற்று. இந்திரன் தேவஸேனையைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டான். தேவர்கள் இந்திரனுடைய கட்டளையால் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு கிளம்பினர்; லோக பாலர்களும் சேர்ந்துகொண்டார்கள். ஆகாயம் முழுவதும் இடைவெளியின்றி தேவக்கூட்டம் கூடியிருந்தது. காற்று கடுமையாய் வீசிற்று. ஸூரியன் ஜகத்தைக் கொளுத்தலானான். ஆங்காங்காங்கு தீப்பற்றி யெறிந்தது. மேகங்கள் புரண்டோடி ரக்த வர்ஷம் பொழிந்தன.

விஷ்ணு பூதேசுவரர்கள் திகைத்து ஆலோசித்தனர். பிறகு, இந்திரனுடைய கட்டளையால் ஸ்ரீரங்கத்தில் சண்டமாருதம் வீசிற்று. உடனே வைஷ்ணவ வாயு கிளம்பி சண்டமாருதத்தை விழுங்கிற்று. வைஷ்ணவாக்னி கிளம்பி திக்குகளையெல்லாம் தஹித்தது. ருத்ரர், ஆதித்யர், மருத்துக்கள், ஸித்தர், கந்தர்வர்—முதலான யாவரும் இந்திரனுடைய ஆக்ஞையால் நாற்புறமும் சூழ்ந்துகொண்டதும், விஷ்ணுபூதேசுவரரில் தலைவனான குமுதன் தன் பரிவாரங்களையும் ஏவினான். விஷ்ணு பூதேசுவரர்களால் தேவஸைன்யம் முழுவதும் அடியுண்டு வீழ்ந்தது. இந்திரன் நன்றாய் அடிபட்டுக் கோபத்துடன் வஜ்ராயுதத்தை வீசினான். குமுதன் வெகு அலக்ஷியமாய் அந்த வஜ்ரத்தைக் கையிலேந்திப் பிடித்து நின்றான்; இந்திரனுடைய வஜ்ராயுதமும் விஷ்ணுபூதேசுவரரிடம் அகப்பட்டுக் கொண்டது

பற்றி ஒவ்வொரு திக்கிலும் பெரிய கூச்சல் உண்டாயிற்று. இந்திரன் வஜ்ரத்தையும் ஸைன்யத்தையும் விட்டுப் புறங்காட்டி ஓட்டம் பிடித்தான். யாவரும் ஓடி ஒளியலாயினர். ஸ்ரீரங்கத்தில் காவேரிக்கரையில் தபஸ் செய்துகொண்டிருந்த ரிஷிகள் யுத்தத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள்.

44—ம் அத்.

வஜ்ரம் இழந்த இந்திரனிடம் பிரம்மா வருகிறார்.

இந்திரன் வஜ்ர மிழந்ததை யறிந்த பிரம்மா,— "இந்திரா! முன் பின் ஆலோசியாமல் ஏன் இப்படி பலிஷ்டரோடு விரோதம் செய்துகொண்டாய்? விஷ்ணுபூதேசுவரர்கள் மஹாபலிஷ்டர்கள். மிருத்யுவுக்கும் அவர்கள் மிருத்யுக்கள். எதிரியின் பலம் தெரியாமல் அவர்களிடம் வஜ்ராயுதத்தை ப்ரயோகம் செய்யலாமா? உன்னுடைய ஆயுதங்களும், என்னுடைய ஆயுதங்களும், சிவனுடைய ஆயுதங்களும்— எதுவும் விஷ்ணுபூதேசுவரர்களை அணுகமுடியாது. காலசக்ரமும் விஷ்ணுசக்ரமுங்கூட விஷ்ணுபூதேசுவரர்களைத் தீண்டாது. இவ்வளவு பலிஷ்டர்களோடு நீ எப்படி சண்டைக்குக் கிளம்பினாய்?" என்று கேட்டார்.

இந்திரன் துக்கம் தாங்காது தலைகுனிந்து விடையளிக்கமுடியாமல் சித்திரஸேனன் வீழ்ந்ததை பிரம்மாவுக்குச் சொல்லுமாறு கந்தர்வர்களைக் கண்களால் ஏவினான்.

கந்தர்வர்கள் நடந்ததைச் சொல்லுகையில், சிவனும் சித்திரஸேனனால் பூஜிக்கப்பட்டு பிரம்மாவினிடம் வந்தார். பிரம்மா சிவனை வரவேற்றுச் சொல்லுகிறார்:—

"கந்தர்வன் பெரிய அகாரியம் செய்தான். எப்பொழுதும் அவமானமே படும் இந்திரனிருக்கட்டும். சிவன்கூட இவ்விஷயத்தில் சிந்தியாமல் தவறினார். எனக்குத் தோன்றுவதைச் சொல்லுகிறேன். இப்படித்தான் ஜனங்கள் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறார்கள். எவனுக்கும் சுப காரியம் செய்தால் தான் ஸுகம்; அசுப காரியம் செய்தால் துக்கம்தான். பரம புருஷன் ஹ்ருதயத்தில் வீற்றிருந்து இப்படி ப்ராணிகளைத் தூண்டுகிறான். சுபாசுபங்களை பகவான் ஒருவனே அறிபவன். அவனின்றி எக்காலத்திலும்,

எவ்விடத்திலும், எதுவும் அசையாது. அவனே அனைவர்க்கும் நாதன். அவனுடைய செயலை ஒருவரும் மாற்ற முடியாது. வேதத்திலிருந்தே ஸகல தர்மங்களும் உண்டாகின்றன. வேதமே பிராணிகளுக்கு சாசுவதமான ஆதாரம். ஸாதுக்கள் வேதத்தையே கதியாகக் கொண்டவர்கள். பரம புருஷன் வேத வேத்யன். வேதோக்த கருமங்களை அனுஷ்டிப்போர்க்கே மனோரதம் பலிக்கும். வேதவிருத்தமாகச் செய்பவர் நரகமே புகுவார். இப்படியே பகவானுடைய ஆதி ஸங்கல்பம். கந்தர்வன் விமானத்தின் நிழலைத் தாண்டியது பெரும் பாவம்.

**45—ம் அத்.**

*பெரியோர்களுடைய நிழலைத் தாண்டக் கூடாதென்று சொல்லி, பிரம்மா ஆலய ப்ரவேசம், பிரதக்ஷிணம்— முதலியவற்றின் தர்மங்களை உபதேசிக்கிறார்.*

இந்திரன்— ஸ்வாமீ! விமானத்தின் நிழலைத் தாண்டுகிறவனுக்குப் பரிஹாரம் யாது?

பிரம்மா— ஸ்வபம் விபக்தம், திவ்யம், விசித்ரம்—என்று பகவானுடைய ப்ரதிஷ்டை மூன்று விதம். இவற்றுள் பின்னுள்ளதைவிட முன்னுள்ளதே மேலானது. இவற்றின் விஷயத்தில் செய்யும் நன்மைக்கு ஜன்மாந்தரத்தில் பலன்; தீமைக்கு ப்ரத்யக்ஷத்திலேயே பலன். எல்லா வஸ்துக்களுக்கும் சாயை உபச்சாயை என்று இரண்டு உண்டு. உபச்சாயை கண்ணுக்குத் தெரியாது; சாயைதான் தெரியும். பெரியோரின் நிழலைச் சிறியோர் தாண்டக் கூடாது. ஆசாரியனின் நிழலைச் சிஷ்யனும், பிதாவின் நிழலைப் புத்திரனும் தாண்டக் கூடாது. பெரியோரின் நிழலைத் தாண்டுவது அவர்களையே தாண்டுவதுபோல. பெரியோர் முன்னிலையில் கை கூப்பாமல் நின்றால் நரகம் கிடைக்கும். பெரியோரின் ஆஸனம், படுக்கை—முதலியவற்றைத் தாண்டுபவன் கெடுவான். பெரியோரின் நிழலைத் தாண்டிய பாபம் வைஷ்ணவர்களை வணங்கி னாலன்றிப் போகாது. ஏனெனில்,— வைஷ்ணவரிடத்தில்தான் பரம புருஷன் வஸிக்கிறான். வைஷ்ணவச் சாயையைத் தாண்டுகிறவன் புழுவாய்ப் பிறப்பான். நொண்டிகளும் குஷ்ட ரோகிகளும் விஷ்ணுச் சாயையைத் தாண்டியவராவார்; காலை மாலைகளில் பகவானுடைய ஸ்தானத்தை ப்ரதக்ஷிணம் பண்ணும்போது அந்த

ஸ்தானத்தின் நிழல் நீளமாயிருக்குமாகையால், அதை மூன்று பாகமாக்கி, கடைசி பாகத்தைத் தாண்டும்படியாக ப்ரதக்ஷிணம் செய்யலாம்.

பகவானுடைய நாம ஸங்கீர்த்தனம் நடப்பதை அவமதித்துச் செல்பவன் ஒரு ஜன்மத்திலும் மேன்மையடையான். பகவானையும் அவனுடைய ஸன்னிதியையும் பார்த்துவிட்டு நமஸ்காராதிகளைப் பண்ணுதிருப்பவர் பிறவிக் குருடராயும் அங்க ஹீனராயுமிருப்பர். பகவானுடைய ஸன்னிதிக்கருகில்கூட ப்ரதக்ஷிணமாகப் போகாதவன் அதம கதியையே அடைவான். பகவத் ஸன்னிதிக்கு ஏற்பட்ட துவாரத்தை விட்டு வேறு துவாரத்தின் வழியாகப் போகிறவனுக்கு ஸகல தர்மங்களும் கெடும்.

## 46—ம் அத்.

*பிரம்மா தனக்குக் கிடைத்த ரங்கவிமானத்தின் வரலாற்றைச் சொல்லி, ரங்கநாதனை தரிசித்சாலன்றி சித்திரஸேனனுக்கு ஸுகமில்லை என்கிறார்.*

இந்திரனே! கேளாய். ஸ்ரீரங்க விமானத்தை நான் பெருந்தவம் புரிந்து பெற்றேன்; மனுவுக்குக் கொடுத்தேன். இது மனுவிடமிருந்து இக்ஷ்வாகுவுக்குக் கிடைத்தது. இக்ஷ்வாகு வம்சத்திய ராமன் இதைத் தனக்கு ஹிதம் செய்த விபீஷணனுக்குக் கொடுத்தார். விபீஷணன் இதை லங்கைக்குக் கொண்டுபோகையில், காவேரி தீரத்தில் வைத்துப் பூஜித்தான்; பிறகு, இதை எடுக்கமுடியவில்லை. விபீஷணன் கவலைப்பட்டுக் கீழே வீழ்ந்து கதறியபோது,—"இந்த தேசம் மிக்க ரமணீயமாயுள்ளது. இக்காவிரி நதி தோழி போல எனக்கு இன்பமாயிருக்கிறது. நான் உன்னைப் பார்த்தவாறே இங்கு சயனித்திருந்து இன்புறுகிறேன். விபீஷணா! நீ கவலையில்லாமற் போ. அளவற்ற உன் ஐசுவரியத்தை அனுபவி." என்று சொன்னார் பகவான். விபீஷணன் லங்கை போனான். மனுஷ்யருடைய பாக்யவசத்தால் இவ்விமானம் இங்கிருக்கிறது. இது திவ்ய விமானம். இங்குள்ளோர் திவ்ய புருஷர்கள். இந்தக் காவிரியும் புஷ்கரிணியும் திவ்யங்களே. ஸ்வயம் வ்யக்தமான இவ்விமானத்தின் சக்தி அளவற்றது. சித்திரஸேனன் இதன் நிழலைத் தாண்டியதன் பலனை அடைந்தான். விஷ்ணு பூதேசுவரர் பலிஷ்டர்கள்; விரும்பியவாறு உருவம் எடுப்பவர்கள். இந்திரா! நீ

பலிஷ்டரோடு விரோதம் கொண்டது இருக்கட்டும்; சிவன்கூட அறியாமல் விஷ்ணு பூதேச்சுவரர்களோடு விரோதம் கொண்டார்! இனி இப்படிச் செய்யாதே.

இந்திரன்— ஸ்வாமி! என்னுடைய மித்திரன் சித்திரஸேனனுக்கோர் உபாயம் சொல்லும்.

பிரம்மா— ஸ்ரீரங்க விமானத்தை வணங்கிப் பூஜித்து ஸ்தோத்திரம் செய்வதுதான் உபாயம். ரங்கநாதன் பிரஸன்னராகி அவனுக்கு ஸுகத்தைக் கொடுப்பார்.

பிரம்மா இவ்வாறு சொல்லிப் போய்விட்டார். சிவனும் போனார். இந்திரன் சித்திரஸேனன் வீழ்ந்த இடம் போய் யாவற்றையும் சொன்னான். கந்தர்வனும் விரக்தி யடைந்து புண்ய தீர்த்தங்களில் நீராடி பூமண்டலம் முழுதும் யாத்திரை செய்தான்.

**47—ம் அத்.**

காச்யபர் சித்திரஸேனனுடைய கேள்விகளுக்கு உத்தரம் சொல்லி,—ரங்கநாதனை தரிசனம் பண்ணு—என்கிறார்.

சித்திரஸேனன் காச்யப மஹரிஷியை யடைந்து,—

1. பாபம் செய்து தவிப்போர் செய்ய வேண்டிய தென்ன?
2. அறியத்தக்க வஸ்து யாது?
3. சொல்லத்தக்க வஸ்து யாது?
4. என் செய்து நான் ஸுகித்திருப்பேன்?

என்று பணிவுடன் கேட்டான்.

காச்யபர்— பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனை நமஸ்கரித்துத் தியானித்து, அவனுடைய வைபவத்தைச் சொல்லிக் கொண்டே காலம் கழிப்பாயாக; உன் பாபம் நீங்கி அவனை அடைவாய்.

கந்தர்வன்— 1. பரமாத்மாவை நாம் அறிவதெப்படி?
2. பரப்ரம்மம் எங்குள்ளது?
3. அது எப்படியிருக்கும்?
4. பரம் எது; அபரம் எது?

காச்யபர்— பரிசுத்தமான மனதாலும், ஸத் கர்மத்தாலும், பிரஸன்னமான வார்த்தையாலும் பரப்ரம்மத்தை யறியலாம்.

கந்தர்வன்— 1. மனதுக்கு சுத்தி எப்படி யுண்டாகும்?
2. கர்மங்களுக்கு நன்மை எப்படி?
3. வார்த்தை எப்படி ப்ரஸன்னமாயிருக்கும்?

காச்யபர்—

1. ஆகார தோஷம், பொறுமையின்மை, அனேகம் விஷயங்களைப் பார்த்தல், சரீர சுத்தியின்மை இவற்றினாலேயே மனதுக்குக் கலக்கமுண்டாகிறது.[1]

2. விதித்ததைச் செய்யாததாலும், விலக்கியதைச் செய்வதாலும் காரியம் கெட்டதாகும்.

3. அஸத்யமாயும், கடுமையாயும், ப்ரயோஜனமற்றதாயுமுள்ளதே கெட்ட வார்த்தை.

ஈச்வரன் எப்பொழுதும் எல்லா ப்ராணிகளிடத்திலும் வியாபித்திருக்கிறான். அவன் உன்னிடத்திலும், என்னிடத்திலும், எல்லோரிடத்திலு முளன்.[2]

கந்தர்வன்— இருக்கும் வஸ்துதான் தென்படுமேயன்றி இல்லாதது தெரியாதாகையால்,— பகவான் இல்லை; இருந்தால் தென்படுவனன்றோ!

காச்யபர்— பகவான் எல்லோரிடத்திலு முளன். இந்திரியங்களைக் கொண்டே அறிய வேண்டிய உனக்கு அவன் இருப்பது தெரியாது. தெரியும் வஸ்துவாவது உனக்குப் பூர்ணமாகத் தெரியுமோ? தெரியும் வஸ்துவின் பின்புறம் உட்புறங்களை நீ அறிவையோ? எதிரிலுள்ள வஸ்துவிலும்கூட எந்த பாகத்தைக் கண் பார்க்கவல்லதோ அந்த பாகம்தான் தெரியும். இந்திரியங்களைக் கொண்டு தெரியலாவது இத்தனையே. க்ஞான த்ருஷ்டியால் பார்ப்பதாகில் யாவும் தெரியும். க்ஞான திருஷ்டியை எதுவும் மறைக்க முடியாது. ஞானம் மறைபடாதிருந்தால் எல்லாம் பிரகாசிக்கும்.

1. சுத்தி எப்படி—யென்ற கேள்விக்கு அசுத்தி யுண்டாவதைச் சொல்லி விளக்குகிறார். இது வியதிரேக ரீதி. மூன்று கேள்விகளுக்கும் ஸமாதானம் இப்படியே காண்கிறது.

2. கந்தர்வன் 2-ம் தடவை கேட்ட 2-ம் கேள்விக்கு இது உத்தரம்.

க்ஞானம் மறைவதற்குக் கர்மபந்தமே காரணம். தன்னிடமுள்ள அந்தராத்மாவைப் பார்க்க வல்லவனே பர ப்ரம்மத்தைப் பார்ப்பன்.

பிரம்மம் எப்படியிருக்கும் எவ்வளவாயிருக்குமென்று சொல்ல முடியாது.[1]

அழிவற்றது பரம்; அழிவுள்ளதே அபரம்.[2]

கந்தர்வனே! நீ புஷ்கரிணிக்குப் போய் ஸ்நானம் செய்து ரங்க விமானத்தில் பிரவேசி; அதில் பர ப்ரம்மத்தைப் பார்ப்பாய்; அவருடைய அனுக்ரஹத்தினல் உனக்கு சுத்தி யுண்டாகும்."

கந்தர்வன் காச்யபரின் உபதேசத்தினல் க்ஞான வைராக்கியங்களை அடைந்து புஷ்கரிணிக்குப் போய் ஸ்நானம் செய்து, பகவானை தரிசித்து, இசை, தாளம், ராகம்–இவற்றுக்கு ஒத்திருக்குமாறு இனிதாய் கானம் செய்தான். கந்தர்வனுடைய கானத்தைக் கேட்போர் யாவரும், பறவைகளும்கூட அசைவற்றிருந்தன. பகவானும் கந்தர்வகிதம் கேட்டு கந்தர்வனை அனுக்ரஹித்தார். உடனே கந்தர்வனுக்கு விமானம் முதலிய யாவும் வந்தன. கந்தர்வன் அதிலேறி இந்திரனிடம் போய்ச் சேர்ந்தான்.

இந்த கந்தர்வ சரிதம் கேட்போர்க்கு கந்தர்வனுடைய ஸ்தானம் கிடைக்கும்.

**48—ம் அத்.**

*சந்திர புஷ்கரிணியைச் சேர்ந்த தீர்த்தங்களையும் சொல்லுமாறு நாகதந்தர் வியாஸரைக் கேட்கிருர்*

**நாகதந்தர்—** மஹரிஷியே! இக்கதை ஆச்சரியமாயுள்ளது. அந்தப் புண்ய தீர்த்த புண்ய க்ஷேத்திரங்களுடைய மாஹாத்மியத்தைத் தெரிந்து கொண்டேன். வேதோப ப்ரம்மணங்களான இதிஹாஸ புராணங்கள் யாவும் உம்மிடமே பிறந்தன. பதார்த்தங்களின் தத்வம் உமக்கே தெரியுமாகையால், புஷ்கரிணியைச் சேர்ந்த தீர்த்தங்களையும் பற்றிச் சொல்லுவீராக.

**வியாஸர்—** பரத்வாஜர் தன் சிஷ்யர்களோடு தீர்த்த யாத்திரை செய்துகொண்டு காவேரிக்குப் போனர்; அனேகம் பக்ஷிகளா

1. 2-ம் தடவை கேட்ட 2, 3-ம் கேள்விகளுக்கு இது உத்தரம்.
2. 2—ம் தடவை கேட்ட நான்காம் கேள்விக்கு இது உத்தரம்.

லும் ரிஷிகளாலும் வஸிக்கப்பெற்று மனோஹரமான அந்த க்ஷேத்திரத்தையும், புஷ்கரிணியையும், அனந்த பீடத்தில் பகவான் சயனித்திருப்பதையும் பார்த்தார்.

**49—ம் அத்**

*புஷ்கரிணியைச் சேர்ந்த ஆறு தீர்த்தங்களை வால்மீகி பரத்வாஜருக்குச் சொல்லுகிறார்.*

பரத்வாஜர் தனக்கு ஆசாரியரான வால்மீகிபகவான் காவேரி தீரத்தில் வஸிப்பதையறிந்து அவரிடம் போய் நமஸ்காரம் முதலியவற்றைச் செய்து,—"தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்டு இங்கு பகவானையும் புஷ்கரிணியையும், ஆசார்யரையும் தரிசிக்க வந்தேன்." என்று தெரிவித்துக்கொண்டார்.

வால்மீகி— விபீஷணனால் ரங்க விமானம் இங்கு கொண்டுவரப்பட்டதுமுதல் பகவானுடைய தரிசனத்துக்காகவும் புஷ்கரிணியில் ஸ்நானத்துக்காகவும் இங்கிருக்கிறேன். நெடுநாளாக இங்கு அனேகம் ஆச்சரியங்கள் நேரிடுகின்றன.

பரத்வாஜர்— நீர் கண்ட அதிசயங்களைக் கேட்க விரும்புகிறேன்; சொல்லுவீராக.

வால்மீகி— இந்தப் புஷ்கரிணி மூன்று லோகத்திலும் பிரஸித்தி பெற்றது. இதன் பக்கலில் ஆறு தீர்த்தங்களுள்ளன.[1] ரிஷிகள், யோகிகள், ஸித்தர் முதலானோர் யாவரும் இந்த தீர்த்தங்களை ஸேவிக்கிறார்கள். அசுவத்தம், வகுளம், ஆம்ரம், கதம்பம், ஜம்புகம், பில்வம்—என்று ஆறு தீர்த்தங்கள். ஸகல பாபங்களையும் இந்த தீர்த்தங்களே போக்க வல்லன. ரங்க விமானம் இங்கிருந்து இரண்டு மூன்று கவ்யூதி தூரத்திலுள்ளது. இங்கு அசுவத்த தீர்த்தத்தில் நடந்ததோர் விஷயம் சொல்லுகிறேன்:—

**50—ம் அத்.**

*மாதவீ வ்ருத்தாந்தம்—அசுவத்த தீர்த்தத்தில் சவம் புரியும் மாதவியின் முன்னிலையில் யம தூதர்கள் ஓர் பெண்ணை ஹிம்ஸித்தனர்.*

1. எட்டு தீர்த்தமென்றும் ஒரு கணக்கு உண்டு. இது கடைசியில் ஆராய்ச்சி செய்யப்படும்.

வால்மீகி— ஸகல கர்மங்களையும் அறிந்தவளாய் ஒன்றிலும் பற்றில்லாதவளுமாய் மாதவி யென்ருெரு பெண் அசுவத்த தீர்த்தத்தில் நெடு நாளாகப் பெரிய தபஸ் செய்கையில், ஒரு நாள் " ஐயோ! ஐயோ! என்னைக் காப்பாற்று; காப்பாற்று! " என்று ஆகாசத்தில் மிகவும் தீனமான குரல் மாதவியின் காதில் வீழ்ந்தது. மாதவி நிமிர்ந்து பார்த்து, " பயப்படாதே! பயப்படாதே!" என்று சொன்னுள்; ஆகாசத்தில் யம படர்கள் ஒரு பெண்ணைப் பிடித்து ஹிம்ஸித்துக் கொண்டிருந்தனர்.

" நீ யார்? ஏன் இப்படி பீடிக்கப் படுகிருய்? ஸ்திரீ ஹிம்ஸை செய்யும் நீங்கள் யார்? ஸ்திரீ விஷயத்தில் உங்களுக்கு இவ்வளவு கொடுமை எப்படி யுண்டாயிற்று? பகவானே! இவளை ரக்ஷியும்" என்ருள் மாதவி. மாதவியினுடைய பேச்சு யம கிங்கரர்களுக்கு மிகவும் ஆச்சரியத்தை யுண்டாக்கிற்று; அவர்கள் சொல்லலானுர்கள்.

" பரம புருஷன் ஜகம் முழுவதையும் ஆள்கிருன். பிராணிகள் புண்ய பாபங்களைச் செய்து அவற்றின் பலனை அனுபவிக்கிருர்கள். கர்மத்துக்குத் தக்க பலனையே ஈசுவரன் கொடுக்கிருன். ஜீவன் இல்லாமல் சரீரம் அசையாதுபோல, ஈசுவரனில்லாமல் ஒன்றும் அசையாது. ஒவ்வொரு காரியத்துக்கும் ஈசுவரனே ஸாக்ஷியாயிருக்கிருன். அவனை மீறிப் போக முடியாது. இந்தப் பெண் மிகுந்த பாபம் செய்தவள். பாபிகளை தண்டிக்க பகவான் யமனை ஏற்படுத்தியிருக்கிருர். நாங்கள் யம தூதர்கள். இவள் செய்யாத பாபமே கிடையாது. நாங்கள் புண்ணியம் செய்தோர்க்கு ஸுகத்தையும், பாபிகளுக்குத் துன்பத்தையும் தருவோம்."

**51—ம் அத்.**

*மாதவி தன்னுடைய புண்ணியத்தைக் கொடுத்து அந்தப் பெண்ணை யமதூதர்களிடமிருந்து ரக்ஷிக்கிருள்.*

மாதவி— பிராணிகளின் கதி இவ்வளவு தான். ஈசுவரன் ஏற்படுத்திய புண்யபாப பலன்களை ஒருவரும் மீற முடியாது. ஆனுலும், இவள் என்னிடம் வந்து சேர்ந்தாளாகையால், இனி நீங்கள் இவளைப் பீடிக்கக்கூடாது. இவள் நற்கதியை அடைவதெப்படி? இவளுக்கு நான் செய்யலாவதென்? —சொல்லுங்கள்.

கிங்கரர்கள்— பகவானுடைய கட்டளையை எப்படி மீறுவது! மீறினல் தீயில் விட்டில்போல அழிய வேண்டியதே.

மாதவி— உண்மையே! நீங்கள் பகவானுடைய ஆக்ஞையை மீற முடியாது. ஆயினும், என்னுடைய புண்ணியம் இவளுக்காகட்டும். துன்பப் படுவோர், சரணுகதி செய்வோர்—முதலியவர்களை உயிரைக் கொடுத்தாகிலும் காக்கவேண்டும். இது மிக்க புண்ணிய க்ஷேத்திரம். இங்கு பகவான் பிரத்தியக்ஷமாயிருக்கிறார். இதில் செய்யும் வாஸம் ஸகல பாபங்களையும் போக்கும். இங்கு வஸிப்பதால் எனக்கு உண்டாகும் பலனில் ஒரு நாள் வாஸத்தின் பலனை இவளுக்குக் கொடுத்து விட்டேன்.

**52—ம் அத்.**

*மாதவியால் ரக்ஷிக்கப்பட்ட பெண் பிரம்மலோக மடைந்தாள்.*

மாதவி இப்படிச் சொல்லுகையிலேயே, அந்தப் பெண்ணின் கட்டுகள் அவிழ்ந்து அவள் விடுபட்டாள். இதுவரையில் அவளைத் துன்புறுத்தின வெல்லாம் இப்போது அவளுக்கு இன்பமாயின; அவளைப் பீடித்தவர் உபசரிக்கலாயினர்; பல விதத் துன்பத்தினல் புண்பட்ட அவளுடைய மேனி அழகு பெற்று விளங்கிற்று. ஆகாசத்தில் ஸஞ்சரிப்போரனைவரும் அவளுக்கு வணங்கினர். அவள் யாவராலும் உபசரிக்கப்பட்டு யமன் முன்னிலை யடைந்தாள். பாபிகளுக்கு க்ரூரனும், புண்ணியவான்களுக்கு ப்ரியனுமுள்ள யமன் அப்பெண்ணை வரவேற்று,—"பெண்ணே! நீ சிறிது புண்ணியமும் செய்திலை! இதற்குமுன் பனிரண்டாம் ஜன்மத்தில் ராத்திரி உன் வீட்டில் தங்குவதற்காக ஓர் வைஷ்ணவன் வந்தான். வைஷ்ணவன் வீட்டுக்கு வந்த வைபவத்தால் இப்போது உனக்கு நன்மை கிடைத்தது; ஸ்ரீரங்கத்தில் அசுவத்த தீர்த்தத்தில் வஸிக்கும் புண்ணியவதியான மாதவியின் ஒரு நாள் பலன் உனக்குக் கிடைத்ததால் நீ பிரம்மலோகம் சேருவாய்; நீ அங்கே ஸுகித்திரு."—என்றுன். அவள்[1] பிரம்மலோகம் சென்றுள். அசுவத்த தீர்த்தம் மிகவும் சிரேஷ்டமானது. பரத்வாஜரே! நீர் அசுவத்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்யும். இந்த மாதவீ வ்ருத்தாந்தம் கேட்போரின் பாபம் நீங்கும்.

1. இந்தப் பெண்ணின் பெயர் தெரியவில்லை.

**53—ம் அத்.**

*கண்டோபாக்யானம்: ரங்கநாதன் கண்டு மஹரிஷிக்கு தரிசனம் கொடுக்கிருர்.*

பரத்வாஜர்— இன்னும் அந்த அசுவத்த தீர்த்தத்தின் மாஹாத்மியத்தையே சொல்லும்.

வால்மீகி— ஒரு நாள் கண்டு மஹரிஷி ரங்கநாதனை தரிசித்துவிட்டுக் காவேரி தீரம் போனுர். அங்கே ரங்கநாதன்போலவே ஒரு புருஷன் தன் பத்னிகளோடும் பரிவாரங்களோடும் காவேரியில் விநோதமாக ஸஞ்சரிப்பதாய்த் தென்பட்டது. மஹரிஷி இதென்னென்று ஆச்சரியப்பட்டு அருகில் போய்ப் பார்த்து ஆநந்திக்கையில்,— "இப்பொழுது நீர் என்ன நினைத்தீர்?"— என்று கேட்டார் மஹா புருஷன். "இப்பொழுது ரங்க விமானத்தில் தரிசனம் கொடுக்க பகவானே இங்கு காவேரியில் ஸஞ்சரித்துக்கொண்டு தரிசனம் கொடுக்கிருர் போலும்! இப்படியும் ஓர் பாக்கியம் நேரிட்டதென்!— என்றே நினைத்திருந்தேன்"— என்ருர் மஹரிஷி.

**54—ம் அத்.**

*ரங்கநாதன் கண்டு மஹரிஷிக்கு அசுவத்த தீர்த்தத்தின் மாஹாத்மியத்தைச் சொல்லி மறைந்தார்.*

மஹாபுருஷன்— இந்த தேசமும் நதியும் எனக்கு ப்ரியமானவை. இந்த இடத்திலுள்ள ப்ரீதியால் நான் இங்கேயே வஸிக்கிறேன். விபீஷணன் வெகுவாய் ப்ரார்த்தித்தும்கூட எனக்கு இவ்விடத்தை விட மனமில்லை. காவேரிக் கரையிலும் மணல் மேட்டிலும் நான் விநோதமாய் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன்.

இப்படிச் சொல்லிக்கொண்டே மஹா புருஷன் புஷ்கரிணிக்குப் போய் அங்குள்ள ரிஷிகள் யாவரும் காணும்படியாக ஜலக்ரீடை செய்தார். அந்த அபூர்வத்தைக் கண்ட ரிஷிகள் மிகவும் ஆச்சரியமடைந்தனர். பகவான் புஷ்கரிணியை விட்டு அசுவத்த தீர்த்தத்துக்குப் போனுர்; அங்கு ரிஷிகள் தேவர்—முதலானோர் யாவரும் பக்தியோடு பூஜித்துக் கொண்டிருக்கையிலேயே அந்தர்தானமாய் விட்டார். அவரோடுகூட வந்தோரும் மறைந்தனர். அக்காட்சியை நினைத்து நினைத்து யாவரும் வியந்தார்கள்.

கண்டு மஹரிஷிமட்டும் பகவானைக் காணுத் துயரத்தால் புலம்பி ஆஹாரமுமின்றி இடம் விட்டுச் சலியாமலும் நெடு நாள் கிடந்தார். ஒரு நாள் ரங்கநாதன் பிரத்தியக்ஷமாகி— "மஹ ரிஷியே! வருந்தவேண்டாம்! இந்த அசுவத்த தீர்த்தம் எல்லாத் தீர்த்தங்களிலும் மேலானது. இதில் ஸ்நானம் செய்து ஒரு மாஸம் உபவாஸமிருந்து என்னை ஆராதித்தால் விஷ்ணு ஸாயுஜ்யம் கிடைக்கும்."— என்று சொல்லி மறைந்தார்; கண்டு மஹரிஷியும் அப்படியே செய்து கொண்டிருந்தார்.

**55—ம் அத்.**

ஸுகீர்த்தி உபாக்கியானம்: ஸேனையின் ரோகத்தைப் போக்கிக் கொள்வதற்காக கேஸர தீர்த்தத்திலுள்ள காச்யபரிடம் ஸுகீர்த்தி யென்னும் ராஜன் வந்தான்.

**வால்மீகி—** கேஸர தீர்த்தத்தில் காச்யப மஹரிஷி தபஸ் செய்து கொண்டிருந்தார். தன் ஸேனைக்கிருந்த ரோகத்தைத் தீர்த்த யாத்திரையால் போக்குவதற்காக ஸுகீர்த்தி யென்னும் காசிராஜன் கேஸர தீர்த்தத்துக்கு வந்தான்; காச்யபர் தபஸ் செய் வதையறிந்து ஸைனியத்தை வெளியே நிறுத்தி, மஹரிஷியிடம் போய்ப் பணிந்து நின்றான். காச்யபரும் நித்ய கர்மானுஷ்டானம் முடித்து ராஜனுடைய வரலாற்றை விசாரித்தார்.

**ஸுகீர்த்தி—** நான் காசி ராஜன்; ஸுஜலனுடைய புத்திரன்; ஸுகீர்த்தி.

**காச்யபர்—** உன் பிதாவை நான் அறிவேன். நீ இங்கே ஏன் தனியாக வந்தாய்? க்ஷேமமா? அல்லது, ஏதேனும் சிரமம் உண்டா?

**ஸுகீர்த்தி—** மஹரிஷியின் அனுக்ரஹத்தினால் க்ஷேமமே. தீர்த்த யாத்திரையாக ஸேனையோடு புறப்பட்டேன். மஹரிஷியின் நிஷ்டைக்கு உபத்ரவம் உண்டாகாவாறு ஸேனை வெளியே நிற்கிறது. ஸேனை வியாதியால் பீடிக்கப்பட்டுள்ளது.

**காச்யபர்—** ராஜ்ய காரியம் பார்ப்பவனுக்குத் தீர்த்த யாத்திரை நேர்ந்த உண்மை யாது?

**ஸுகீர்த்தி—** ஸேனையின் வியாதியைப் போக்குவதற்காகவே தீர்த்த யாத்திரை செய்கிறேன்.

**காச்யபர்**—நீ செய்தது நன்றே. உன் விருப்பத்தை இப்பொழுது எப்படி நிறைவேற்றுவேன்!

**ஸுகீர்த்தி**— மஹரிஷியை தரிசித்ததாலேயே நான் க்ருதார்த்தனானேன். ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி ஆசா பாசத்தினால் கட்டுண்ட எனக்கு ஹிதம் சொல்லுவீராக.

**காச்யபர்**— பகவானை ஆராதிக்காமல் முக்தி உண்டாகாது.

**ஸுகீர்த்தி**— யோகிகளுக்கும் தெரியாத பகவானை ஒன்றுமறியாத நான் எப்படி ஆராதிப்பது?

**காச்யபர்**— இந்திரியங்களுக்கும் அறிவுக்கும் எட்டாமல் நிர்மலனாய் கல்யாண குணவானுமாயுள்ள ஸர்வேசுவரன் தன்னைப் பார்க்க விரும்புவோர்க்காகவும் ஸகல ப்ராணிகளின் துன்பத்தைப் போக்குவதற்காகவுமே வாஸுதேவாதி மூர்த்திகளாக தரிசனம் கொடுக்கிறான். க்ஷேமகரங்களான அம்மூர்த்திகளை ப்ரம்மா முதலானோரும் பூஜிக்கிறார்கள். எந்த மூர்த்தியினிடம் உனக்கு மனம் செல்லுகிறதோ அதை ஆராதித்தால் விரைவில் உன் விருப்பம் நிறைவேறி, நீயும் பரமாத்மாவை அடைவாய்.

**ராஜா**— பரமாத்மினுடைய ஸ்வரூபம் யோகிகளுக்குக்கூட கால தோஷத்தினாலும் பாக்கியக் குறைவினாலும் தெரியாமற் போகுமே! என்னுடைய மனமோ விஷயங்களில் பற்றுள்ளது; க்ஞானமும் அல்பமாயுள்ளது; இந்திரியங்களும் வசத்திலில்லை. நான் என் செய்வேன்!

**56—ம் அத்.**

*பகவான் அர்ச்சா ரூபமெடுக்கும் காரணத்தைச் சொல்லுகிறார் காச்யபர்.*

**காச்யபர்**— பகவானுடைய மஹிமைக்கு அளவேயில்லை. எவ்வித தோஷமுமில்லாததாய் எல்லாக் கலியாணங்களும் நிறைந்ததுமாயுள்ளது விஷ்ணுவென்னும் பர ப்ரம்மம். சரா சரமான இந்த ஜகத்து அந்த ப்ரம்மத்தினிடமிருந்தே உண்டாயிற்று. லோகோபகாரமாக பகவான் அவதாரங்களை எடுக்கிறான்; பிராணிகளுடைய அக்ஞானத்தையும் மந்த ஸ்வபாவத்தையும் பார்த்து தயையினால்

தானுகவோ தேவனுகவோ, மனுஷ்யனுகவோ, இன்னும் எப்படியாகவோ ஆவிர்பவித்து ஆச்சரியமான காரியங்களைச் செய்து கொண்டு ஸ்வயம் ஸுகியாகவே யிருக்கிருன்; ஸாதுக்களால் பிரார்த்திக்கப்பட்டு லோகானுக்ரஹார்த்தமாகவும், ஜனங்களுக்கு தரிசனம் கொடுப்பதற்காகவும் ஆங்காங்கு பிம்பத்தில் பிரத்தியக்ஷமாக விளங்குகிருன்; எவனுக்கு எந்த பிம்பத்தில் எவ்வளவு விசுவாஸம் உண்டாகிறதோ அவ்வளவு பலனைக் கொடுக்கிருன்.

ஸுவர்ணம், தாம்பிரம், இரும்பு— முதலிய எந்த திரவியத்தினுல் செய்யப்பட்ட பகவத் பிம்பமானுலும் சிறந்ததே. அல்பமாயும், அழியக்கூடியதாயுமுள்ள அந்த திரவியம் பகவத் ஸான்னித்தியத்தினுல் சிறந்ததாயும் அக்ஷயமாயுமிருக்கும். இப்படி ஒரு விதமாயுள்ள வஸ்துவைத் தன்னுடைய ஸங்கல்பத்தினுலேயே வேறு விதமாக்கும் ஆச்சரியமான சக்தி பகவானுக்கு உண்டு. எல்லாவற்றுக்கும் காரணமாயும், உயர்வு தாழ்வென்னும் வித்தியாஸத்துடனேயே காரியங்களைச் செய்பவனுயுமுள்ள பகவானுக்கு ஒரு விதமாயுள்ள வஸ்துவை வேறு விதமாக்குவதில் யாதொரு பிரயத்தினமும் வேண்டா. ஸாமான்ய வஸ்துவால் செய்யப்பட்ட பிம்பமானுலும் அது பகவானுக்கு சரீரமாயிருக்கையாலே சிறந்ததாயும் க்ஷேமகரமாயு மிருக்கும். பகவான் பிம்பத்தில் பிரத்தியக்ஷன் என்னும் சாஸ்திரார்த்தத்தில் நிச்சயம் பாக்கியவான்களுக்கும் புண்ணியவான்களுக்குமேதான் பிறக்குமே யன்றிப் பிறர்க்குப் பிறவாது.

**57—ம் அத்.**

ஸ்வயம் வியக்தம், ஸித்த— முதலான பகவானுடைய அதிஷ்டான பேதங்களை விவரிக்கிருர் காச்யபர்.

ஸுகீர்த்தி— முனிவரே! நிர்குணமாயும், ஸகல சக்திகளுக்கும் குணங்களுக்கும் ஆச்ரயமாயுமுள்ள பகவான் ஸகுணமான ப்ராகிருத சரீரத்தை எப்படி ஸ்வீகரிக்கிருன்? ஸர்வ வ்யாபியாயுள்ளவன் பிம்பத்தில் மட்டும் விசேஷமாக ஸன்னிதானம் பண்ணுவதெப்படி?

காச்யபர்— பிராகிருதமான ஒரு பிம்பத்தை திவ்யமாக்கி அதில் ஸன்னிதி பண்ணுவதுதான் பகவானுடைய மஹிமையைக் காட்டுகிறது. ஈசுவரன் ஸகுண வஸ்துவை நிர்குணமாகவும், நிர்

குணத்தை ஸகுணமாகவும் செய்ய வல்லன்; மரம், கல், லோஹம், ஸ்தம்பம், கும்பம்— முதலிய எந்த வஸ்துவில் ஆவிர்பவிக்கும் படியாக ஸாதுக்களால் பிரார்த்திக்கப்படுகிறதோ அதில் அப்பொழுதே ஆவிர்பவிப்பன்; அந்தந்த பிம்பத்தில் யாரால் எப்படி பூஜிக்கப்படுகிறதோ அதற்கேற்ற பலனைக் கொடுப்பன்.

பகவானுடைய பிரதிஷ்டை ஸ்வயம் வியக்தம், ஸித்தம், மானுஷமென்று மூன்று விதமாயிருக்கும். அவன் தானாகவே ஆவிர்பவித்த பிம்பம் ஸ்வயம் வியக்தம். க்ஷீராப்தியிற்போல ரங்க விமானத்திலும் அவன் தானாகவே ஆவிர்பவித்தான்.

ஸித்தர்களாலும், மனுஷ்யர்களாலும் பகவத் ஸான்னித்யம் உண்டாக்கப்பட்ட மூர்த்திகள் ஸித்தமென்றும் மானுஷமென்றும் சொல்லப்படும். ராஜனே! எல்லா சாஸ்திரங்களிலும் இப்படியே சொல்லப்பட்டுள்ளது. இதை நீ மறக்கலாகாது.

**58—ம் அத்.**

> ஜம்பு தீர்த்த மாஹாத்மியம்: இந்திரனுடைய பிரம்மஹத்தி தோஷம் ஜம்பு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ததால் நீங்கிற்று.

**வால்மீகி—** காச்யப மஹரிஷியின் உபதேசம் கேட்டு ஸந்தோஷித்த ஸுகீர்த்தி தனக்கு ரங்கநாதனை தரிசனம் பண்ணி வைக்கும்படி ப்ரார்த்தித்தான். காச்யபர் ஸுகீர்த்தியை ஸைனியத்தோடு அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் போய் ஜம்பு தீர்த்தத்தை யடைந்ததும் சொல்லுகிறார்:—

"இந்த ஜம்பு தீர்த்தம் மிகவும் சிரேஷ்டமானது. இங்கு ஓர் ஜம்பு விருக்ஷம் இருக்கிறது. முன்பு இந்திரன் இந்த தீர்த்தத்தில் விஷ்ணுவைப் பூஜித்தான்: விருத்திராஸுரனுடைய வதத்தினால் நேரிட்ட பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்குவதற்காக இந்திரன் பூமண்டலம் முழுவதும் அலைந்தபோது அந்த தோஷம் அவனை நிழல்போலத் தொடர்ந்தது. இந்திரன் பிரமமாவினிடம் போய் ப்ரார்த்தித்தான். விஷ்ணு தரிசனம், விஷ்ணு நாம ஸங்கீர்த்தனம், புண்ய க்ஷேத்ர வாஸம், புண்ய தீர்த்த ஸ்நானம்— முதலியவற்றால் பாபம் நீங்குமென்றார் பிரம்மா. இந்திரன் பிருஹஸ்பதியோடு புறப்பட்டுத் தீர்த்த யாத்திரை செய்து புஷ்கரத்தில் மூன்று வருஷ

மும், கங்கா த்வாரத்தில் பத்து வருஷமும் வஸித்தான்; யமுனை, ஸாளக்ராமம்— இவ்விடங்களில் விஷ்ணுவையும், காசியில் சிவ பெருமானையும், ஸரஸ்வதி நதியில் ஸரஸ்வதியையும் பூஜித்தானுகி லும் பிரம்மஹத்தி தோஷம் நீங்கிற்றில்லை; புஷ்கரிணிக்குப் போய் இருபத்திமூன்று வருஷமிருந்து பிறகு, ஜம்பு தீர்த்தத்தில் விஷ்ணு வை ஆராதித்தான். விஷ்ணு ப்ரத்தியக்ஷமாகி, "உனக்கு வேண் டிய வரம் என்ன"—வென்று கேட்டார். "பிரம்மஹத்தி தோஷம் நீங்கவேண்டு"—மென்றான் இந்திரன். "இந்த ஜம்பு தீர்த்தம் மிகவும் உத்தமமானது. இதிலேயே ஸ்நானம் செய்து கொண் டிரு. உன் பாபம் போகும். இந்தத் தீர்த்தம் பாபத்தைப் போக்க வல்லதாகப் போகிறது."—என்று சொன்னார் விஷ்ணு.

"இந்திரன் பாபம் நீங்கியதும் ரங்கநாதனை தரிசித்துவிட்டு தேவலோகம் போனான்."

**59—ம் அத்.**

*ஜம்பு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ததும் காசி ராஜனுடைய ஸைனியத்துக்கு ரோகம் நீங்கிற்று.*

காச்யபர்— ஸுகீர்த்தி! இந்த ஜம்பு தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணு. இதில் ஸ்நானம் செய்தால் எல்லா மனோரதங்களும் நிறைவேறும்: புத்திர ஸம்பத்து உண்டாகும்; ராஜ்யமிழந்த ராஜன் மூன்று லோகத்தையும் ஆள்வான்; ஏழு ஜன்மத்தில் செய்த பாபமும் போய்விடும்; ரோகிகளின் ரோகம் நீங்கும். ராஜனே! இதில் உன் ஸைனியத்தோடு ஸ்நானம் பண்ணுவாயாக.

வால்மீகி— ஸைனியம் ஜம்பு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து வியாதி நீங்கி ஸௌக்யமாய் விளங்கிற்று. ஸுகீர்த்தியும் காச்ய பரும் அதில் ஸ்நானம் செய்து, எல்லோரும் ஆம்ர தீர்த்தம் போய் அதிலேயும் ஸ்நானம் செய்தார்கள். ஆம்ர தீர்த்தத்திலுள்ள ரிஷி கள் காச்யபரின் வரவறிந்து அவரை உபசரித்தனர். "திவ்ய கந்தம் வீசும் இந்த ஆம்ர தீர்த்தம் மிக்க விசேஷமாயிருக்கவேண்டும். இதன் வைபவம் யாது."—என்று கேட்டார் காச்யபர்; பார்கவர் என்னும் ரிஷி சொல்லுகிறார்.

60—ம் அத்.

*ஜீவாத்மா செய்யும் பாபத்தில் பரமாத்மாவுக்கு ஸம்பந்தம் எப்படி யென்னும் விஷயமாய் பிராம்மணனும் பிசாசியும் விவாதம் செய்தரெண்டு ஆம்ர தீர்த்தம் போனார்கள்.*

பார்கவர்— புஷ்கரன் என்னுமோர் பிராம்மணன் தீர்த்த யாத்திரை செய்துகொண்டு இந்த ஆம்ர தீர்த்தத்துக்கு வருகையில், புலி ரூபத்தோடுகூடிய ஒரு பிசாசீ அவனை விழுங்க வந்தாள். "என்னை எப்படிக் கொல்லத் துணிந்தாய்?"—என்று கேட்டான் புஷ்கரன்.

பிசாசீ— உன்னைக் கொல்லுவது என்னுடைய குற்றமாகாது; எனக்கு இந்தக் கொடிய ஜன்மத்தைக் கொடுத்த தெய்வத்தினுடையது.

புஷ்கரன்— ஸ்வதந்திரனை ஸர்வேசுவரனிடம் குற்றமே கிடையாது. புருஷன் கருமத்தைச் செய்து பலனை அடைகிறான்; ஈசுவரன் ஸாக்ஷியாயிருக்கிறான்.

பிசாசீ— பகவான் ஸர்வ வியாபியாயிருந்து ஸகலத்துக்கும் கர்த்தாவாயும் போக்தாவாயுமிருக்கிறானகையால், எல்லோருடைய சுபாசுப கர்மங்களுக்கும் அவனே கர்த்தா.

புஷ்கரன்— அப்படியல்ல. நீ சொல்லுகிறபடியானால், கர்மபலன் கர்த்தாவினுடையதென்ற நியாயத்தின்படி ஸர்வேசுவரனும் பலனை அனுபவிக்க நேரிடும்.

பிசாசீ— பரம் இல்லாமல் அபரமான இந்த ப்ரபஞ்சம் காரியம் செய்யாது. பகவான் அந்தராத்மாவாயிருந்து எல்லோரையும் ஆட்டுகிறானகையால், அவனே எல்லாவற்றுக்கும் ப்ரவர்த்தகன்.

புஷ்கரன்— எவ்வித தோஷமுமில்லாமல் தேஜோ ரூபியாயுள்ள ஈசுவரனுக்கும் அசுபமாய் த்ரிகுணமாய் ஜடமாயுள்ள ப்ரகிருதிக்கும் ஸம்பந்தம் ஏது? அது இருக்கிலன்றோ ப்ரகிருதி ஸம்பந்தத்தால் ஈசுவரன் கர்மம் செய்து பலனை அனுபவிப்பது!

பிசாசீ— நீ பிராம்மணனுயிருந்தும் பிரம்மத்தை அறிந்திலை; ஆசாரியர்களை உபாஸித்ததில்லை. உன்னுடைய ஜன்மம் வியர்த்தம்.

பிரம்மம் விசித்திரமான சக்தியுள்ளதாகையால், சுபாசுப காரியங்களைச் செய்யும், செய்யாமலுமிருக்கும்.

புஷ்கரன்— ஒரே நியந்தா செய்கிறன் என்பதும் செய்யான் என்பதும் பொருந்தவில்லையே!

பிசாசீ— காரியம் செய்யும் சக்தி ஈசுவரனுடையதென்றே ஸித்தாந்தம். ஆனல், அவனுக்குப் பலத்தில் ஸம்பந்தமில்லை.

புஷ்கரன்— ஸமீபத்தில் ஆம்ர தீர்த்தமுள்ளது. அங்குள்ள மஹரிஷிகள் இவ்விஷயத்தை நிர்ணயிப்பர். நீ சொல்லுகிற படியானல் என்னைச் சாப்பிடு; நான் சொல்லுகிறபடியானல், உன்னை வதம் செய்வேன்.

**61—ம் அத்.**

**புஷ்கரனும் பிசாசியும் மஹரிஷிகளிடம் போனவுடன் அங்கு ஓர் திவ்ய புருஷன் தோன்றினன்.**

பார்கவர்— பிராம்மணனும் பிசாசியும் சேர்ந்துவருவது கண்டு வியப்புற்ற மஹரிஷிகள் அவர்களை விசாரித்தனர்.

புஷ்கரன்— நான் தீர்த்த யாத்திரை ப்ராம்மணன். என்னை இந்தப் பிசாசீ பிடித்துக்கொண்டாள்; பிடித்த குற்றம் தன்னுடையதல்ல, தெய்வத்தினுடையதென்கிறள்; நம்முடைய ஸுக துக்கங்களுக்கு நாமே காரணம், தெய்வ மல்ல—என்றேன்; அதை மறுக்கிறள். இவ்விஷயத்தில் எங்களுள் ஜயிப்பவரால் தோற்பவர் வதம் செய்யப்படவேண்டும். இதில் மஹரிஷிகள் நிர்ணயம் சொல்லுவார்களாக.

பிசாசீ— எனக்குக் கர்ம வசமாக இந்த ஜன்மம் கிடைத்தது. எனக்கு க்ஞானம் போகவில்லை யானலும், ஜாதிக்கேற்ற செய்கையே இருப்பதால், இந்த ப்ராம்மணனைப் பிடித்துக்கொண்டேன்.

பார்கவர்— பிசாசீ இப்படிச் சொல்லுகையிலேயே அங்கு பெருங்கூட்டம் கூடிற்று. கூட்டத்தினிடையில் ஓர் திவ்ய புருஷன் தன் பரிவாரங்களோடும் பத்தினியோடும் ஆவிர்பவித்தான். மஹரிஷிகள் அவரைப் பணிந்து பூஜித்து—"யார்?" என்று விசாரித்தனர்.

**62—ம் அத்.**

*பிராம்மணன் பிசாசீ—இருவர்களின் விவாதத்தைத் தீர்க்குமாறு ரிஷிகள் திவ்ய புருஷனை வேண்டினர்.*

**பார்கவர்—** "இவள் என்னுடைய பத்நினி; நான் வேட்டைக்காக வருகையில் இங்கே கூட்டமாயிருப்பது கண்டு வந்தேன். உங்களுடைய தரிசனத்தால் தன்யனானேன்."—என்றார் திவ்ய புருஷன். அவர் இப்படிச் சொன்னாலும், மஹர்ஷிகள் அவரை பகவானாயும், பத்நினியை லக்ஷ்மியாயும், பரிவாரங்களை ஸித்த புருஷர்களாயும் தீர்மானித்தனர்.

**திவ்ய புருஷன்—** பிராம்மணனும் பிசாசியும் இங்கே சேர்ந்த விசேஷம் என்ன?

**ரிஷிகள்—** பகவானின்றி ஒன்றும் அசையாதாகையால் பிராணிகளின் ஸுகிருத துஷ்கிருதங்களுக்கு பகவானே காரண—மென்கிறாள் பிசாசீ. பரமாத்மா தோஷமே இல்லாதவன்; பிராணிகள் பிரகிருதி ஸம்பந்தமுள்ளவைகளாகையால் ஹேயங்களாய் சுபாசுபங்களைச் செய்து ஸுகதுக்கங்களை அநுபவிக்கின்றன—என்கிறான் பிராம்மணன். இந்த விவாதத்தை நீரே நிர்ணயிக்கவேண்டும். இதை நிர்ணயிக்க நீரே சக்தரென்று உம்முடைய ஆகிருதியே காட்டுகிறது. நீர் ராமனைப்போலவும் கிருஷ்ணனைப்போலவும் இருக்கிறீர். இவர்களுடைய விவாதத்தைத் தீர்க்காவிடில் இருவரும் வதம் செய்து கொள்வது நிச்சயம்.

**63—ம் அத்.**

*திவ்ய புருஷன் நிர்ணயம் சொல்லுகிறார்.*

**திவ்ய புருஷன்—** இருவர் சொல்லுவதும் சரியே. பரமாத்மா தோஷமில்லாதவன்—என்று பிராம்மணன் சொன்னது உண்மை. ஜீவாத்மா ஸகல தோஷங்களுக்கு பிறப்பிடம் என்று சொன்னதைமட்டும் சற்று விவரிக்கவேண்டும்.

பகவான் ஸகல பிராணிகளிடத்தும் இருக்கும் ரீதி எப்படியெனில்,—

பிராணிகளுக்குப் பலவிதமான கரணங்களையும், கர்மானு குணயான சரீரத்தையும், தன்னுடைய போக்த்ருத்வ கர்த் ருத்வ சக்திகளையும் கொடுத்துவிட்டு ஈசுவரன் இந்த ப்ரபஞ் சத்தை ஆள்கிறான். பிரபஞ்சம் ஈசுவரனுக்கு சரீரம்; பிர பஞ்சத்துக்கு ஈசுவரன் ஆத்மா.

ஜீவாத்மாவின் ஸுகதுக்கங்களுக்கு அதன் கர்மமே காரண மாகிறது. ஜீவாத்மா கர்மவசமாகவே எப்பொழுதும் நன்மை தீமைகளைச் செய்கிறது. இப்படி நன்மை தீமைகளில் ஜீவாத் மாவை ஈசுவரன் பிரேரணம் பண்ணுகிறான். பிரேரணம் மாத்திரம் ஈசுவரனுடையதேயன்றி ஜீவாத்மா செய்வதற்கெல் லாம் ஈசுவரன் கர்த்தாவல்ல.

நன்மை தீமைகளால் விளையும் ஸுக துக்கங்களைச் சேத னன் அனுபவிக்கிறானேயன்றி ஈசுவரன் அனுபவிக்கிறதில்லை. ஈசுவரன் சேதனனையும் அவனுடைய சரீரத்தையும் வியாபித் திருந்தாலும், சேதனனுடைய கர்மத்தில் ஸம்பந்தப் படாமலிருக்கிறான். சேதனன் தன் இஷ்டப்படி காரியம் செய்யுமாறு ஈசுவரன் உதாஸீனனாயிருந்து ஸாக்ஷியாகப் பார்த் துக்கொண்டிருக்கிறான்.

ஈசுவரன் ஒருவித பந்தமுமில்லாமல் ஸ்வயம் ஸுகியா யிருப்பவன். சேதனன் கர்மவச்யனாய் கரணங்களுக்கேற்ற போகத்தை யுடையவன். பகவானுடைய அனுக்ரஹத்தால் பராவர விபாக க்ஞான முண்டாகில் சேதனன் முக்தி பெறு வான்.

விசித்திரமான காரியம் செய்யும் சக்தி சேதனனுக்கே உண்டு. இல்லாவிடில், ஸகல சாஸ்திரங்களும் வியர்த்தமாய் விடும். காரியம் செய்யும் சக்தி சேதனனுடையதாயிருப்பதால் தான், "இது செய், இது செய்யாதே" என்ற விதி நிஷேத ரூபங்களான சாஸ்திரங்கள் பலனை நாடிக் காரியம் செய்யும் சேதனனையே உத்தேசித்து ப்ரவ்ருத்திக்கின்றன; ஈசுவரனை உத்தேசித்து சாஸ்திரங்கள் பிரவ்ருத்திக்கமாட்டா. நியந்தா வான ஈசுவரனுடைய ஆக்ஞா ரூபங்களான சாஸ்திரங்கள் ஈசு வரனிடத்தில் எப்படி ப்ரவ்ருத்திக்க முடியும்!

ஆகையால், காரியம் செய்யும் கர்த்ருத்வ சக்தி சேதன னுடையது; ஈசுவரன் சேதனனைக் காரியத்தில் பிரவ்ருத்திப் பிக்கிறன்—என்றே ஸித்தாந்தம். என்னுடைய அபிப்பிரா யம் இப்படி. மஹர்ஷிகளே! இதற்குமேல் நீங்களே நிர்ண யிக்க வல்லராகிறீர்.

இந்த ஸித்தாந்தத்தை யறிந்தார்களாகையால் பிசாசியும் பிராம்மணனும் மேன்மை பெறுவர்.

**64—ம் அத்.**

*பிராம்மணனும் பிசாசியும் இந்திர லோகம் சேர்ந்தார்கள். திவ்ய புருஷன் மறைந்தார். ரிஷிகள் ரங்கநாதனை தரிசித் தனர்.*

பார்கவர்— பகவானுடைய வார்த்தையைக் கேட்டு ரிஷி கள் ஸந்தோஷித்து, தங்களுக்குக் கிடைத்த பகவத் தரிசனம், தத்வ நிர்ணயம்—முதலிய பாக்கியங்களுக்குக் காரணமாயிருந்த பிசாசியையும் பிராம்மணனையும் புகழ்ந்து,— "இந்த ஆம்ர தீர்த்தத்தில் ஸ்நாணம் செய்யுங்கள். உங்களுக்கு இந்த ஜன்மம் நீங்கி மேன்மை யுண்டாகும்"—என்றனர். அவ்விருவரும் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தேவசரீரம் பெற்று, எல்லோருமறிய விமானத்திலேறி இந்திரலோகம் போனார்கள்.

திவ்ய புருஷன் தன்னை விட்டுப் பிரிய மனமில்லாத ரிஷிக ளோடு சிறிது நேரம் விநோதமாயிருந்து மறைந்தார். பகவா னுடைய பிரிவாற்றாது ரிஷிகள் நெடுநாள் சோகிக்கையில்,— "நீங்கள் வருந்தவேண்டா. நான் யோகிகளுக்கும் தென்ப டாதவனாயினும், எல்லோருக்கும் தென்படுவதற்காகவும் லோக க்ஷேமத்துக்காகவும் என் இச்சையாலேயே என்னைப் பூர்ண மாய்த் தெரியப்படுத்திக்கொண்டு ரங்க விமானத்தில் சயனித் திருக்கிறேன்"—என்று ஆகாசத்தில் வார்த்தை உண்டாயிற்று. ரிஷிகள் சோகம் நீங்கி, ரங்கவிமானம் போய் பகவானை தரி சித்து ஸ்தோத்திரம் செய்தார்கள்.

**65—ம் அத்.**

*திவ்ய க்ஷேத்திரத்தில் விசேஷமாக தானம் செய்யுமாறு ஸுகீர்த்திக்குக் காச்யபர் கட்டளையிட்டார்.*

பார்கவர்— ரிஷிகள் ரங்கநாதனை தரிசிக்கையில்,—"வேத மார்க ப்ரதிஷ்டாபனத்துக்காக நான் இங்கு சயனித்திருக்கிறேன். என்னை உபாஸிப்போரின் மனோரதம் ஸித்திக்கும். நீங்கள் எப்பொழுதும் முமுக்ஷுக்களாய் எனக்கு ப்ரியர்களுமாயிருப்பீராக"—என்றார் ரங்கநாதன். அது முதல் ரிஷிகள் இந்த ஆம்ர தீர்த்தத்திலிருந்துகொண்டே ரங்கநாதனை தினந்தோறும் பூஜித்து வருகிறார்கள். இப்பொழுதுகூடப் பூஜைக்குப் புஷ்பம் ஸித்தமாயிருக்கிறது. நீங்களும் தரிசனம் பண்ணுங்கள்.

வால்மீகி—பார்கவரின் சொல்படி காச்யபரும் ஸுகீர்த்தியும் ஸைனியத்தோடு ஆம்ர தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து ரங்கநாதனை தரிசித்தார்கள். "இந்தத் தீர்த்தம் மிகவும் சிரேஷ்டமாயுள்ளது. நான் இங்கு செய்யவேண்டியதென்ன? யாருக்கு என்ன கொடுக்க வேண்டும்?"—என்று காச்யபரைக் கேட்டான் ஸுகீர்த்தி.

"ஏழைகளுக்கு அன்னதானம், குடும்பிகளுக்கு கோதானம், நிலையில்லாதார்க்கு க்ஷேத்ரதானம், யாக்ஞிகர்களுக்கு ஸுவர்ண தானம், ஸந்ததியில்லாதார்க்குக் கன்யாதானம், ஜிதேந்திரியர்களுக்கு ஸத்வித்யை—இவைகளைச் செய்வது உத்தமம். பிராம்மணன் தானம் வாங்கவேண்டுமென்றும், க்ஷத்திரியன் எந்த ஆபத்திலும் தானம் வாங்காமலே கொடுக்கவேண்டுமென்றும் சாஸ்திரமே விதிக்கிறது"—என்றார் காச்யபர்.

**66—ம் அத்.**

*ஸுகீர்த்தி ஒரு கிராமத்தை நிர்மித்து விசேஷ தானங்களைச் செய்தான்.*

வால்மீகி—ஸுகீர்த்தியென்னும் அந்தக் காசிராஜன் நல்ல ஸந்ததியிற் பிறந்தவர்களாய், யாக்ஞிகர்களாய் வேத வித்துக்களாய், ஸன்மார்க நிஷ்டர்களுமாயுள்ள மூவாயிரம் பிராம்மணர்களுக்கு ஸகல தானங்களையும் செய்து ஒரு கிராமத்தை[1] அமைத்துக்கொடுத்துக் காச்யபரோடு அதைப் பார்க்கப் புறப்பட்டான்.

---

[1] இதே அத்யாயத்தில் ஸ்ரீரங்கம் தனியாக வர்ணிக்கப்படுவதால் ஸ்ரீரங்கம் ஸுகீர்த்தியால் நிர்மிக்கப்படவில்லையென்றும், ஆம்ர தீர்த்தத்தில் ஒரு புது கிராமம் அவனால் நிர்மிக்கப்பட்டதென்றும் தெரிகிறது. அந்த கிராமம் எதுவென்று ஆராய்ச்சி செய்யவேண்டும்.

வேத கோஷமும், ஆங்காங்கு யக்ஞங்களில் சொல்லும் ஸ்வாஹாகாரமும், வித்தியார்த்திகளின் வேதாத்தியயன சப்தமும், வித்வான்கள் செய்யும் சாஸ்திர வாதமும், புண்யாஹ கோஷமும், ஸ்திரீகளின் மங்கள த்வனியும், விளையாட்டுக் குழந்தைகளின் சப்தமும் இந்த கிராமத்தில் கேட்கப்பட்டன. நித்யோத்ஸவமாயுள்ள இந்த கிராமத்தைப் பார்த்து ஸுகீர்த்தி ஸந்தோஷித்தான். ராஜனுடைய வருகையறிந்து எல்லோரும் தோரணம், வாழை, த்வஜம்—முதலியவற்றால் வீடுகளையும், ஊரையும் அலங்கரித்து, பூர்ண கும்பம், வாத்திய கோஷம், ஜய சப்தம், ஆலத்தி, மதுரமான கீதம்—முதலியவைகளால் ராஜனை வரவேற்று உபசரித்தனர். ராஜன் மிகுந்த ஸந்தோஷத்துடன் எல்லோருக்கும் வஸ்திரம், ஆபரணம்—முதலியன கொடுத்து ரங்கநாதனை தரிசிக்கப் போனான்.

அங்கே, ஸாத்வத தர்ம மறிந்தவர்களாய், நல்ல ஸம்ஸ்காரம் பெற்றவர்களாய், க்ஞான வைராக்யங்களுள்ளவர்களாய், ஜபம் தியானம் முதலியவற்றிலேயே நோக்குள்ளவர்களுமான பிராம்மணர்கள் ராஜனை வரவேற்றனர்.

ராஜா அவர்களுக்கு விசேஷ திரவியம் கொடுத்து நமஸ்காரம் செய்து, விசித்திரமாய் நிர்மிக்கப்பட்டதும், சொக்காய் தலைப்பாகை—முதலியன தரித்த காவற்காரர்களால் காக்கப்பட்டதுமான கோபுரத்தில் பிரவேசித்து, ஒவ்வொரு ப்ராகாரத்திலும் பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்துகொண்டு குமுதன் முதலான கணநாயகர்களை தரிசித்து, உள்ளே போய் விஷ்வக்ஸேனரையும் நமஸ்கரித்து, ரங்க விமானத்தினுள் பிரவேசித்தான்.

**67—ம் அத்.**

*ஸுகீர்த்தி ரங்கநாதனை தரிசனம் பண்ணுகிறான்.*

விஷ்வக்ஸேனருடைய ஆக்ஞைபின்பேரில் அவருடைய பரிகரங்கள் ராஜனையும் ஸைனியத்தையும் ரங்கநாதன் ஸன்னிதியில் அழைத்துச் சென்றனர். முன்பு ஆம்ர தீர்த்தத்தில் காணப்பட்டவர்போலவே ஆதிசேஷன்மீது சயனித்திருக்கும்

ரங்கநாதனைப் பாதாதி கேசமாக தரிசித்து ஸ்தோத்திரம் செய்தான் ஸுகீர்த்தி.

## 68—ம் அத்.

*ரங்கநாதன் ஸுகீர்த்தியை அனுக்ரஹிக்கிறார்.*

அப்பொழுது ரங்கநாதன் சொன்னதாவது—"ராஜனே! உன்னை நான் அறிவேன். நீ என்னுடைய பக்தன். நானே ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணன். என்னுடைய தரிசனத்துக்காக நெடுநாள் பிரார்த்தித்த பிரம்மாவுக்கு நான் இந்த ரூபத்தோடு தரிசனம் கொடுத்தேன். பிரம்மா என்னை வெகு நாள் ஆராதித்தார். லோகானுக்ரஹார்த்தமாக நான் அயோத்தியில் உன் முன்னோர்களால்[1] நீண்டகாலம் ஆராதிக்கப் பெற்றேன். ராமன் என்னை விபீஷணனுக்குக் கொடுத்தபிறகு, இந்த நதியையும் தேசத்தையும் பார்த்து ஆசைகொண்டு இங்கேயே இருக்கிறேன். நீ என்னை ஆராதித்து விரும்பியதைப் பெற்றுக் கொள்."

பகவான் இப்படிச் சொன்னது கேட்டு, ஸுகீர்த்தி பெருமகிழ்வோடு வெளிவந்து விஷ்வக்ஸேனரையும் நமஸ்கரித்துக் கைகூப்பி நிற்கையில், ரங்க விமானம் தென்பட்டது; அது யாதென்று காச்யபரைக் கேட்டான்.

## 69—ம் அத்.

*காச்யபர் ஸுகீர்த்திக்கு விமானத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்.*

**காச்யபர்**— இதுதான் பகவானுடைய ஸ்தானம். பகவானுக்கு சயனம், ஆஸனம், குடை, பாதுகை, தலையணை—முதலிய ப்ரகாரங்களால் சேஷபூதமாயிருப்பது பற்றியே சேஷன் என்று பெயராயிற்று. ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீர்யம், தேஜஸ்—என்ற ஆறு குணங்களும் அநந்தனிடமே யுள்ளன. பூர்ணனும், அனந்தனுமிருப்பதால்

---

[1] இத்தால் ஸுகீர்த்தி ஸூர்ய வம்சத்தரசன் என்று தெரிகிறது.

இவன் அனந்தன் எனப்படுகிறுன். இந்த ஆதிசேஷன் பகவானுடைய ஆதார சக்தி. ஸப்த த்வீபம், ஸப்த ஸமுத்திரம்—முதலியனவோடு கூடிய பூமண்டலம் அநந்தனுடைய சிரஸ்ஸில் நிற்கின்றன. சேஷனே பகவானுக்கிருப்பிடமான விமானமாகப் பரிணமித்திருக்கிறுன். இந்த விமானம் என்றைக்கும் அழியாது. உன் பாக்கியவசத்தால் இது உனக்குத் தென்பட்டது. இந்த விமானத்துக்கே ரங்கம் என்று பெயர். இதை ஸாமான்யமாக நினைப்பவன் நரகமே புகுவான். உத்கிருஷ்டமான வஸ்துவைத் தாழ நினைக்கில் மஹான்களுக்கும் அனர்த்தம் விளையும். திவ்யமாயுள்ள இந்த ரங்க விமானம் ஸகல வேதமயமானது. யுகந்தோறும் விஷ்ணுவுக்கு வர்ணபேதம் உண்டாவதுபோல இதற்கும் வர்ணபேதம் உண்டு. காலத்துக்கேற்ப, இது அளவிலும் குறைவுபடும். கலியுகம் வந்தவாறே யாவும் தலைகீழாய்க் கிடக்கும்: ஜனங்களுக்கு ஸாதுக்களிடம் விபரீத புத்தியுண்டாகும்; அஸத் ஸத்தாயும், உத்கிருஷ்டம் நிக்ருஷ்டமாயும் மாறும்: சூத்ரன் பிராம்மணனுவான்; பிராம்மணன் சூத்ர தர்மத்தை அநுஷ்டிப்பான்; பாரியை பர்த்தாவையும், சிஷ்யன் ஆசாரியனையும் தியஜிப்பர்; யக்ஞம், தானம், தபஸ்—முதலியன செய்யும் ஸாதுக்கள் பரிஹஸிக்கப்படுவார்கள்; தேவர்க்கும் தேவனும் விஷ்ணுவை எல்லோரும் த்வேஷிப்பர். இந்த ரங்க விமானம் நித்யமாயும், த்ருவமாயும், அக்ருதமாயுமுள்ளது. காலவசத்தால் இதை மாறுதலாக நினைப்பவன் நரகத்தை யடைவான்; இதை யதார்த்தமாக நினைத்து நமஸ்காராதிகளைப் பண்ணுபவன் சுத்தனுயிருப்பன்.

## 70—ம் அத்.

*ஸுகீர்த்தி ரங்கனுதனுக்குப் பல தேசங்களை ஸமர்ப்பித்து வைகுண்ட லோகம் சேர்ந்தான்.*

வால்மீகி— ராஜா ரங்கவிமானத்துக்கு ப்ரதக்ஷிண ப்ரணுமங்களைச் செய்து வெளியே போனுன்.

இந்த தேசத்துக்குத்தெற்கில் ஒரு பர்வதம்[1] இருக்கிறது. ஸுகீர்த்தி ஸேனையோடும் காச்யபரோடும் அந்தப் பர்வதத்தி

1 திருச்சி மலைக்கோட்டையாயிருக்கலாம்.

லேறி அதன் உச்சியிலிருந்து நாற்புறமும் பார்த்தான். காவேரி நதியும் தோட்டங்களும் தென்பட்டன. பர்வதத்தின் உச்சியிலிருந்து கண்ணுக்கெட்டிய தூரம் வரையிலுள்ள தேசத்தை ஸுகீர்த்தி ரங்கநாதனுடையதாகச் செய்து, அனேகம் தாஸதாஸிகளையும் ஸமர்ப்பித்து, அந்த மலைக்கு மேற்கிலேயே பெரிய நகரம்[1] அமைத்துக்கொண்டு அதிலேயே வஸித்திருந்தான்.

தினந்தோறும் ரங்கநாதனை தரிசித்துக்கொண்டிருந்து, நெடுநாள்கழித்து தன்னுடைய பிள்ளை தக்ஷன் என்பவனுக்குப் பட்டம் கட்டி விஷ்ணுபதத்தையடைந்தான் ஸுகீர்த்தி; அவனுடைய பட்டணம் இன்னும் தெரிகிறது.

**வியாஸர்**— பரத்வாஜருக்கு வால்மீகி சொன்ன ஆம்ர தீர்த்த மாஹாத்மியத்தைக் கேட்போர் ஸுகப்படுவர்.

## 71—ம் அத்.

கதம்ப தீர்த்த மாஹாத்மியம்: வால்மீகியும் பரத்வாஜரும் கதம்ப தீர்த்தம் போகிறார்கள்.

ஆம்ர தீர்த்தத்துக்கு ஸமீபத்தில் பெரிய கதம்ப விருக்ஷம் ஒன்று தென்பட்டது. அதன் பக்கலில் வேதகானம் கேட்டது. பரத்வாஜர் "அவ்விடம் யாது? அங்குள்ள விசேஷம் என்ன?"—என்று வால்மீகியைக் கேட்டார். "அது கதம்ப தீர்த்தம்"—என்று சொல்லி, வால்மீகி பரத்வாஜரை அங்கே அழைத்துக்கொண்டு போனார். வால்மீகியைக் கண்ட அவ்விடத்து ரிஷிகள் பக்தியாய் வரவேற்று உபசரித்தார்கள். வால்மீகி ரிஷிகளோடுவீற்றிருந்து நாற்புறமும் பார்க்கையில், அருகே யூபஸ்தம்பங்களும், பாத்திரங்களும், வேதிகளும் இருக்கையால்,— "இது யாகம் நடந்த இடமா?"—என்று கௌதமரைக் கேட்டார், மிதிலாதிபதியான ஜனகர் அங்கே யாகம் செய்ததாக கௌதமர் சொல்ல, அந்த யாகத்தின் விவரம் சொல்லுமாறு வேண்டினார் வால்மீகி.

[1] உறையூராயிருக்கலாம். இப்புஸ்தகத்தின் கடைசியில் இவ்விஷயங்கள் தீர்மானிக்கப்படும்.

## 72—ம் அத்.

*கதம்ப தீர்த்தத்தில் ஜனகர் யாகம் செய்கையில் நாய் தின்ற வஸ்துக்கள் உபயோகிக்கப் பட்டதால் ரிஷிகளுக்கு மந்திரம் மறந்துபோயிற்று.*

கௌதமர்—ஜனகர் இவ்விடத்தில் பெரிய யாகம் செய்தார். ரித்விக்குகளும் மற்றவர்களும் ராத்திரி அயர்ந்து தூங்குகையில் யக்ஞவாடம் திறந்திருந்ததால், நாய் உள்ளே புகுந்து நெய், தயிர், பால் முதலியவற்றைத் தின்றும் முகர்ந்தும் சென்றது. ரித்விக்குகள் இவ் விஷயம் தெரியாமல் நாய் தின்று மிஞ்சின வஸ்துக்களைக் கொண்டே யாகத்தை நடத்துகையில், அவர்களுக்கு மந்திரம் மறந்து போயிற்று; வேதங்களும் மறைந்தன. எல்லோரும் யாக்ஞிகரான காச்யபரை மந்திரத்தைச் சொல்லுமாறு கேட்டனர்; அவருக்கும் தெரியவில்லை; "எல்லா யாகங்களும் என்னிடமிருந்தே உண்டானதாகக் கருதப்படும் எனக்குக்கூட மந்திரம் மட்டு மல்லாமல், பிரயோகமும் முன்பு கற்ற வித்தைகள் யாவும் மறந்து போயின"—என்றார். ஒருவருக்கும் ஒன்றுமே தெரியாமல் யாகத்தில் பெரிய கலக்கம் நேரிட்டது.

## 73—ம் அத்.

*கதம்ப விருக்ஷத்தைப் பூஜித்தால் மந்திரம் ஞாபகத்துக்கு வருமென்று ஒரு பிராம்மணன் வந்து சொன்னான்.*

யஜமானரான ஜனகர்—'யாகம் தடைபட்டதைக் காப்பார் ஆர்!' என்று கலங்கினார். யாகத்தில் ஆராதிக்கப்படும் பகவானையே சரணாகதி பண்ணவேண்டுமென்று தீர்மானித்து எல்லோரும் பகவானை தியானம் செய்தார்கள். அப்பொழுது தன் சிஷ்யர்களுக்கு வேதாத்தியயனம் செய்து வைத்துக்கொண்டு அங்கே வந்த ஒரு பிராமணன் எல்லோரும் யாகத்தை நிறுத்தி மௌனமாயிருப்பதை விசாரித்தான். யாகத்தினிடையில் மந்திரம் மறந்து போயிற்றென்று அங்குள்ளோர் சொன்னார்கள்.

"நீங்கள் களைப்புற்றபோது ஏதேனும் நடந்திருந்தாலும், அருகிலுள்ள கதம்ப விருக்ஷம் நெடுநாளாயிருப்பதாகையால் அதற்கெல்லாம் தெரியும்; உலகத்தில் நடக்கும் காரியங்களுக்கு மரங்களும் ஸாக்ஷியாயிருக்கின்றன; எல்லாவற்றுக்கும் மனுஷ்யர்களே ஸாக்ஷி யென்றல்ல; ஸாக்ஷிக்குத் தேவையாயிருப்பது க்ஞானமேயன்றி ஜாதியல்ல. மஹரிஷிகளால் பூஜிக்கப்படும் இந்த விருக்ஷத்துக்கு க்ஞான

முண்டாகையால், இதனைப் பூஜித்து ப்ரார்த்தியுங்கள்"—என்றான் பிராம்மணன்.

**74—ம் அத்.**

*ரிஷிகள் கதம்ப விருக்ஷத்தைப் பூஜித்தார்கள்.*

வால்மீகி—அங்கே வந்த பிராம்மணன் யார்?

கௌதமர்—யாகத்தை நடத்திவைக்க ரங்கநாதனே பிராம்மண ரூபமாக வந்தார். அவர் கதம்ப விருக்ஷத்திலேறி உட்கார்ந்து ரிஷிகள் செய்த பூஜையைப் பெற்றுக்கொண்டார். ரிஷிகள் விருக்ஷத்துக்கு விசேஷமாகப் பூஜை, நைவேத்தியம், பிரதக்ஷிணம், நமஸ்காரம், ஸ்தோத்திரம் முதலியன செய்து தங்களை ரக்ஷிக்கும்படி பிரார்த்தித்தார்கள். பகவான் மரத்துக்குள் லிருந்து கொண்டே "உங்களுக்கு வேண்டும் வரம் யாது?" என்றார். "மந்திரம் மறந்து போனதால் ஜனகருடைய யாகம் தடைபட்டது; மந்திரம் மறந்து போன காரணத்தைச் சொல்லி எங்களுக்கு வேதங்களையும், மந்திரங் களையும் அனுக்ரஹிக்கவேண்டும்." என்று ரிஷிகள் பிரார்த்தித்தனர்.

**75—ம் அத்.**

*ஜனகருடைய யாகம் நன்றாய் நடந்தது.*

விருக்ஷம்—நீங்கள் களைப்புற்றுத் தூங்குகையில் நாய் வந்து ஹவிஸ் முதலிய வற்றைத் தின்றது; நாய் தின்ற சேஷத்தால் யாகம் செய்கையில் மந்திரங்கள் மறந்து போயின. யாகத்துக்கு ஏற்பட்ட யஜமானன் வஸ்து முதலிய யாவும் சுத்தமாயிருக்கவேண்டும்; எவ்வளவு அப்யஸிக்கப்பட்ட வித்தையானாலும் அசுசியாயிருக்கை யில் நிலைக்காது. சுத்தர்களுக்கே வித்தை தரிக்கும். யாகம் தடை பட்டதற்கு ப்ராயச்சித்தம் செய்து சுத்தமான வஸ்துக்களால் யாகத்தை நடத்துங்கள். அப்பொழுது மந்திரம் வேதம் முதலியன உங்களுக்கு ஸ்புரிக்கலாகும்.

கௌதமர்—இப்படிக் கதம்ப விருக்ஷம் சொன்னவாறே ரிஷிகள் யாகம் செய்தனர். யாகம் நன்றாய்ப் பூர்த்தி யடைந்தது. பிராம்மணன் விருக்ஷத்தை விட்டிறங்கி வந்ததும் அவனை எல்லோரும் பூஜித்தார்கள்.

**76—ம் அத்.**

*பிராம்மணன் ரங்க விமானத்தில் பிரவேசித்தான்.*

ரிஷிகள்—ஸ்வாமி! மரிப்பவன் வாயில் அமிருதம் விழுதல்போல இன்று எங்களுக்கு நீர் கிடைத்தீர்! நீர் யார்? பரம புருஷனுடைய வலமார்பினில் வடிவாய் வாழும் மங்கையை உம்முடைய மார்பினில் காண்கிறோம்! நீர் எங்கே போகிறீர்?

பிராம்மணன்—யாகத்தைக் காக்கவே வந்தேன். நான் இருப்பது ஜகத் பிரஸித்தமான ரங்க விமானம். நீங்கள் ஒரு பொழுதும் நிஷ்டை தவறுதிருங்கள்.

கௌதமர்—பகவான் இப்படிச் சொல்லிக்கொண்டே ரங்க விமானத்தில் பிரவேசித்தார். ரிஷிகள் அவரைப் பின் தொடர்ந்து ரங்க விமானம் போய் தரிசித்தார்கள். "இந்த தேசத்தில் வேத கோஷமும் ரிஷி வாஸமும் எப்பொழுதும் இருக்கு" மென்று ரங்க நாதன் ரிஷிகளுக்கு வரம் கொடுத்தார். வால்மீகி முனிவரே! இப்படியான மஹிமை வாய்ந்த இக் கதம்ப தீர்த்தத்தில் இன்று எங்களுக்கு நீர் தரிசனம் கொடுத்ததால் நாங்கள் தன்யரானோம்.

வியாஸர்—கௌதமரிடம் கதம்ப தீர்த்த மாஹாத்மியத்தைக் கேட்ட வால்மீகி பரத்வாஜரை அழைத்துக் கொண்டு பில்வ தீர்த்தம் போனார். கதம்ப தீர்த்தம் சிரேஷ்டமானது; ஸம்ஸாரிகளுக்கு அதுவே சரணம், அதில் ஒரு நாள் வஸித்தாலும் பாபம் போகும்.

## 77—ம் அத்.

பில்வ தீர்த்த மாஹாத்மியம்:— லோமகோபாக்கியானம்.

வால்மீகி மஹர்ஷி பரத்வாஜரை அழைத்துக்கொண்டு மஹா புண்ணியமான பில்வ தீர்த்தத்துக்குப் போனார். அங்கே பெரிய பில்வ விருக்ஷம் இருக்கிறது. அந்த விருக்ஷத்தைப் பூஜித்தே அனேகம் அரசர்கள் ராஜ்யஸ்ரீயை அடைந்தனர்:— ராஜ்ய மிழந்த இந்திரன் ராஜ்யத்தை அடைந்தான்; மைத்ரேயி, கார்கி என்ற பிராம்மணிகள் மேன்மை பெற்றார்கள்; ஆர்ஷிஷேணன் சுத்தனானான். யார் யார் என்ன பலனை விரும்பிப் பூஜித்தாலும் பில்வ விருக்ஷம் அதைக் கொடுக்கவல்லது. வாலகில்யர், தந்தோலூகர், வைகானஸர் முதலானோரும் அந்த பில்வ மூலத்துக்கே போகிறார்கள். பிரம்மா அங்கே யாகம் செய்தார். அந்த வேதியும் யூப ஸ்தம்பமும் இன்னும் இருக்கின்றன. முன்பு அங்கே நடந்த தொரு விருத்தாந்தம் சொல்லுகிறேன்; கேளுங்கள்:—

ஸோமகன்[1] என்று ப்ரஸித்தனான ராஜா பலவித யாகங்களையும் தான தர்மங்களையும் செய்துகொண்டு ஜனங்களுக்கு ஹிதனாயிருந்தான். அவனுக்கு வயது அறுபதாயிற்று.

## 78—ம் அத்.

*ஸோமகன் தனக்குப் புத்திர பாக்கியம் இல்லாமைக்கு வருந்துகிறான்.*

ஸோமகன் தனக்கு முதுமை வந்ததையும் ஸம்ஸாரிகளின் வாழ்க்கையையும் கண்டு வருந்தி, ரிஷிகள் புரோஹிதர்கள் முதலான பெரியோரை வரவழைத்து, "நீங்கள் லௌகிகங்களாயும் வைதிகங்களாயுமுள்ள எல்லா நியாயங்களையும் நன்கறிந்தவராகிறீர்கள். நான் பிரஜைகளை தர்மமாகப் பரிபாலித்தும், சாஸ்திரங்களை அப்யஸித்தும், யாகம் முதலியன செய்தும், பெரியோரைப் பூஜித்தும் எனக்குப் புத்திர பாக்கியம் உண்டாயிற்றில்லை. புத்திர லாபத்துக்காகவே செய்த தர்மங்களெல்லாம் வீணாயின. ஆனால், சாஸ்திரப்படி செய்த காரியத்துக்குப் பலன் தப்பாதாகையால், எனக்கு ஸந்தானம் இல்லாமைக்குக் காரணம் என்னுடைய பாக்கியம் தவிர வேறல்ல. புத்திரவான்கள் செய்யும் காரியங்களுக்குத்தான் பலனுண்டு. புத்திரனில்லாதார்க்கு நற்கதியில்லையென்று சாஸ்திரம் சொல்லுவதால், எனக்கு அது உண்டாகும் வகையைச் சொல்லுங்கள்"— என்றான்.

## 79—ம் அத்.

*பிராம்மணர்கள் ஸோமகனை யாகம் செய்யச் சொன்னார்கள்.*

பிராம்மணர்கள்—ஆத்மா ஸத்யமாய், பரமாய், சுத்தமாய், விபுவாய், ஸர்வ வியாபியாய், த்ருவமாயிருக்கும். ஆத்மாவுக்கு ப்ரகிருதி ஸம்பந்தம் கர்மத்தாலுண்டாவது. கர்மம் அனேகமாகில் ஜன்மமும் அனேகமாயிருக்கும். தேச காலங்களின் ஸ்வரூபத்துக்கேற்ப பரிமாணத்தில் பேதம் ஏற்படுவதுபோல, கர்மங்களுக் கேற்ப ஜன்மத்திலும் பேதமுண்டு. பலனை விரும்பிச்செய்யும் கர்மம் பலனைக் கொடுத்து உடனே நசிக்கும். கர்மம் பலனைக் கொடுத்து அழிய வேண்டுமேயன்றி வேறு எவ்விதத்திலும் அழியாது. ஆத்மா பல ஜன்மத்திலும் செய்த சுபா சுபங்களின் பலனை அவசியம் அனுபவிக்க வேண்டி

1. 39-ம் அத்யாயத்தில் பிரம்மஹத்தி தோஷத்துக்குக் காரணமாயிருந்த ஸோமகன் என்னும் ராஜனைவிட இந்த ஸோமகன் வேறாயிருக்க வேண்டும்.

யது. இந்த சரீரத்தோடு இந்த ஜன்மத்தில் செய்யும் காரியமே நம்மால் அறியப்படுகிறதில்லை. முன் க்ஷணத்தில் நடந்தது மறு க்ஷணத்தில் மறக்கப்படுகையில், ஜன்மாந்தரத்தில் நடந்தது எப்படித் தெரியும்! ஆதலால், ராஜனே! இந்த ஜன்மத்தில் உனக்குப் புத்திர பாக்கியம் இல்லாமை ஜன்மாந்தர காரணத்தைப் பற்றியிருப்பதாகையால், உனக்குப் புத்திர பாக்கியம் இல்லாமைக்கு காரணம் இருப்பது நிச்சயம். சுப காரியம் அசுபத்தை எரித்துவிடும். காரியம் ஸித்தியாதபோது மேலும் மேலும் முயற்சி இருந்தால் பலன் தப்பாது.

ஸோமகன்—ஸந்ததி யுண்டாவதற்காக நான் செய்ய வேண்டியதென்ன?

பிராம்மணர்கள்—பரம புருஷனை யாகங்களால் ஆராதித்தே எல்லோரும் ஸித்தி பெற்றனர் :— மாந்தாதா நற்கதியடைந்தான்; துந்துமாரன் என்னும் ராஜரிஷி நூறு புத்திரர்களைப் பெற்றான்; திலீபன் அளவற்ற ஐசுவரியத்தையும் நூறு புத்திரர்களையும் லபித்தான்; ஸகரனுக்கு அனேக ஆயிரம் புத்திரர்கள் உண்டாயினர்; தசரதன் ஸர்வேசுவரனையே புத்திரனுகப் பெற்றான்; ஜனகர் என்னும் ராஜரிஷி ஐசுவரியத்தை அனுபவித்து யோகியானர். இப்படி எல்லோரும் பகவானை யாகாதிகளால் ஆராதித்தே ஐசுவரியத்தையும் ஸந்ததியையும் அடைந்தனர். இப்படி ஆராதிப்பவர்களின் கீர்த்தி சாசுவதமாயிருக்கும். யாரிடத்தில் பகவான் ஸந்தோஷமடைகிறானே அவனுக்குப் புத்திர பாக்கியமும் பராக்ரமமும் தப்ப மாட்டா. ஸோமகா! நீ உயர் குலத்துதித்த வீரன். புத்திரனை விரும்பி பகவானை ஆராதிப்பாயாக. உன் விருப்பத்தை பகவான் நிறைவேற்றுவான். நற்காரியங்களுக்கு இடர்கள் பல உண்டாகையால், இப்பொழுதே யாகத்தை ஆரம்பம் செய்.

வியாஸர்—பிராம்மணர்கள் சொன்னதைக் கேட்கும்போதே தனக்கு குணவானும் ரூபவானுமாயுள்ள புத்திரன் பிறந்துவிட்டதாக நினைத்தான் ஸோமகன்.

**80—ம் அத்.**

*ஸோமகனுடைய யாகத்துக்கு மார்க்கண்டேயர் வந்தார்.*

ஸோமகன் பிராம்மணர்களைக்கொண்டு யாகம் நடத்துகையில், அவனைப் பார்க்கப் பல திக்குகளிலிருந்தும் மஹரிஷிகள் வந்தனர்.

மார்க்கண்டேயரும் தம்முடைய சிஷ்யர்களோடு வந்தார். ஸோமக னும், யாகத்திலிருந்த ரித்விக்குகள் முதலானோர் யாவரும் மார்க் கண்டேயரை பக்தியாய் வரவேற்றுப் பூஜித்தார்கள். ஒருவருக்கொரு வர் க்ஷேமம் விசாரித்துக் கொண்டார்கள்.

ஸோமகன்—எங்கே யிருக்கிறீர்? எங்கிருந்து வருகிறீர்? தீர்த்த யாத்திரையாக வந்தீரா?

மார்க்கண்டேயர்—ஆச்ரமம் ஹிமாலயத்திலுள்ளது. தீர்த்த யாத்திரையாக இங்கே வந்தேன். நீ ஸன்மார்க நிஷ்டனாயிருப்பதை எல்லோரும் மெச்சுகிறார்கள். ஸந்ததிக்காக நீ இங்கே யாகம் செய்வது கேட்டு வந்தேன். இப்படி யாகமும் தானமும் செய்யுமுனக்கு ஸந்ததி உண்டாக வில்லை யாகில், விதியல்லால் காரணமில்லை. ஒரு பாபமே அனேகம் புண்ணியங்களின் பலனைத் தடுக்கும். புண்ய பாபங் களில் ஒருவனுக்கு எது அதிகமாயிருக்கிறதோ அது மற்றொன்றி னுடைய பலத் தடுக்கவல்லது. சாஸ்திரம் ஸத்தியமே. கர்த்தா கர்மத்தை அவசியம் அனுபவிக்க வேண்டும். ஸந்ததிக்காக நீ இப் பொழுது யாருடைய அபிப்பிராயத்தை அனுஸரித்துக் காரியம் செய்கிறாய்? உன்னுடைய புத்தி எப்பொழுதும் சாஸ்திரத்தையே அனுஸரித்திருக்கும். எல்லாம் சாஸ்திரத்துக்குள் அடக்கம் என்பதே பெரியோரின் நிச்சயம். இப்படியில்லையாகில் எல்லாம் மாறிவிடும்; ஸதல தர்மங்களும் நசிக்கும். பாபத்தைப் போக்கும் நீ புண்ய கர்மங் களைச் செய்வதோடு புண்ய தீர்த்தங்களையும் புண்ய க்ஷேத்ரங்களையும் ஸேவிக்கவேண்டும். உன் மனோரதம் அப்பொழுதுதான் ஸித் திக்கும்.

ஸோமகன்—நான் பல யாகங்கள் செய்தேன்; பிரஜைகளை ப்ரியமாக ரக்ஷித்தேன். ஆனால், புண்ய க்ஷேத்ரம், புண்ய தீர்த்தம், பகவதாலயம்—இவைகளை ஸேவிக்கவில்லை. இவைகளில் எது சிறந்ததோ அதைச் சொல்லுவீராக.

**81—ம் அத்.**

*மார்க்கண்டேயர் புஷ்கரிணியைச் சுற்றியுள்ள எட்டு தீர்த் தங்களையும் சொல்லுகிறார்.*

மார்க்கண்டேயர்—ராஜனே! உனக்கு ஹிதமாய் சிரேஷ்டமா யுள்ள க்ஷேத்திரத்தையும், தீர்த்தத்தையும் சொல்லுகிறேன் :— எனக்கு

சேர்ந்த மிருத்யுவை ஜயிப்பதற்காக உத்தமமான தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் ஸேவித்தேன். கடைசியில் ஸ்ரீரங்கமென்னும் க்ஷேத்திரத்தில்தான் என்னுடைய மிருத்யு பயம் நீங்கிற்று. அங்கே ஸகல பாபங்களையும் நசிப்பிக்கும் புஷ்கரிணி யென்ற தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்நானம் செய்பவன் ஸகல ஸித்திகளையும் பெறுவான். புஷ்கரிணிக்கு வடமேற்கில் உத்தமமான கேஸர தீர்த்தம் (1) இருக்கிறது. கேஸரத்துக்கு வடக்கில் கதம்ப தீர்த்தம் (2). கதம்பத்துக்கு வடகிழக்காக ஆம்ர தீர்த்தம் (3). ஆம்ரத்துக்குக் கிழக்கில் பில்வ தீர்த்தம் (4). பில்வத்துக்குத் தென்கிழக்கில் ஜம்பு தீர்த்தம் (5). ஜம்புவுக்குத் தென் கிழக்கில் பலாச தீர்த்தம் (6). பலாசத்துக்குத் தெற்கில் அசுவத்த தீர்த்தம் (7). அசுவத்தத்துக்கு மேற்கில் புன்னாக தீர்த்தம் (8). புஷ்கரிணிக்கரையிலுள்ள எட்டு தீர்த்தங்களையும் ஞானிகள் இப்படிக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

புஷ்கரிணி தாபத்ரயங்களையும் போக்க வல்லது. புன்னாக தீர்த்தப்பிரபாவத்தினால் முன்பு ஸுவர்ச்சலர் மோக்ஷம் பெற்றார்; பிருகு வம்சத்தவரான தாரகர் கேஸர தீர்த்தத்தால் மோக்ஷம் அடைந்தார். விதேஹ ராஜனான ஸுகீர்த்தியும் கேஸர தீர்த்தத்தினாலேயே ஸத்கதியடைந்தான்., கர்க கோத்ரியான ருக்மதிருஷ்டி யென்பவர் கதம்ப தீர்த்தத்தினால் சாசுவதமான பிரம்மத்தை அடைந்தார். காச்யபர் ஆம்ர தீர்த்தத்தை ஆச்ரயித்து அழிவில்லாதிருந்தார். பிரம்மஹத்தி தோஷம் போவதற்காக ருத்ரன் ஆம்ர தீர்த்தத்தில் தபஸ் செய்தான். ஸுப்ரம்மணியனும் அவ்விடத்தில் தபஸ் செய்தே தேவஸேனாபதியானான். வகுள தீர்த்தத்திலிருந்தே பிராம்மணர்களும் அரசர்களும் மேன்மை பெற்றனர்.

**82—ம் அத்.**

*ஜயதர ராஜோபாக்யானம் : பிராம்மணர்களின் கோபத்தால் ஜயதரனுடைய ராஜ்யம் அழிந்தது.*

ஸோமகா! முன்பு நடந்த புண்ணியமானதொரு விருத்தாந்தம் சொல்லுகிறேன் ; கேள் :—

சந்திர வம்சத்தைச் சேர்ந்த ஜயதரன் என்றொரு ராஜா இருந்தான். பிராம்மணர்களின் கோபத்தால் அவனுடைய ஐசுவரியம் அழிந்தது. பூஜிக்கத்தக்க பிராம்மணர்களை அந்த ராஜன் பீடித்ததால், அவர்கள் ஸஹிக்கமாட்டாமல் ராஜ்யத்தைவிட்டு வெளியேறி

னர். சூத்ரர்கள் மிகுந்ததால் ராஜ்யம் வேதமில்லாதிருந்து; பல விதத் துன்பங்களால் பீடிக்கப்பட்டலாயிற்று; வியாதி, பஞ்சம் முதலியவற்றால் ராஜ்யம் தவிப்பதுபற்றி ராஜன் வருந்தினன். ராஜனுடைய நூறு புத்திரர்களும் இறந்தனர். பரத்வாஜரின் சிஷ்யர் அந்த ஜயதர ராஜனுக்கு ஆசாரியராயிருந்தார். அக்காலத்தில் தம் சிஷ்யர்களோடு புஷ்கரிணி தீரத்தில் வஸித்துக் கொண்டிருந்த வால்மீகி மஹர்ஷியைப் பூஜிக்கப்போன பரத்வாஜர் ஜயதர ராஜ்யத்தில் பிரவேசித்தார். ராஜனுடைய விபரீதங்களையும் துன்பங்களையும் பரத்வாஜருக்குத் தெரிவித்தார் அவருடைய சிஷ்யரான புரோஹிதர். பரத்வாஜர் ஜயதர ராஜனிடம் கிருபையுண்டாகி எல்லாவற்றையும் தம்முடைய ஆசாரியரான வால்மீகிக்குச் சொன்னார். வால்மீகியும் ராஜனிடத்தில் கருணைகூர்ந்து, அவனுடைய ராஜ்யத்திலிருந்து வெளியேறின பிராம்மணர்களை வருவித்து,— "உங்களுடைய கோபத்தின் பிரபாவத்தினால் ராஜன் மிகவும் பீடிக்கப்படுகிறான். நீங்கள் இல்லாமல் ராஜ்யமே அழிந்தது. ராஜனுடைய துர்நடத்தையே இவ்வளவுக்கும் காரணமானாலும், தர்மம், அர்த்தம், காமம் இம் மூன்று புருஷார்த்தங்களுக்கும் ராஜன் அவசியமாகிறான். இந்த ஜகத்தே ராஜனைக் காரணமாகவுள்ளது. வர்ணாச்ரமங்கள் ராஜனையே பற்றியுள்ளன. பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் ராஜனே சாசுவத ஆதாரம். ஆகையால், நீங்கள் கோபத்தைத் தணித்துக்கொண்டு ராஜ்யத்தை அவசியம் ரக்ஷியுங்கள்."—என்றார். பிராம்மணர்களும் கோபம் தணிந்தனர்.

**83—ம் அத்.**

*பில்வபூஜை: சித்திரஸேனன் பில்வ மூலத்தில் பூஜை செய்த விருத்தாந்தம்.*

வால்மீகி பிராம்மணர்களையும் ஜயதர ராஜனையும் அழைத்துக் கொண்டு பில்வ தீர்த்தத்துக்குப் போனார். அவ்விடத்து ரிஷிகள் வால்மீகியை பக்தியாய் வரவேற்றனர். வால்மீகி ரிஷிகளோடு ஸந்தோஷமாய் வீற்றிருக்கையில், ஆகாசத்தில் இனிமையான கீதம் கேட்டது; அங்கிருந்த பில்வ விருக்ஷத்தினடியில் புஷ்ப வர்ஷம் வர்ஷித்தது; காற்று மனோஹரமாய் வீசிற்று; ஆகாசத்தில் விசித்திரமான வாத்தியங்கள் முழங்கின. இப்படியே இரண்டு ஸந்தியிலும் நடந்தது. வால்மீகி முதலானோர் "இது யாது!"—என்று வியந்தார்கள். அப்பொழுது ஸநத்குமாரர் அங்கே யதிருச்சையாகத் தம் சிஷ்யர்

களோடு வந்தார். ரிஷிகள் ஸநத்குமாரரை உபசரித்ததும், பரத்வாஜர் ஆகாசத்திலுண்டான கீதம் முதலியவைகளைப்பற்றிக் கேட்டார்.

ஸநத்குமாரர்—முன்பு இங்கே கந்தர்வன் செய்த காரியத்தைச் சொல்லுகிறேன்: இந்திரனுடைய மித்திரன், சித்திரஸேனன் என்னும் கந்தர்வன், ஸ்திரீகளோடு ஸஞ்சரித்துக் கொண்டே ரங்க விமானத் தருகில் போய் அதன் நிழலைத் தாண்டினான். தேச ரக்ஷகர்கள் கந்தர் வனை த்வீபாந்தரத்தில் எறிந்துவிட்டார்கள். கந்தர்வன் தன்னுடைய அகாரியத்துக்குப் பரிஹாரமாக இந்திரனுடைய சொல்படி தீர்த்த யாத்திரை செய்து, புஷ்கரிணியில் நீராடிப் பரிசுத்தனாகி, தன்னுடைய இனிமையான கீதங்களால் ரங்கநாதனை மகிழ்ப்பித்தான். ரங்கநாத னுடைய அனுக்ரஹத்தினால் சித்திரஸேனன் மீண்டும் கந்தர்வ பதி யானான்.

சுக்லபக்ஷ பஞ்சமியில் கந்தர்வர்கள் வில்வ மூலத்தில் லக்ஷ்மி யையும் பகவானையும் ஆராதித்து தேவர்களுக்கும் அரிதான ஸித்தி யைப் பெற்றனர். இன்று சுக்ல பஞ்சமியாகையால் கந்தர்வர்கள் இந்த பில்வ மூலத்தில் பூஜைசெய்ய வந்திருக்கிறார்கள். இந்த கீதம் வாத்தியம் முதலியவை கந்தர்வர்கள் செய்யும் பூஜைக்காக ஏற்பட்ட கோலாஹலம்.

---

## விரதங்கள்

---

[பஞ்சமீ வ்ரதத்தைக் கேட்ட பரத்வாஜருக்கு ஸனத்குமாரர் பதினைந்து திதிகளிலும் ஏற்பட்ட விரதங்களைச் சொல்லுகிறார். 99-ம் அத்தியாயம் முடிய விரதங்களே விவரிக்கப்படுகின்றன. சுருக்க மாய் எழுதப்படும் இச்சிறு புஸ்தகத்தில் விரதங்களையும் சுருக்க மாகவே எழுதவேண்டியிருப்பதால், எல்லா விரதங்களுக்கும் பொது வாயுள்ள நியமங்களை ஒவ்வொரு விரதத்திலும் சொல்லாமலிருப்ப தற்காக இவ்விடத்திலேயே எழுதுகிறோம்.

அவையாவன — ஸ்நானம், நித்ய கர்மானுஷ்டானம், பிரம்ம சர்ய நியமம், பகவத் தியானம், ஆசார்யனை தக்ஷிணையால் திருப்தி செய்வித்தல், விரதத்தின் முடிவில் பிராம்மணர்களுக்கு விசேஷமாக போஜனமளித்தல், சக்திக் கேற்றவாறு தக்ஷிணை முதலிய செலவுகளை உதாரமாகச் செய்தல்—இவை எல்லா விரதங்களுக்கும் அவசியம்.

விசேஷமான விதி நிஷேதங்களையும், மந்திரங்களையும், பிரயோ கங்களையும் மற்றைய விவரங்களையும் மூல கிரந்தத்தில் அந்தந்த விர தத்திலேயே காண்க.]

**84—ம் அத்.**

ஸர்வாபீஷ்ட ஸித்திக்காக பில்வ மூலத்தில் செய்யும் பஞ்சமீ வ்ரதம்.

பரத்வாஜர்—ஸனத்குமாரரே! ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்க வல்ல பஞ்சமீ வ்ரதத்தின் விதியைச் சொல்லுவீராக.

ஸனத்குமாரர்—திருவோணத்தோடு கூடிய சுக்ல பஞ்சமி; மார்கசீர்ஷ சுக்ல பஞ்சமி; உத்தர பல்குனியும் ஸோமவாரமும் சேர்ந்த சுக்ல பஞ்சமி—இவை இந்த விரதத்துக் கேற்ற காலம்.

முதல் நாள் பத்தினியோடுகூட ஸங்கல்பம் செய்துகொண்டு, பஞ்சமியன்று பில்வ விருக்ஷத்துக்குப் பூஜை செய்து, அதனடியில் வேதியமைத்து, மத்தியிலும் எட்டு திக்குகளிலும் கலசம் ஸ்தாபித்து, மத்திய கலசத்தில் லக்ஷ்மியையும் மற்றைக் கலசங்களில் அஷ்ட சக்தியையும் ஆவாஹனம் செய்து, ஸ்ரீஸூக்தத்தால் பூஜித்து, நிவேதனம் வர ப்ரார்த்தனம் முதலியன செய்யவேண்டும். வேறொரு கலசத்தில் பகவானை ஆவாஹித்துப் பூஜை செய்து, லோகபாலர்களுக்கு பலி ஸமர்ப்பித்து, அன்று முழுதும் உபவாஸமிருந்து, மறுநாளும் பூஜை செய்து, ஹவிஸ் சாப்பிடவேண்டும். பில்வ விருக்ஷத்தை உதைத்தல், அதன் நிழலைத் தாண்டுதல், அதன் பழத்தைச் சாப்பிடுதல்—கூடா. இந்த விரதத்தினால் ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்கும்.

**85—ம் அத்.**

ஜயப்ரத ஷஷ்டீ வ்ரதம்.

முதல் நாள் உபவாஸமிருந்து ஷஷ்டியன்று சக்ராப்ஜ மண்டலத்தில் ஸுதர்சனம் முதலிய பகவதாயுதங்களுக்கும் லோகபாலர்களின் ஆயுதங்களுக்கும் ஆவாஹனம், பூஜை.

எதிரில் தடியை நட்டு, அதன்மேல் கருட பிம்பத்துக்கு ப்ரதிஷ்டை பூஜை—முதலியன செய்து, மறுநாளும் பூஜை செய்ய வேண்டும். யுத்தம், துர்நிமித்தம், பார்யா புத்திரர்களின் விநாசம்—முதலியன நேரிட்டபோது இந்த விரதம் செய்யத் தக்கது. பூஜை செய்த கருட த்வஜத்தை எடுத்துக்கொண்டு ராஜா யுத்தத்துக்குப் புறப்பட வேண்டும். த்வஜம் எடுக்கையில் கிழக்கு முகமாய்த் தவிர எத்திசையாய் அசைந்தாலும் கெடுதி. இந்த விரதத்தினால் ஜயமுண்டாகும்.

**86—ம் அத்.**

மாங்கல்ய ப்ரத ஸப்தமீ வ்ரதம்.

தான்யத்தால் மண்டலமிட்டு தேன், தயிர், பால், நெய்—நிறைந்த நாலு கலசம் ஸ்தாபித்து, பகவான் லக்ஷ்மி—இருவருக்கும் ஆவா

ஹனம், அஷ்டாக்ஷரத்தால் ஆராதனம்—முதலியன செய்து, புத்திரவதிகளான எட்டு ஸ்திரீகளைப் பூஜித்து, அவர்களுக் கெதிரில் மாங்கல்யத்தை ப்ரார்த்தித்து, அவர்களுக்கு போஜனம் செய்துவைக்க வேண்டும். இந்த விரதத்தை அனுஷ்டிக்கும் ஸ்திரீக்கு அவளுடைய பர்த்தா தவிர, புத்திரன் பிதா—முதலான பந்துக்கள் விரதானுஷ்டான காலத்தில் அவசியமான உதவிகளைச் செய்யலாம்.

**87—ம் அத்.**

சத்ருநாச கர அஷ்டமீ வ்ரதம்.

ராஜன் உபவாஸமிருந்து அஷ்டதள பத்மத்தில் நரஸிம்ம மூர்த்தியையும் கலசங்களில் லோக பாலர்களுடைய ஆயுதங்களையும் ஆவாஹித்துப் பூஜை முதலிய செய்து, கலச தீர்த்தத்தினுல் ஸ்நானம் பண்ண வேண்டும். இந்த விரதத்தினுல் சத்ருவுக்கு நாசமுண்டாகும்.

**88—ம் அத்.**

நல்ல பர்த்தாவைக் கொடுக்கும் நவமீ வ்ரதம்.

ஸமுத்திரம் சேரும் நதியில் ஸ்நானம் செய்து, நதியின் மணலிலேயே கிருஷ்ணனைப் பூஜித்து, தம்பதிகளுக்கு மஞ்சள் பொடி நெய்—இவற்றை தானம் செய்து, அவர்களுக்கு போஜனமளித்து, மறுநாளும் கிருஷ்ணனைப் பூஜிக்கவேண்டும். இந்த விரதத்தினுல் நல்ல பர்த்தா கிடைப்பான்.

**89—ம் அத்.**

ஆரோக்ய ப்ரத தசமீ வ்ரதம்.

நவமியன்று உபவாஸ மிருந்து, தசமியன்று கலசங்களில் பகவானையும், லக்ஷ்மியையும், பகவானுடைய பஞ்சாயுதங்களையும் ஆவாஹித்துப் பூஜை செய்து, கலச தீர்த்தத்தினுல் ஸ்நானம் செய்ய வேண்டும். இந்த விரதத்தினுல் ஆரோக்கிய முண்டாகும்.

**90—ம் அத்.**

விஷ்ணு ஸாயுஜ்ய ப்ரத ஏகாதசீ வ்ரதம். காம்யார்த்த ப்ரத துவாதசீ வ்ரதம்.

ஏகாதசியும் துவாதசியும் திதிகளுக்குள் சிரேஷ்டமானவை. இவை இரண்டும் வைஷ்ணவ திதிகள். தசமியன்று ஒரு வேளை மட்டும் சாப்பிட்டு, ஏகாதசியன்று ராத்திரிகூட நித்திரை செய்யாமலும், பாஷண்டர் பதிதர் முதலானேரோடு பேசாமலும்—"ஞானதீபத்தால் என் மனவிருளைப் போக்க வேண்டு"மென்று பகவானை தியானித்தவாறே உபவாஸ மிருந்து, துவாதசியன்று பாரணம் செய்ய வேண்டும். ஏகாதசிக்கு தசமி ஸம்பந்தமிருந்தால், அது உபவாஸ பலனைக் கெடுக்குமாகையால்—தசமி ஸம்பந்தம் சிறிதுமில்லாத ஏகாதசியில்

விரதம் அனுஷ்டிப்பவன் விஷ்ணு ஸாயுஜ்யத்தை அடைவான். ஏகாதசி பாபத்தைப் போக்கும்; துவாதசி காம்யார்த்தங்களைக் கொடுக்கும்.

**91—ம் அத்.**

*ஏகாதசீ வ்ரத மாஹாத்மியம்: தேவ வ்ரதோ பாக்யானம்.*

புஷ்கரத்தில் வாஸம் செய்துகொண்டிருந்த தேவவ்ரதன் என்னும் ஸாத்விகன் பராசர சிஷ்யரான மைத்ரேயரிடம் போனான். அவன் கவலைப்படுவதை யறிந்து மைத்ரேயர் காரணம் விசாரித்தார். "உலகத்தில் எல்லோரும் படுகிற துக்கத்தைக் கண்டு நான் சோகிக்கிறேன்"— என்றான் தேவவ்ரதன்.

மைத்ரேயர்—உயர் குலத்தி லுதித்து ஸகல ஐசுவரியங்களையும் அனுபவிக்கும் நீ ஏன் பிறருக்காக சோகிக்க வேண்டும்?

தேவவ்ரதன் — கர்பவாஸம் அனுபவித்து, ரக்த மாம்ஸாதி மயமான சரீரம் பெற்று, துச்சமான போகங்களிலும் மண்டியிருப்பதை ஆலோசித்தால் எப்படி சோகியாமலிருப்பது?

மைத்ரேயர்—உன் விரக்தி நன்றாயிருக்கிறது! உனக்கு ஹிதமாயிருப்பதொன்று சொல்லுகிறேன்.

தேவவ்ரதன்—துக்க மயமான இந்த ஸம்ஸாரத்தினின்று வெளியேறும் உபாயம் சொல்லுவீராக.

மைத்ரேயர்—ஆத்மா நித்தியமாய், பரஞ்ஜோதியாய், அப்ரமேயமாய், நிரஞ்ஜனமாய், ஞானநந்த மயமாய், சோகமில்லாததாய், நிர்மலமாயிருக்கும். பிரகிருதி அஸத்தாய், ஹேயத்துக்கெல்லாம் இருப்பிடமாய், திரிகுணமாயிருக்கும். பிரகிருதி ஸம்பந்தத்தினால் ஆத்மா துக்கத்தையடைகிறது. இந்த ஜகம் முழுவதும் ஈசுவரனுக்கு கிரீடாஸ்தானம். பகவான் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஸாரங்களைத் தன் புத்தியாலேயே செய்துகொண்டு உதாஸீனனாய் எல்லோரிடத்திலும் ஸமமாயிருக்கிறான். பருத்திக் கொட்டையைப் பருத்தி சூழ்ந்திருப்பது போல, ஆத்மா கர்மத்தால் சூழப்பட்டு கர்மானுகுணமான சரீரமெடுத்து, சரீரத்துக் கேற்ற கர்மங்களையே செய்கிறது. இப்படிக் கர்மமாகிற பெரிய முதலையின் வாயிலகப்பட்டுத் தவிக்கும் ஆத்மாவை ஞானக் கத்தியால் விடுவிக்கவேண்டும். மஹா கோரமாயுள்ள ஸம்ஸார மார்கத்தில் யோகிதான் வைராக்யமென்ற ரதத்திலேறி ஞானதீபத்தைக்கொண்டு பயமில்லாமல் ஸஞ்சரிக்க முடியும். ஆகையால், வைராக்யம், அஹங்காரமின்மை, சுத்தி, இந்திரிய நிக்ரஹம், வேதாத்தியயனம், தானம், சரீரத்தை உலர்த்துதல், ஆஹார நியமம், மௌனம்— இவை யாவும் சேர்ந்ததான தபஸ், விரதம், உபவாஸம், தீர்த்த யாத்திரை—முதலியவற்றால் முதலில் கர்மத்தைக் குலைக்கவேண்டும்.

தேவவ்ரதன்—எந்த மாஸம், எந்த தினம், எந்தத் திதியில் எப்படி உபவாஸமிருக்கவேண்டும் ?

மைத்ரேயர்—மார்க சீர்ஷ சுக்ல ஏகாதசியில் வீண்பேச்சு இல்லாமலும், ராத்திரியில்கூடப் படுக்காமலும், பகவதாராதனம், பகவத் குணானுபவம்—முதலிய செய்துகொண்டு உபவாஸமிருந்து, துவாதசியில் பாரணம் செய்யவேண்டும். ஒரு வருஷ காலம் பிரதி ஏகாதசியிலும் இந்த விரதத்தை அனுஷ்டித்தால் விஷ்ணு ஸாயுஜ்ய முண்டாகும்.

ஸனத்குமாரர்—இப்படியே தேவவ்ரதன் ஏகாதசி விரதத்தை அனுஷ்டித்துப் பாபத்தைப் போக்கி ஸித்தி யடைந்தான்.

**92—ம் அத்.**

*துவாதசீ வ்ரத மஹாத்மியம் : குசலோ பாக்யானம்.*

ஸூர்ய வம்சத்தவனான குசலன் என்னும் அரசன் துவாதசீ வ்ரதானுஷ்டானத்தால் ஸ்வர்கம்சேர்ந்து யமனுக்கு ப்ராண ஸ்நேஹிதனாயிருந்தான். ஒரு ஸமயம் குசலன் யமனிடம் போயிருந்தபோது, அங்கே பாபிகள் படும் கஷ்டத்தைக்கண்டு அவனுக்கு பயமுண்டாயிற்று. யமன் அவனுடைய பயத்தைத் தெரிந்துகொண்டு "பாபிகள் கஷ்டப்படவேண்டு மென்பதே விதியன்றோ!"—என்றான்.

குசலன்—கண் முன்பாகக் கஷ்டப்படுவோரைக் காக்காமலிருக்கலாமோ !

யமன் — பகவானுடைய ஸங்கல்பம் ஸத்யமானது. அவனை ஆராதிப்பதற்கன்றோ நீயும் பாடுபட்டது. பகவத் ஸங்கல்பம் ஒருவராலும் அசைக்கப்போகாது. பாபிகளுக்கு நரகமும், புண்ணியவான்களுக்கு ஸ்வர்கமும் பகவானால் ஏற்படுத்தப்பட்டன. இதை நான் மாற்ற முடியாது. நான் புண்ணியவான்களை ஸுகத்தில் வைத்துப் பாபிகளை நரகத்தில் தள்ளுகிறேன். இவ்விஷயத்தில் நீ கவலைப் படுவதென் !

குசலன்—இங்கு கஷ்டப்படுபவோர் செய்த பாபமென்ன ?

யமன்— குரு, தெய்வம், வேதம், பிராம்மணர்—இவர்களை தூஷிப்பவர், கிருதக்னர், துராசாரமுள்ளவர், வர்ணாச்ரம தர்மங்களைக் கெடுப்பவர், பகவானை மறப்பவர்—இவர்களுக்கு நரகமே கதி. இந்த நரகத்தி லுள்ளோர் செய்த புண்ணியம் ஒன்றுமே இல்லை. இவர்களுடைய துன்பத்தை நீக்க நான் அதிகாரியல்ல. ஒவ்வொருவனும் தான் செய்த கர்மத்தையன்றோ அனுபவிப்பது. கர்மம் கர்த்தாவையே நாடும். அவரவரின் உயர்வு தாழ்வுக்கு அவரவர் கர்மமே காரணம். இவ்விஷயத்தில் ஏன் கவலை கொள்ளவேண்டும்!

குசலன் — எல்லோருடைய சுபாசுபங்களேயும் நீ அறிவை யன்றோ! என்னுடைய சுப கர்மம் யாதென்று சொல்.

யமன்—ஒரு வருஷமளவும் துவாதசீ வ்ரதத்தைத் தவருமல் அனுஷ்டித்த புண்ணியனுயிற்றே நீ!

குசலன்—இவர்கள் விடுபட்டுப் போகுமத்தனே புண்ணியம் நான் தருகிறேன். இவர்களே என் கண் முன்பே விடுவித்துப் போ!

யமன்—ஒரு துவாதசியில் உபவாஸ மிருந்த புண்ணியமே இவர்கள் அனைவரையும் விடுவிக்கப் போதும்.

ஸனத்குமாரர்—ராஜன் அப்படியே தன் புண்ணியத்தைக் கொடுத்தான். எல்லோரும் நரகம் விட்டு ஸ்வர்கம் சேர்ந்தார்கள். "இப்படிக் கைமேல் பலனைக் கொடுக்கும் விரதத்தினுல் பகவானை ஆராதித்துக் கொண்டிரு"—என்று யமன் குசலனுக்கு உபதேசித்தான்.

எல்லோருக்கும் எல்லா அபீஷ்டங்களேயும் கொடுக்க வல்ல துவாதசீ வ்ரதம் ஒரு வருஷமளவும் விடாமல் அனுஷ்டிக்கத் தக்கது.

**93—ம் அத்.**

புத்ர ப்ரத த்ரயோதசீ வ்ரதம்.

விளாம்பழ மவ்வளவு வெண்ணெய் எடுத்துக் கிழக்கு முகமாயிருந்து, ஒரு பாத்திரத்தில் வைத்து, புஷ்பங்களாலாவது அரிசியினுலாவது அஷ்டதள பத்மமாக ஆஸனம் போட்டு, அதில் பகவானேயும் லக்ஷ்மியையும், துவாரபாலர்களேயும் ஆவாஹித்துப் பூஜை முதலியன செய்து, வெண்ணெயைப் பூஜைக்கு எதிரில் வைத்து, இரண்டு பாகமாக்கி அபிமந்திரித்துப் பத்தினிக்குக் கொடுக்க வேண்டும். அன்று முழுவதும் பத்தினியோடு உபவாஸமிருந்து மறுநாள் போஜனம் செய்யவேண்டும். இந்த விரதத்தினுல் புத்திர பாக்கியம் உண்டாகும்.

**94—ம் அத்.**

ரோக சாந்திகர சதுர்தசீ வ்ரதம்.

சதுர்தசி யன்று காலையில் ஸூர்யோபஸ்தானம் செய்து உபவாஸமாகவே அஸ்தமனம் வரைக்கும் காயத்ரியை ஜபித்துக்கொண்டிருந்து, ராத்திரி பகவானே ஆராதித்து, மறு நாட்காலையிலும் காயத்ரீ ஜபமும் பகவதாராதனமும் செய்து,—ஒரு குடத்தில் நாலுபடி நெய் எடுத்து, அதில் தங்கம், வெள்ளி, ரத்தினம்—இவற்றைப் போட்டு, ஸூர்யனை ஆவாஹனம் பண்ணி, ஸூர்யனை ப்ரார்த்தித்துக்கொண்டு, குடத்திலுள்ள நெய்யில் தன் முகத்தைப் பார்த்துவிட்டு, ஏழையாய் வேதாத்தியயனம் செய்தவனுயுள்ள ஒரு பிராம்மணனுக்கு நெய்க்

குடத்தை தானம் செய்யவேண்டும். இந்த விரதம் ஸகல ரோகங்களை யும் போக்கும்.

**95—ம் அத்.**

ஆயு: ப்ரத பர்வ வ்ரதம்.

புஷ்பங்களாலும் அக்ஷதையாலும் மண்டலமிட்டு பகவானை யும் லக்ஷ்மியையும் ஆவாஹித்துப் பூஜை முதலியன செய்யவேண் டும். பிறகு, மத்தியில் பால்குடத்தில் பகவானுடைய பஞ்சாயுதங்களை யும், தீர்த்தம் நிறைந்த நாலு குடங்களில் பஞ்சேந்திரியங்கள், புத்தி, பிராணன், மனஸ்—இவற்றையும் பூஜித்துப் பாலினுலும் தீர்த்தத் தினுலும் ஸ்நானம் செய்யவேண்டும். இந்த விரதம் ஆயுஸ்ஸைக் கொடுக்கும்.

**96—ம் அத்.**

ஸம்பத்கர ப்ரதிபத் வ்ரதம்.

அரிசியால் மண்டல மிட்டு,—பகவான், லக்ஷ்மி, ஸரஸ்வதி, சந் திரன்—இவர்களை ஆவாஹித்துப் பூஜை செய்து உபவாஸமிருக்க வேண்டும்.

துவிதீயை யன்று பகவானைப் பூஜித்துவிட்டு போஜனம்செய்து, ஆசாரியனை ஆராதித்து, ஆரம்பிக்காத வித்தைகளை ஆரம்பிக்கவேண் டும். வித்யா ப்ரதானம் பண்ணும் ஆசார்யனே தெய்வமாகையால், ஆசார்யன் இடும் கட்டளையின்படியே சிஷ்யன் நடக்கவேண்டும். ஆசார்யனுடைய வஸ்திரம் படுக்கை—முதலியவற்றில் சிஷ்யனுடைய கால் படக்கூடாது; ஆசார்யனுடைய நிழலைத் தாண்டக்கூடாது. ஆசார்யனிடத்தில்போல ஆசார்ய பத்தினியினிடத்திலும் நடந்து கொள்ளவேண்டும்; ஆசார்யன் இறந்தபிறகு, அவனுடைய குழந்தை களை சிஷ்யன் காப்பாற்ற வேண்டும்; ஆசார்யனுக்கு ஸந்ததி யில்லா விடில், அவனுக்கும் அவனுடைய பத்தினிக்கும் சிஷ்யன் உத்தர க்ரியை செய்யவேண்டும்.

**97—ம் அத்.**

வித்யா ப்ரத த்விதீயா வ்ரதம்.

துவிதீயையன்று காலையில் லக்ஷ்மியை அஷ்ட சக்திகளோடும்,[1] திக் தேவதைகளோடும்,[2] திக் பாலர்களோடும்,[3] துவார பாலர்களோ டும்[4] பிரதிஷ்டித்து, ஸ்ரீஸூக்தம் முதலிய வைஷ்ணவ ஸூக்தங் களைச் சொல்லிக்கொண்டு பாலினுல் அபிஷேகம் செய்து, பலவித தானங்களைப் பண்ணி, வித்யாப்ரதானம் செய்யும்படி ஆசார்யனை

1, 2, 3, 4 இவர்களின் பெயர் இந்த அத்தியாயத்தில் விவரமாயிருந் தாலும், இடமில்லாக் குறைவினுல் இங்கு எழுதப்படவில்லை.

ப்ரார்த்திக்கவேண்டும். உடனே ஆசார்யன் சிஷ்யனுக்கு வித்தையை உபதேசிக்கவேண்டும். தானங்களிற் சிறந்தது வித்யாதானம்; வித்தைகளிற் சிறந்தது பிரம்மவித்தை. ஸகல வித்தைகளுக்கும் லக்ஷ்மியே ஆதாரம். இப்படி வ்ரதநியமங்களோடு வித்யாரம்பம் செய்யுமவனுக்கு வித்தை தானாகவே வரும்.

98—ம் அத்.

க்ரஹபீடா ஹர த்ருதீயா வ்ரதம்.

நரஸிம்ம மூர்த்தியை ஆவாஹனம் பண்ணிப் பூஜித்து, கும்பங்களில் பஞ்சாயுதங்களுக்கு ஆவாஹனம், ஸுதர்சன ஜபம், ஹோமம் இவற்றைச் செய்து, பஞ்சாயுதங்களை ஆவாஹித்த கும்பங்களிலுள்ள தீர்த்தத்தினால் ஸ்நானம் செய்யவேண்டும். இது சிரமம் நேரிடும் போதெல்லாம் செய்யத்தக்க விரதம். இப்படி சாஸ்திரம் ஹிதங்களை விதித்து அஹிதங்களை விலக்குகிறது. தெரியாதவற்றையெல்லாம் தெரிவிப்பது சாஸ்திரம். சாஸ்திரமே சரணமாகையால் எல்லோரும் சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டுக் காரியம் செய்தால், ஆபத்து நேர்ந்தாலும் வெளியேறலாம்.

99—ம் அத்.

கஜாச்வரோக ஹர சதுர்த்தீ வ்ரதம்.

நரஸிம்ம மூர்த்தி பஞ்சாயுதங்கள்—இவற்றை ஆவாஹனம் பண்ணி, ஜபஹோமங்கள் செய்து கலச தீர்த்தத்தை யானை குதிரைகளுக்கும், அவற்றைக் கட்டு மிடங்களுக்கும் அவற்றை ரக்ஷிக்கும் ராஜனுக்கும் புரோக்ஷிக்கவேண்டும்.

பரத்வாஜரே! உம்மிடமுள்ள ஸ்நேஹத்தினால் எல்லா திதிகளிலும் செய்யத்தக்க விரதங்களைச் சொன்னேன். இந்த விரதங்கள்[1] எல்லோருக்கும் எல்லாவித சிரேயஸ்ஸுகளையும் கொடுக்கும்.

100—ம் அத்.

ஜயதர ராஜன் விரதங்களை அனுஷ்டித்து பாக்யவானாகி ரங்கநாதனை தரிசனம் பண்ணுகிறான்.

மார்க்கண்டேயர் — பரத்வாஜர் ஸனத்குமாரரிடமிருந்து விரதங்களின் வைபவத்தையும் விவரத்தையும் கேட்டு ப்ரீதராய் ஸனத்குமாரரைப் பூஜித்தார். வால்மீகி ஜயதரனை எல்லா விரதங்களையும் அனுஷ்டிக்கச் செய்தார். விரதங்களின் மாஹாத்மியத்தினால் ஜயதரனுக்குக் கஷ்டம் நீங்கி, ஸகல ஐசுவரியங்களும் உண்டாகி, நூறு புத்திரர்கள்

1. 2-ம் அத்தியாயத்தில் விரதங்கள் யாவை?—என்ற 6-ம் கேள்விக் கேற்ப இங்கு விரதங்கள் விவரிக்கப்பட்டன.

பிறந்து அவர்களுக்கும் குழந்தைகள் பிறந்தன. ஜயதரன் ராஜ்யத்தைச் சிறப்பாய் ஆளுகையில், ரங்கநாதனை தரிசிப்பதற்காகப் புறப்பட்டு, பில்வ தீர்த்தத்தில் வால்மீகி மஹரிஷியை அடிபணிந்து, சந்திர புஷ்கரிணியில் ஸ்நானஞ்செய்து,—ஸம்ஸாரபந்த மொழித்தவர்களாய், ஆசார சீலர்களாய், பகவத் கைங்கரியத்திலேயே ஈடுபட்டவர்களுமாயுள்ள கைங்கரிய பரர்களைத் தன் ஆபரணங்களைக் கொடுத்து பஹுமானம் செய்து, உள்ளே போய் ரங்கநாதனை தரிசிக்கையில்,—அருகிலிருந்த கண்வ மஹரிஷியைக் கேட்கலானான்:

"இந்த ஸ்ரீரங்கவிமானம் ஜகத் பிரஸித்தமாய், அக்ஷயமாய், நித்யமாயுள்ளது. காலத்துக்குள் அடங்கிய இந்த ப்ரபஞ்சத்தில் இந்த விமானம்மட்டும் எப்படி அழியாமல் சாச்வதமாயிருக்கிறது"?

கண்வர்—இந்த விமானம் பகவானுடைய நித்ய விபூதியின் அம்சமாகையால், காலத்துக்கு வசப்பட்டதல்ல. பகவானால் பிரம்மாவுக்குக் கொடுக்கப்பட்ட இந்த விமானத்தை இக்ஷ்வாகு தவம் கிடந்து லபித்தான். இதை விபீஷணன் ராமனிடமிருந்து பெற்று லங்கைக்குக் கொண்டுபோகையில், இந்த தேசத்தின் குணவிசேஷத்தாலும் மனுஷ்யர்களின் பாக்ய விசேஷத்தாலும் இதற்குள் சயனித்திருக்கும் ரங்கநாதன் இவ்விடத்திலேயேஇருக்க விருப்பம் கொண்டார்.

101—ம் அத்.

ஜயதரன் காவேரியில் ஒரு பக்ஷியைக் கண்டான்.

மார்க்கண்டேயர்—ஜயதரன் ரங்கநாதனை தரிசித்துத் திரும்புகையில், காவேரியில் ஒரு பெரிய பக்ஷி அநேகம் பக்ஷிகளால் சூழப்பட்டும், இனிமையாயும் தெளிவாயுமுள்ள பேச்சினால் எல்லோருடைய மனதைக் கவர்ந்துகொண்டுமிருந்தது. ஜயதரன் அந்தப் பக்ஷியைக் கண்டு ஆச்சரியமடைந்து—"நீ யார்"—என்று கேட்டான்.

பக்ஷி—நானொருவன்; இவர்கள் சிலர்.

ஜயதரன்—தெரியாத அம்சத்துக்காகப் பிறந்த கேள்விக்குத் தெரிந்த விஷயத்தையே சொல்லி என்ன பயன்?

[தெலுங்கு லிபியிலுள்ள அச்சுப்புஸ்தகம், நம்மிடமுள்ள கையெழுத்துப் புஸ்தகம், அடையார் லைப்ரரி புஸ்தகம் இவற்றில் இவ்வளவுக்குமேல்

இந்த அத்தியாயம் ஒன்றுக்கொன்று வித்தியாஸப்படுவதாலும், பல பிழைகளிருப்பதாலும், மேலுள்ள விஷயங்கள் இந்தச் சிறுபுஸ்தகத்துக்கு அவசியமில்லாததாலும்—இந்த அத்தியாயம் இவ்வளவோடுநிறுத்தப்பட்டது.]

102—ம் அத்.

பக்ஷி ஜயதரனுக்குத் தத்வோபதேசம் செய்கிறது.

பக்ஷி—என்னைத் தெரிந்துகொள்ள விரும்பும் நீ யார்?

ஜயதரன்—நான் சந்திரவம்சத்தரசன்; கீர்த்திதரனுடைய புத்திரன்; ஜயதரன். சந்திர புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து ரங்கநாதனை தரிசித்துத் திரும்பும் எனக்கு உன்னுடைய தரிசனம் பாக்கிய வசமாய்க் கிடைத்தது.

பக்ஷி—உனக்குத் தத்துவங்களை உபதேசிக்கிறேன்; கேள்:-

ஆத்மா நித்யமாய், விபுவாய், நிர்மலமாய், ஞானநந்தமயமாய், நிர்குணமாய், நிரஞ்ஜனமாயுள்ளது. மற்றை யாவும் அநித்யங்கள்.

பிரகிருதி திரிகுணாத்மகமாய், ஹேயமாய், ஜடமாயுள்ளது.

ஆத்மாவுக்கு சரீர ஸம்பந்தத்தால் அஹங்கார மமகாரங்கள் உண்டாகின்றன. ஸம்ஸாரம் நடப்பது அஹங்கார மமகாரங்களாலே. ஸம்ஸாரத்தில் உழலும் ஆத்மா கிருஹம், க்ஷேத்ரம், புத்திரர்—முதலியவர்களிடம் உண்டாகும் ஆசையால் அடிபட்டுத் துன்பமடைகிறது. அஹங்கார மமகாரங்களால் ஆத்மா தன் ஸ்வரூபத்தை அறிகிறதில்லை. இப்படியாயுள்ள ஸம்ஸாரமென்னும் விஷ விருக்ஷத்துக்குக் கர்மம்தான் பீஜம்.

ஆத்மாவுக்குக் கர்ம ஸம்பந்தம் அனாதியாயுள்ளது. கர்மத்துக்கேற்ப ஆத்மா பல சரீரங்களையெடுத்து, தேசகாலங்களுக்கேற்ப மேலும் மேலும் கர்மத்தையே செய்கிறது. ஸ்வரூபத்தில் பேதமில்லாத ஆத்மாக்களுக்கு தேவ மனுஷ்யாதி சரீர பேதமும், அதிலேயே உயர்வு தாழ்வுகளும், ஒரே ஆத்மா ஓரிடத்தில் தாய், மற்றோரிடத்தில் புத்திரன்,—ஓரிடத்தில் மித்திரன், மற்றோரிடத்தில் சத்துரு—இம்மாதிரியான பேதங்களும் கர்மத்தாலேயே உண்டாகின்றன. ஸர்வேச்வரன் இந்த ப்ரபஞ்சத்தைக் கர்மத்துக்குத் தக்கபடி ஆள்கிறான். ஸகல ப்ராணிகளிடத்தும் அந்தராத்மாவாய்

நிற்கும் பகவானுக்கு, நீரில் கிடக்கும் தாமரைக்கு நீர் ஸம்பந்தப் படாதுபோல, கர்ம ஸம்பந்தம் உண்டாவதில்லை.

கர்மத்தில் உழலும் ஆத்மாவுக்கு ஈசுவரக்ஞானமும் ஈசுவர த்யானமுமே கதி. பகவானுடைய குணங்களை அறிவது, அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை தியானிப்பது, நாமஸங்கீர்த்தனம் பண்ணுவது—இவற்றாலேயே மனுஷ்யருக்கு முக்தியுண்டாகும். காலம் மனுஷ்யருடைய ஆயுஸ்ஸை நிமிஷந்தோறும் அழித்துக்கொண்டேயிருப்பதால், நொடிப்பொழுதும் வீணாக்காமல் ஸத் கர்மங்களையே செய்யவேண்டும்.

விவேகிக்கு யோக வைராக்கியங்கள் இரண்டும் அவசியமாயுள்ளவை. காம க்ரோதங்கள் மனுஷ்யனுக்கு அநாதியான சத்ருக்கள். வைராக்யம் காம க்ரோதங்களைப் போக்கி, தன்னைத்தான் அறிவதான யோகத்தையும் பிறப்பிக்கும். வேதாத்யயன நிரதனாய், ஆசார்ய ஸம்மதனாய், ஸத்யம், ஆர்ஜவம், தயை, அஹிம்ஸை, க்ஷமை, அநஸூயை—முதலியனவோடு கூடினவனாய், இந்திரிய நிக்ரஹம் பண்ணினவனாய் பிரம்மத்யானம் செய்பவனுமாயுள்ள யோகிதான் துக்கமில்லாததும், ஞானத்தாலறிவதுமான விஷ்ணுவினுடைய பரம பதத்தை அடைவான்.

## 103—ம் அத்.

*ப்ரபாகரோபாக்யானம்: ஜயதரனுக்குப் பக்ஷி சொல்லுவது.*

பக்தர்களுக்குத் தன்னைக் காட்டிக்கொடுப்பதற்காகவே பகவான் தன் இச்சையால் அவதாரங்களை எடுக்கிறான். இந்த விவேகம் பாபிகளுக்கு உண்டாவதில்லை. புண்ய க்ஷேத்ர வாஸத்தாலும் புண்ய தீர்த்த ஸ்நானத்தாலும் பாபம் போகும். பகவான் இருக்குமிடமே புண்ய க்ஷேத்ர புண்ய தீர்த்தங்களாகும். இந்த சந்திர புஷ்கரிணி புண்ய தீர்த்தங்களுள் சிரேஷ்டமானது. இந்த ஸ்ரீரங்க க்ஷேத்ரம் ஸகல பாபங்களையும் போக்கவல்லது. ரங்கநாதன் இவ்விடத்திலேயே ரமித்துக் கிடக்கிறானாகையாலும், பாபிகள் இவ்விடத்தில் வஸித்தே ஜன்மாந்தர பாபத்தைப் போக்குகிறார்களாகையாலும் நான் இங்கேயே வஸிக்கிறேன். இந்தக் காவேரி நதி மஹா பவித்ரமானது. இங்கு நடந்ததொரு புண்ய கதை சொல்லுகிறேன் :—

கர்க கோத்திரத்திற் பிறந்த பிரபாகரர் என்பவர் ஸகல வேதங்களையும் அறிய விரும்பி, அல்பமாயுள்ள புருஷ ஆயுஸ்ஸில் அனந்தங்களான வேதங்களை அத்யயனம் பண்ணமாட்டாமல் கடுமையாகத் தபஸ் செய்தார். தபஸ்ஸினால் உலகம் தவிப்பதை தேவர்கள் பிரம்மாவினிடம் முறையிட்டார்கள். பிரம்மா பிரபாகரரிடம் வந்து "அல்பமான ஆயுஸ்ஸைக்கொண்டு எல்லா வேதங்களையும் கிரஹிக்க முடியா" தென்றார்.

பிரபாகரர்—தீர்கமான ஆயுஸ்ஸையும் ஸகலமான சக்தி விசேஷத்தையும் பெரியோர்கள் பெற்றது தவத்தினாலேயன்றோ !

பிரம்மா—தபஸ்ஸினால் புண்ய லோகங்களை அடைந்து பலவித ஸுகங்களையும் அனுபவி. வேதங்களனைத்தையும் அறிய முடியாது.

பக்ஷி—பிரம்மா இப்படிச் சொல்லி மறைந்தார்.

## 104—ம் அத்.

*பிரபாகரோபாக்யானத்தில் ஸுநேத்ரோபாக்யானம்: ஸூர்யன் சொல்லுவது.*

பிரபாகரர் மீண்டும் வெகு கடுமையாகத் தபஸ் செய்தார். பிரம்மா இரண்டு தடவை பிரத்யக்ஷமாகியும் எல்லா வேதங்களையும் அறிய முடியாதென்றே சொல்லிப் போனார். பிரபாகரரும் முயற்சியை விடாமல் ஸூர்ய பகவானை தியானித்துத் தவம் செய்தார். ஸூர்யன் பிரத்யக்ஷமாகி—"தபஸ்ஸினால் பாபங்களைத் தொலைத்த உனக்கு எல்லா மனோரதங்களும் ஸித்திக்கும்"—என்று அனுக்ரஹித்தான்.

பிரபாகரர்—உலகத்தில் மனுஷ்யர்களின் பாபம் எது செய்தால் நீங்கும் ?

ஸூர்யன்—யக்ஞம், தானம், தபஸ், தீர்த்தஸேவை-இவற்றால்.

பிரபாகரர்—யக்ஞம் முதலியவற்றின் ஸ்வரூபம் யாது ?

ஸூர்யன்—யக்ஞம், தானம், தபஸ்–இம்மூன்றில் ஒவ்வொன்றும் காயிகம், வாசிகம், மானஸிகம்—என்று மூன்று விதமாயிருக்கும்.

சாஸ்திர விஹிதங்களான கர்மங்களைச் செய்வது காயிக யக்ஞம். ஜப யக்ஞமே வாசிக யக்ஞம். பகவத் விஷயகமான ஞானம் மானஸிக யக்ஞம்.

தகுந்தவர்களுக்குப் பொருளைக் கொடுப்பது காயிக தானம். துக்கப்படுவோர்க்கு அபயமளிப்பது வாசிக தானம். வித்தை வேதம் முதலியவற்றை உபதேசிப்பது மானஸிக தானம்.

அஹிம்ஸை, பிரம்மசர்யம் முதலியவை காயிக தபஸ். பர ஹிம்ஸையில்லாத ஸத்ய பாஷணம் வாசிக தபஸ். மனதுக்கு உண்டாகும் சாந்தி யென்னும் வைராக்யம் மானஸிக தபஸ்.

தீர்த்தம்—ஸ்தாவரம், ஜங்கமம் என்று இரண்டு விதமா யிருக்கும்.

பரமைகாந்திகளாய், சீலவான்களாய், தயாவான்களாய், ஞானி களாயுள்ள பெரியோர்களே ஜங்கம தீர்த்தங்கள்.

சந்திரபுஷ்கரிணி முதலிய குளங்களும் கங்கை முதலிய புண்ய நதிகளும் ஸ்தாவர தீர்த்தங்கள்.

புஷ்கரிணி ஸகல தீர்த்தங்களிலும் சிரேஷ்டமானது. புஷ் கரிணி தீரத்தில் மஹா ஸித்தர்கள் வஸிக்கிறார்கள். ஸ்ரீமத் ரங்கம் என்னும் பகவத் ஸ்தானம் புஷ்கரிணிக் கரையில் பிரதிஷ்டிக்கப் பட்டுள்ளது. நீர் புஷ்கரிணிக்குப் போம். ஸகல வேதங்களும் ஸித்திக்குமாறு பிரம்மாவினால் அனுக்ரஹிக்கப்பட்டு, எப்பொ ழுதும் அத்யாத்மசிந்தனமும் ரங்கத்யானமும் செய்யும் ஸுநேத்ரம் என்னும் பக்ஷி நெடுநாளாய் காவேரியில் வஸிக்கிறது. பிரபா கரரே! நீர் அந்தப் பக்ஷியினிடம் போய்ப் பிரார்த்தியும். அது உமக்கு எல்லா ஞானங்களையும் கொடுக்கும்.

பிரபாகரர்—மஹான்களுக்கு நீச ஜாதி உண்டாகாதன்றோ! இவ்வளவு வைபவம்வாய்ந்த ஒரு புண்யாத்மா பக்ஷியாய்ப் பிறந்தது எப்படி ?

ஸூர்யன்—மஹான்கள் ஸ்வேச்சையாகவே எந்த சரீரத் தோடும் இருப்பார்கள். பூர்வத்தில் இந்தப் பக்ஷி சிக்லிதமர் என்ற மஹா யோகியாயிருந்தது. ஸகல வேதங்களையும் அறிவதற்காகக் கடுமையாய்த் தவம்செய்த சிக்லிதமருக்கு பகவான் பிரத்யக்ஷமாகி, வித்தைக்கு அதிதேவதையான ஸரஸ்வதியை ஆராதிக்கச் சொன் னார். சிக்லிதமர் ஸரஸ்வதியை உபாஸிக்க, அவள்—“இப்பொ

மூது நாலு பக்ஷிகள் வந்து உன் பக்கலில் மாமிசத்தைக் கக்கும். நீ பக்ஷி ரூபமாயிருந்து அந்த மாமிசத்தைச் சாப்பிடு"—என்றாள். உடனே, வெளுப்பு, நீலம், கருப்பு, சிவப்பு—இப்படி நாலு நிற முள்ள பக்ஷிகள் வந்து மாமிசத்தைக் கக்கிப் போயின; சிக்லிதமர் அதைச் சாப்பிட்டு ஸகல வேதங்களையும் லபித்து இன்னும் பக்ஷி ரூபமாகவே இருக்கிறார்.

பிரபாகரர்—ஸ்வாமி! தபஸ்வியாய் ஆஹார சுத்தியுள்ளவரான சிக்லிதமர் மாமிசத்தை எப்படி புஜித்தார்?

ஸூர்யன்—நாலுவேதங்களும் நாலு பக்ஷிகளாய் வந்து வேதங் களையே கக்கிப்போயின.

பக்ஷி—ஜயதர ராஜனே! ஸூர்யன் இப்படி சொல்லிப்போன தும், பிரபாகரர் காவேரி தீரம் போய், பக்ஷியைக் கண்டு, தனக்கு ஸகல வேதங்களையும் அனுக்ரஹிக்கும்படி பிரார்த்தித்தார். பக்ஷி பகவானை சரணாகதி பண்ணச் சொல்லிற்று. பிரபாகரர் புஷ்க ரிணிக் கரையிலிருந்து சரணாகதி செய்ததும், ரங்கநாதன் பிரத் யக்ஷமாகி,—"அல்பமான ஆயுஸ்ஸில் அநந்தங்களான வேதங்களும் ஸித்திக்கமாட்டாவாயினும், இந்தப்புஷ்கரிணியில் ஸ்நானம்செய்து ஸுநேத்ரமென்னும் பக்ஷியை ப்ரார்த்தித்தால் அது எல்லாவேதங் களையும் உபதேசிக்கும்" என்றார். பிரபாகரர் பகவான் சொன்ன தைப் பக்ஷியினிடம் தெரிவிக்க, அது பிரபாகரருக்கு மந்திர பூர்வ கமாகப் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்வித்து ஸகல வேதங்களையும் உபதேசித்தது. பிரபாகரருக்கு எல்லா வேதங்களும் ஸ்புரித்தன. பிரபாகரர் இங்கேயே நெடுநாள் இருந்து ஸித்தியடைந்தார்.

ஜயதரனே! ஸுதர்சனன், ஸுவர்ணபிந்து, தாம்ரசூடன், பிரு ஹந்மதி—என்னும் இந்த நாலு சிஷ்யர்கள் கிரமமாக என்னிடம்[1] நாலு வேதங்களையும் லபித்தார்கள். பக்ஷி ரூபமாயுள்ள என்னைப் பூஜிப்பதற்காக இவர்களும் பக்ஷி ரூபத்தோடு இருக்கிறார்கள். ராஜனே! இந்தப் புஷ்கரிணி மஹா புண்யதீர்த்தம். பகவான் லோகானுக்ரஹார்த்தமாக இங்கு சயனித்திருக்கிறார். நான் அவ

1. இதுவரையில் பக்ஷி தன்னைத் தெரிவிக்காமலே பேசிற்று.

ருடைய திருவடி வாரத்தில் இருக்கிறேன், இந்த ஸ்ரீரங்கம் மஹா புண்ய பூமி. இங்குள்ள விருக்ஷங்களெல்லாம் மஹா யோகிகள்.

மார்க்கண்டேயர்—ஸோமகா! ஜயதரன் பக்ஷியின் அனுக்ரஹம் பெற்றுத் தன் ராஜ்யம்போய் ஸுகமாய் வாழ்ந்து புண்யலோகம் சேர்ந்தான். நீயும் புஷ்கரிணிக்குப் போய் பாக்யங்களைப் பெறுவாயாக.

வியாஸர்—மார்க்கண்டேயர் அனுக்ரஹித்துப் போனார். ஸோமகன் யாகத்தைப் பூர்த்திசெய்து பத்தினியோடும் பந்துவர்க்களோடும் புறப்பட்டுப் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து, ரங்கநாதனை தரிசித்து, அங்கே விசேஷமான தானங்களைப் பண்ணி, ராஜ்யம் போய் ஸுகித்திருந்தான். அவனுக்குப் பன்னிரு புத்திரர் பிறந்தனர். நாகதந்தரே! ஸோமகன் புத்திரர்களிடம் ராஜ்யத்தை ஒப்பித்துத் தபோவனம் போய்க் கால தர்மமடைந்தான்.

## 105—ம் அத்.

*ஸுமந்து ஸுநந்தோபாக்யானம்: ஸுமந்து ஸுநந்தர்கள் கௌதம சாபத்தால் பிசாசுகளாயினர்.*

நாகதந்தர்—ஸுவர்ச்சலர் புன்னாக தீர்த்தத்திலிருந்து ஸித்தியடைந்ததாகச் சொன்னீர்.[1] அதன் விவரம் எப்படி?

வியாஸர்—ஸுமந்து, ஸுநந்தர்—என்னும் இரண்டு ரிஷிகள் கௌதமரிடம் வேதாத்யயனம் செய்து, யதிருச்சையாய் நேர்ந்த வஸிஷ்டரிடம் வேதார்த்தங்களை கிரஹித்து கௌதமரிடம் போனார்கள். தன்னிடம் வேதங்களை அப்யஸித்து அர்த்தத்தை வேறிடத்தில் கிரஹித்ததற்காகப் பிசாசாகும்படி கௌதமர் சபித்துப் பிறகு இரங்கி,—"பராசரர் தாமாகவே வந்து உங்களுக்கு அத்யாத்ம வித்தையை உபதேசிக்கும்போது சாபம் நீங்கும்"—என்று அனுக்ரஹித்தார். ரிஷிகள் பிசாசுகளாகி கங்காத்வாரம் போயினர். அவர்கள் பிசாசுகளாக மாறினாலும், ஒருவருக்கும் உபத்ரவம் செய்யாமலும், பசிதாஹமில்லாமலும், வேதாத்யயன அம்ருதத்தினாலேயே புஷ்டியடைந்துகொண்டும், காலங்களில் ஸந்தியாவந்தனம் பகவதாராதனம் முதலியவற்றைச்செய்துகொண்டும், ஒருவருக்கும்

1. 81-ம் அத்தியாயம் பார்க்க.

தென்படாமலும் காலம் கழித்தனர். கங்கையில் வஸித்த ரிஷிக ளுக்கு அடிக்கடி வேதகோஷமும் பூஜைக்கு உபயோகித்த புஷ்பங் களும் தெரிந்தனவேயன்றி அவை யாரால் ஏற்பட்டனவென்று தெரியவில்லை.

ஸுமந்து ஸுநந்தர்கள் நெடுநாள் கங்காத்வாரத்திலிருந்து விட்டு, யதிருச்சையாகச் சந்திர புஷ்கரிணிக்குப் போயினர். வேத மூர்த்தியாய், ஸகல சாஸ்திரங்களையுமறிந்தவராய், ஸகல தர்மங்க ளுக்கும் பிரவர்த்தகராய், தத்வ க்ஞான நிதியாய், யோகமஹிமை யாலேயே பராவரக்ஞானம்பெற்றவராய், எனக்குப் பிதாவும் ஆசார் யருமாயுள்ள பராசரர் யதிருச்சையாகத் தன் சிஷ்யர்களோடு சந் திர புஷ்பகரிணிக்குப்போய், அங்குள்ள ரிஷிகளோடு பேசிக்கொண் டிருக்கையில், ஸந்தியாகாலம் வந்தது. பராசரரும் மற்றை ரிஷி களும் ஸந்தியாவந்தனம் செய்கையில்,—பூஜைக்கு உபயோகித்த புஷ்பங்கள் தென்பட்டன. வேதகோஷமும், "முகுந்தா! கோவிந்தா! புருஷோத்தமா! ரக்ஷ! ரக்ஷ!"—என்ற சப்தமும் கேட்டதேயன்றி சொல்லுவது யாரென்று தெரியவில்லை. பராசரர் திவ்யதிருஷ்டியால் பார்த்தபோது, இரண்டு பிசாசுகள் தென்பட்டனர். பராசரர் அவர்களை அழைத்து—"க்ரூரமான சரீரமும் ஸாத்விகமான காரி யமுமாயுள்ள உங்கள் ரஹஸ்யம் யாது"—என்று கேட்டார். இப் படித் தம்மை யறிந்து கேட்பது பராசரரே யென்று பிசாசுகள் தீர்மானித்துத் தம்முடைய விருத்தாந்தம் முழுவதையும் சொன் னார்கள்.

பராசரர் பிசாசுகளுக்குத்தத்வங்களை உபதேசித்து, "நீங்கள் எனக்கொரு உபகாரம் செய்யவேண்டும். காச்யப புத்திரரான ஸுவர்ச்சலர் எனக்கு மிகவும் ஆப்தர். அவர் மிகவும் விரக்தி யடைந்து உங்களிடம் வரும்போது, நான் உபதேசித்த யோகமார் கத்தை அவருக்கு உபதேசியுங்கள். அவர் வரும் வரையில் நீங்கள் இந்த க்ரூர சரீரத்தோடு இங்கேயே இருக்கவேண்டும். உங்களுக்கு நல்ல சரீரம் ஏற்பட்டுப் பலமேன்மைகளும் உண்டாகும்"—என்று சொல்லிப் போனார். பிசாசுகள் மஹரிஷியின் சொல்படியே புஷ் கரிணிக் கரையில் ஸுவர்ச்சலர் வரும் நாளுக்குக் காத்திருந்தனர்.

106—ம் அத்.

ஸுவர்ச்சலோபாக்யானம்: ஸுவர்ச்சலர் விரக்தராயிருந்தார்.

காச்யபருடைய புத்திரரான ஸுவர்ச்சலர் ஸகல வேதங்களை யும் சாஸ்திரங்களையும் அப்யஸித்து மிகவும் விரக்தராயிருந்தார். புத்திரனுடைய விரக்தியைக் கண்டு காச்யபர் வெகுவாய் வருந்தி,—"குழந்தாய்! பல விதமான யாக யக்ஞங்களைச் செய்து உன்னை நான் பெற்றேன்; கிழத்தனத்தால் வருந்தும் நான் உன்னைப் பார்த்தே பிராணனை தரிக்கிறேன்; உன் அன்னை எப்பொழுதும் கண்ணீர் சொரிகிறாள். உனக்குக் கிடைத்திருக்கும் பாரியை மஹாரூபவதி. உனக்காக நான் சேமித்திருக்கும் ஏராளமான ஐசுவரியத்தைக் கொண்டு நீ ஸுகங்களை அனுபவிப்பது தர்மத்துக்கு விரோதமாகாது. இந்த யௌவன காலத்தில் நீ கிருஹஸ்த தர்மங்களை அனுபவித்துப் பிறகு, விரக்தனாய்த் தபோவனம் போகலாம். கிழத்தனத்தால் வருந்தும் மாதா பிதாக்களை ரக்ஷிப்பது உன்னுடைய தர்மமல்லவா!"—என்று முறையிட்டார்.

ஸுவர்ச்சலர்—உம்முடைய வார்த்தை முற்றிலும் அஸாரமாயுள்ளது. கர்மத்தினால் கட்டுண்டு தாபத்ரயத்தினால் வருந்தி, காமக்ரோதங்களாகிற படுகுழியில் வீழ்ந்து, பசி, தாஹம், கிழத்தனம், ரோகம்—முதலியவற்றால் துன்பப்படும் மனுஷ்யனுக்கு என்ன ஸுகம் உண்டாகப்போகிறது! பாடுபட்டுத் தேடியும் பயந்து கொண்டே ரக்ஷிக்கவேண்டிய திரவியத்தால் என்ன ஸுகம்! ரக்த மாம்ஸ மயமான இந்த சரீரத்தில் அபிமானம் வைத்து என்ன பலன்! இடை விடாமல் அனர்த்தத்தையே விளைக்கும் இந்த ஸம்ஸார வாழ்க்கையில் என்ன பிரயோஜனம்! துக்கமயமான இந்த ஸம்ஸாரத்தில் பிரீதி வைக்கிறவர்களுக்காகவே நான் சோகிக்கிறேன். ஆத்மாவுக்குப் பிதா, புத்திரன், மித்திரன், சத்துரு—முதலிய யாதுமில்லை. இவ்வளவும் பிரமத்தினாலுண்டாவது. ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்தவனுக்கு துக்கமே யிராது. ஞான வைராக்யங்கள் மிகவும் அவசியமானவை. நான் உமக்குப் புத்திரனல்ல; நீர் எனக்குப் பிதாவுமல்ல. பிதா புத்திரன் முதலிய வியவகாரங்கள் சரீரத்தைப் பற்றியே யன்றி, ஆத்மாவைப் பற்றியல்ல.

**107-ம் அத்.**

*ஸுவர்ச்சலர் யோகமார்க்கத்தை யறிந்தார். ஸுமந்து ஸுநந்தர்கள் சாபம் நீங்கப் பெற்றனர்.*

வியாஸர்—ஸுவர்ச்சலர் தன் பாபம் நீங்குவதற்காக மாதா பிதாக்களையும் வீட்டையும் துறந்து தீர்த்த யாத்திரை செய்தார்;

பலவிடங்களிலும் பரமானந்தத்தை அநுபவிக்கும் ரிஷிகளைக் கண்டு, —"துக்கமயமான இந்த ஸம்ஸாரத்தில் பரம யோகிகளான நீங்கள் மட்டும் இப்படி ஸந்தோஷிக்கக் காரணம் யாது?—என்று கேட்டார்.

ரிஷிகள்—மனது சிற்றின்பத்திலேயே மண்டியிருக்கும். அநுபவிக்க அநுபவிக்க, ஆசை விருத்தியாகுமேயன்றி அழியாது. ஸ்திரீ முதலிய போக்கிய வஸ்துக்களில் ஆசை வைக்கும் மனது பராவர க்ஞானமுண்டானால் சிற்றின்பத்தை நாடாது. யோக ரகஸ்யங்களை ஆசாரிய முகமாயறிந்து அதன்படி நடக்கும் எங்களுக்கு ஏன் துக்கமுண்டாகும்!

ஸுவர்ச்சலர்—நீங்கள் யாரிடமிருந்து யோக ரஹஸ்யத்தை அறிந்தீர்கள்?

ரிஷிகள்—பராசாருடைய சிஷ்யர் இருவர் சந்திர புஷ்கரணிக் கரையில் பிசாசு ரூபிகளாயிருக்கின்றனர். அவர்களிடமிருந்தே நாங்கள் யோகமார்க்கத்தை அறிந்தோம். நீர் அவர்களிடமே போம்.

வியாஸர்—ஸுவர்ச்சலர் சந்திர புஷ்கரிணிக்குப் போய், பிசாசு ரூபிகளான ரிஷிகளைத் தேடிக் காணாமல்—"நான் செய்த வேதாத்யயனம், யாகம், ஹோமம்—முதலியவை உண்மையாகில், எனக்கு ஆசாரியர் பிரத்யக்ஷமாகட்டும்."—என்று சபதம் செய்தார். உடனே பிசாசு ரூபிகளான ரிஷிகள் பிரத்தியக்ஷமாகி ஸுவர்ச்சலருடைய விருத்தாந்தத்தை விசாரித்தனர். ஸுவர்ச்சலர் அவர்களுக்கு சரணாகதி பண்ணி, யோகமார்க்கத்தை உபதேசிக்கும்படி பிரார்த்தித்தார்.

ஸுமந்து—பரமரஹஸ்யமாய், ஸம்ஸார நாசகமாய், உபநிஷத் ஸித்தமாயுள்ள யோகக்ஞானத்தை உபதேசிக்கிறேன்:—

யோகம் அஷ்டாங்கங்களை யுடையது.

யமம், நியமம், ஆஸனம், பிராணயாமம், பிரத்யாஹாரம், தாரணம், தியானம், ஸமாதி—இவை அஷ்டாங்கங்கள்.

1. தயை, சோம்பலின்மை, வைராக்யம், ஆர்ஜவம், சபலமின்மை, திருதி—இவை யமம் எனப்படும்.

2. சுத்தி, ஆஹாரநியமம், அஹங்கார மமகாரங்களின்மை, ஸங்கமில்லாமை, க்ஷாந்தி, க்ஷமை, தமம், துஷ்டி—இவை நியமம்.

3. ஸ்வஸ்திகம் முதலிய பந்தங்களை யுடையது ஆஸனம்.

4. சஞ்சலமான மனதை ஒருநிலைப்படுத்துவதற்காக—வாய்க்கும் மனதுக்கும் ஸஞ்சரிக்கிற வாயுவை நியமிப்பது பிராணயாமம்.

5. விஷயங்களிலிருந்து இந்திரியங்களைத் திருப்புவது பிரத்யா ஹாரம்.

6. லக்ஷ்யமாயுள்ள பிரம்மத்தினிடம் மனதை நிலைப்படுத்துவது தாரணம்.

7. பிரம்மத்தை அடிக்கடி மனதுக்குப் பரிசயப்படுத்துவது தியானம்.

8. பிரம்மத்தோடு ஏகரஸமாயிருப்பது ஸமாதி.

இது சுருக்கமான யோகலக்ஷணம்.

அனாதிவாஸனையால் மனஸ்ஸு மிகவும் மலின மாயிருக்குமா கையால், கர்மானுஷ்டான மில்லாமலே திடீரென்று யோகத்தை அடைய முடியாது. தபஸ்ஸு, நியமம், விரதம், ஸ்நானம்— முதலியவற்றால் முதலில் மனதை சுத்தமாக்கிப் பிறகு யோகத்தை அடையவேண்டும். பகவத் தியானமில்லாமல் மனம் சுத்தமாகாது; பொன்னிலுள்ள அழுக்கு நெருப்பில்லாமல் நீங்காது. பிரம்மத்தைக் காணும் சக்தி ஒருவருக்கும் இல்லை; அனாதிகாலமாக விஷயங்களி லேயே ஊன்றியிருக்கும் மனஸ்ஸு பிரம்ம விஷயத்தில் பிரவேசியா தாகையால், வித்வானாயிருப்பவன் முதலில் மனதை சுத்தம் செய்து கொள்ளவேண்டும். கர்மங்களைப் போக்கினால்தான் ஆத்மா சுத்த மாகும் ஸகல கர்மங்களும் ஞானத்தாலழியும். ஞானமுண்டாவது பகவதனுக்ரஹத்தினாலாகையால், எல்லோரும் பகவானை ஆச்ரயிக்க வேண்டும். அவனை உத்தேசித்து யக்ஞம் செய்யும் யோகிகள் உத்தமமான சிரேயஸ்ஸைப் பெறுவார்கள்.

ஸுவர்ச்சலரே! பிரபன்னரான உமக்கு உத்தமமான இந்த ரஹஸ்யத்தைச் சொன்னேன். இந்த யோகத்தை அனுஷ்டியும். மேன்மையை நாடுவோர்க்குப் பல இடர்கள் உண்டாகும். ஆயினும், அவை பகவத் தியானத்தால் நீங்கும். ஆத்மசுத்திக்கான ஞானத் தையும் உமக்குத் தெரிவித்தேன். இன்னும் நீர் கேட்க விரும்பு வது யாது?

ஸுவர்ச்சலர்—உம்முடைய உபதேசத்தால் நான் கிருதார்த் தனானேன்; என்னுடைய பித்ருக்களும் கிருதார்த்தராயினர். யோக மார்க்கம் ஜிதேந்திரியர்களுக்குக் கூட மிகவும் துர்லபமானது. காம க்ரோதங்களால் சூழப்பட்டு இந்திரியங்களை ஜயிக்காமலிருக்கும் நான் யோகாப்யாஸம் செய்வதெப்படி?

ஸுமந்து—பாபகர்மத்தினால் மனஸ்ஸு மலினமாகிறது. தீர்த்த ஸ்நானத்தினால் பாவம் தொலையும். இந்தப் புஷ்கரிணி உத்தமமான தீர்த்தம். இந்த ஸ்ரீரங்கம் மஹா புண்ய க்ஷேத்திரம். இவ்விடத்தில் நியமங்களை அனுஷ்டித்தே அநேகர் ஸித்தியடைந்தனராகையால், நீர் இவ்விடமே ஸ்நானம் முதலியன செய்து, பாபத்தைப் போக்கி ஸித்தி பெறுவீராக.

வியாஸர்—ஸுமந்து இவ்வாறு உபதேசிக்கவும், ஸுவர்ச்சலர் ஸ்ரீரங்கத்திலேயே நெடுநாள் வஸித்திருந்து, ரங்கநாதனைக் குறித்து ஸ்தோத்திரம், தியானம், நமஸ்காரம் முதலியவைகளையே நீண்ட காலம் செய்துகொண்டிருந்து, கர்ம பந்தத்தினின்றும் விடுபட்டு ஞான ஸமாதியை யடைந்து மோக்ஷம் பெற்றார்.

நாகதந்தரே! பிசாச ரூபிகளாயிருந்த ஸுமந்து ஸுநந்தர்களும் சந்திரபுஷ்கரிணிக் கரையிலேயே சாபம் நீங்கி மோக்ஷம் பெற்றார்கள்.

## 108-ம் அத்.

### ஸ்ரீரங்க மாஹாத்மியத்தின் பலச்ருதி.

புண்யமான இவ்வுபாக்கியானத்தை தினந்தோறும், அல்லது, பருவகாலத்திலாவது, சிராத்த காலத்திலாவது படித்தாலும் கேட்டாலும், சொன்னாலும் பாபம் நீங்கி பிரம்மத்தை யடையலாம்.

---

காருட புராணத்தில் 108 அத்யாயமாயுள்ள ஸ்ரீரங்க மாஹாத்மியம் பூர்த்தியாயிற்று.

பிரம்மாண்ட புராணத்தில் 11 அத்யாயமாயுள்ள ஸ்ரீரங்க மாஹாத்மியம் மேலே எழுதப்படுகிறது.

ஸ்ரீ

# தசாதயாயி

1—ம் அத்.

சிவபெருமான் நாரதருக்கு ஸ்ரீரங்கமாஹாத்மியம் சொல்லுகிறார்.

நாரதர்—ஸ்வாமி! உம்மிடமிருந்து இந்த த்ரிலோகத்திலுள்ள விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். புண்ய தீர்த்தங்கள், புண்ய க்ஷேத்ரங்கள், கங்கை முதலான புண்ய நதிகள்—இவைகளைப்பற்றியும் அநேகம் இதிஹாஸ புராணங்களையும் நீர் சொல்லுகையில், காவேரியின் ப்ரஸ்தாவத்தில் ரங்க விமானத்தைப்பற்றிச் சொன்னீர். அதை விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன்; அனுக்ரஹிக்க வேண்டும்.

சிவன்—மஹரிஷியே! ஸ்ரீரங்கத்தைப்பற்றி நான் இதுவரையில் ஒருவருக்கும் ஒன்றும் சொன்னதில்லை. அது அவ்வளவு ரஹஸ்யமானது. அதை விஸ்தாரமாகச் சொல்ல ஒருவராலும் முடியாது. சுருக்கமாய்ச் சொல்லுகிறேன்; கேளும்:—

காவேரி நடுவே புஷ்கரிணிக் கரையிலுள்ள ஸ்ரீரங்கம் செல்பவர்களுக்கு நரகம், ஞானக்குறைவு—முதலிய யாதுமில்லை. தும்மல், இடர், எச்சில் உமிழ்தல், கொட்டாவி, அஸத்யம், பதிதர்களோடு பேச்சு—இவை நேர்ந்தபோது "ரங்கம், ரங்கம்" என்றே சொல்ல வேண்டும். தேசாந்தரத்திலிருந்தாலும் ஸ்ரீரங்கத்துக்கு எதிராய் நின்றே நமஸ்கரிக்கவேண்டும். சந்திரபுஷ்கரிணி ஸ்நானம், ரங்கநாத தரிசனம், ஏகாதசி உபவாஸம், துளஸீதள பக்ஷணம், கீதாபாராயணம் இவை ஒருவனுக்கு உண்டானால், அவனுக்கு ஒன்றும் துர்லபமில்லை. "நம் குலத்தில் பிறந்தான் ஸ்ரீரங்கம் போய், காவேரி ஸ்நானம் செய்து, பிராம்மணர்களுக்கு போஜனமும் தக்ஷிணையும் அளித்து, பசுவுக்கு ஒரு பிடி புல் போட்டு, நமக்கு எள்ளும் ஜலமுமாகத் தர்ப்பணம் செய்யானோ" என்றே பித்ருக்கள் எதிர்பார்க்கிறார்கள். "ஸ்ரீரங்கம் போகவும் ரங்கநாதனை தரிசிக்கவும் விரும்புவோர் என்னிடம் வாரார்"—என்றே யமன் சொல்லிவிட்டான். ஸ்வர்கானுபவம் முடியும்போது தேவர்கள் முக்திக்ஷேத்ரமான ஸ்ரீரங்கத்தில் ஜனிக்க விரும்புவார்கள். கன்யாமாஸ க்ருஷ்ண த்ரயோதசியில் ஸ்ரீரங்கத்தில் பித்ருகார்யம் செய்வது நன்று. மாசி மாஸத்தில் சந்திரபுஷ்கரிணி ஸ்நானம் விசேஷம்.

ஒரு நதியில் ஸ்நானம் செய்யும்போது வேறு நதியை நினைக்கக் கூடாதாயினும், ஸ்ரீரங்க தீர்த்தமென்றே எல்லா நதிகளையும் நினைப்பது மேல். பஞ்சாக்ஷர நிஷ்டனாலும் ஸ்ரீரங்கத்தை துவேஷிப்பவன் என்னுடைய பக்தனல்ல. ஸ்ரீரங்க மாஹாத்மியத்தைப் படிப்பது, சொல்லுவது, கேட்பது, எழுதுவது—இவை மிகவும் புண்ணியமான காரியங்கள்.

2—ம் அத்.

*பகவானுடைய நாபிகமலத்தில் பிரம்மா உண்டாகி உலகத்தை ஸ்ருஷ்டித்தார். மது கைடபர்கள் அபஹரித்த வேதம் பகவானால் மீண்டும் பிரம்மாவுக்குக் கிடைத்தது.*

நாரதர்—ஸ்ரீரங்கத்தின் வைபவத்தை எவ்வளவு கேட்டாலும் திருப்தி யுண்டாகவில்லை. ரங்கநாதன், ரங்கவிமானம்—இவற்றின் வரலாறு, க்ஷேத்திரத்தின் வைபவம், தீர்த்த மாஹாத்மியம் இவ்வளவையும் கேட்க விரும்புகிறேன்; சொல்லுவீராக.

சிவன்—மஹரிஷியே! ஸ்ரீரங்க மாஹாத்மியம் முழுவதையும் ஒருவராலும் சொல்ல முடியாது; கேட்கவும் முடியாது. ஆயினும், இவ்வளவு சிரத்தையுள்ள உமக்குக் கொஞ்சம் சொல்லுகிறேன்:—

முதலில் இந்த ப்ரபஞ்சம் முழுவதும் இருள் சூழ்ந்து உறக்கமாயிருந்தது. அப்பொழுது ஸ்ரீமந் நாராயணன் ஒருவர் மட்டுமேயிருந்தார். அவருக்கு ஸ்ருஷ்டி ஸம்ஹாரம்—முதலிய லீலைகளால் விளையாட விருப்ப முண்டாயிற்று. ஜகந்நயனான ஸர்வேசுவரன் தன்னுருவத்தோடும், தன் அம்சமான லக்ஷ்மியோடும் தனது அம்சபூதமான ஆதிசேஷன்மீது க்ஷீராப்தியில் சயனித்துக்கொண்டு, வீரியம் நிறைந்த ஸங்கல்பத்துடன் இருக்கையில், சராசராத்மகமான இந்த ஜகத்தைத் தன் சரீரத்தில் கண்டார். உடனே அவருடைய நாபியிலிருந்து பரிமளம் நிறைந்த தாமரையும் கொடியும் உண்டாயின. அந்தத் தாமரையிலிருந்து பிரம்மா உண்டாயினர். சூன்யமாயிருந்த ப்ரபஞ்சத்தைப் பார்த்து பிரம்மாவுக்கு பயமுண்டாயிற்று.

அப்பொழுது பகவான் யதிருச்சையாக ஹம்ஸ ரூபத்தோடு பிரம்மாவின் முன்னே ஆவிர்பவித்தார்; ஒருவரையொருவர் "கஸ்த்வம்?" (நீ யார்) என்று கேட்டுக்கொண்டனர். தேவர்களுக்குப் பேரிடும் விஷ்ணுவே புத்திரனுக்குப் பேரிடும் பிதாவாக கஸ்த்வம் என்று கேட்டதுமுதல் பிரம்மாவுக்கு, 'க:' என்று பெயராயிற்று.

நான் 'ஹரி:' என்று ஹம்ஸம் சொல்லிற்று. பிரம்மா ஹம்ஸத்தைப் பார்த்து, பிரமாணம், காரணம், உபாயம், யோகம், முதலியவற்றைத் தனக்குச் சொல்லுமாறு பிரார்த்தித்தார். ஹம்ஸம் "ஓம்" என்று சொல்லி மறைந்தது.

ஹம்ஸரூபியான பகவானுல்முதலில் 'ஹரி: ஓம்' என்ற பதங்கள் ஏற்பட்டதால் அந்தப் பதங்களே எல்லாவிடங்களிலும் முதலில் சொல்லப்படுகின்றன. ஹரி: ஓம்—என்று ஆரம்பித்து எந்தக் காரியம் செய்தாலும் அது சிரேஷ்டமாயிருக்கும். காலையில் எழுந்ததும் கிழக்கு முகமாயிருந்து, ஹரி: ஹரி: ஹரி:—என்று சொன்னால் தோஷங்கள் நீங்கும். பெரியோர் ஒவ்வொரு காரியத்திலும் ஹரி ஹரி: என்பர்; பகவானும் அவர்களுடைய தோஷத்தைப் போக்குவார்.

பிரம்மா 'ஓம்' என்ற ஏகாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு பகவானை தியானித்தவாறே பத்மாஸனத்தில் வீற்றிருந்து பெரிய தபஸ் செய்தார். நெடுநாள்கழித்து அவர்வாயிலிருந்து பூ: என்ற பதம் உண்டாயிற்று. முதலில் உண்டான அந்த பூ: என்னும் வியாஹ்ருதியினுல் பூமி, அக்னிஹோத்ரம், யஜுர்வேதம் இவற்றையும்,—தன்முகத்திலிருந்து திரிவ்ருத ஸ்தோமம், அக்னி, காயத்ரீச் சந்தஸ்ஸு,—மனுஷ்யர்களுக்குள் பிராம்மணன், மிருகங்களுள் ஆடு இவற்றையும் ஸ்ருஷ்டித்தார்.[1]

பிறகு பிரம்மா இரண்டாவது தபஸ் செய்து உண்டான புவ: என்ற வியாஹ்ருதியினுல் ஆகாசம், ஸாமவேதம், ஹவிஸ், இவைகளும்—கைகளிலிருந்து பஞ்சதச ஸ்தோமம், திரிஷ்டுப் சந்தஸ், இந்திரன், க்ஷத்திரியர், செம்மறியாடு—இவைகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.

பிரம்மா மூன்றுவது தபஸ் செய்து உண்டான ஸுவ: என்ற வியாஹ்ருதியினுல் தேவலோகம், ருக்வேதம், ஸோமயாகம்—இவைகளேயும், இடுப்பிலிருந்து ஸப்ததச ஸ்தோமம், ஜகதீச்சந்தஸ், வைசியர், பசுமாடு—இவைகளேயும் ஸ்ருஷ்டித்தார்.

பிரம்மா நாலாவது தபஸ் செய்து உண்டான மஹ: என்னும் நான்காவது வியாஹ்ருதியினுல் அதர்வண வேதமும்—பாதங்களி

1. இந்த ஸ்ருஷ்டிக்ரமம் மற்றைப் புராணங்களோடும் ஒத்திருக்கிறதா—என்று ஆராய்ச்சி செய்யவேண்டும்.

லிருந்து ஏகவிம்ச ஸ்தோமம், அனுஷ்டுப் சந்தஸ், சூத்ரர், குதிரை— இவைகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.

உடனே பகவானுடைய காதுகளிலிருந்து மதுகைடபர் என்னும் ராக்ஷஸர்கள் உண்டாகி, பிரம்மாவினிடமிருந்த வேதங்களை அபஹரித்துக்கொண்டு ஸமுத்திரத்தில் மறைந்தனர். அவர்கள் போனவிடம் அறியமாட்டாமல் பிரம்மா மனம் கலங்கித் தாமரைத் தண்டைப் பிடித்துக்கொண்டு தலைகீழாக இறங்கலானார். வெகு யோசனை தூரமுள்ள தாமரைத்தண்டை அநேகம் ஆயிரம் வருஷங்களாகத் தாண்டி, முட்களால் கீறப்பட்டு, தாமரைக்கொடியின் ஆட்டத்தினாலும் நடுக்கமடைந்து கீழே இறங்கி, வெகுநேரம் ஆலோசித்து, ஸமுத்திரத்தில் நுழைந்து,—"அப்பா" என்று குழந்தை போல அழைத்தார் பிரம்மா. அப்பொழுது பகவான் மத்ஸ்யரூபமெடுத்து ஸமுத்திரத்திலிருந்தவாறே—"குழந்தாய்! நான் உன்னுடைய பிதா. உனக்கு வேதங்களைக் கொண்டுவருகிறேன். நீ உன்னிடத்துக்குப் போ." என்று சொல்லி, ஹயக்ரீவரூபமெடுத்து[1] மது கைடபர்களைக் கொன்று, வேதங்களை கிரஹித்துக்கொண்டு, கருட வாஹனத்தின் மீதேறி பிரம்மாவினிடம் போய்ச் சொல்லலானார்:—

"உமக்கு வேதங்கள் உபதேசிக்கப்படவில்லை யாகையால், நஷ்டமாயின; பிரணவம் மட்டும் உபதேசிக்கப்பட்டதால் வேதங்கள் முற்றிலும் நஷ்டமாகவில்லை.

"வேத வித்தை ஆசாரியனின்றி கிரஹிக்கப்பட்டால் நிச்சயமாய் நசிக்கும். வேதங்கள் என்னாலேயே வெளியிடப்பட்டு என்னுடைய ஆக்ஞையையே பரிபாலிக்கின்றன. வேதங்கள் மனிதர்களால் உண்டாக்கப்படுவதும், அழிக்கப்படுவதும், தரிக்கப்படுவதுமல்ல. அநேக ஜன்மங்களில் செய்த புண்ணியத்தின் பலனாய் பிராம்மணர்களால், மட்டுமே வேதங்கள் தரிக்கப்படுகின்றன.

"பிராம்மண ஜன்மமெடுத்து வேதாத்யயனம் செய்யாதார் ஸுராபானம், பிரம்மஹத்தி—முதலியன செய்யும் பாதகர்களுக்கீடாவார். அத்யயனம் செய்த வேதத்தையும் பரிபாலியாதவன் கன்றைக்கொல்லும் கொடும்பாவி போலாவதோடு பாபஜன்மத்தையும் அடைவான். வேதாத்யயனம் பண்ணி யாகம் செய்யும்

1. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர சதகம் 50வது சுலோகத்தில் இந்த விஷயத்தை அழகாகச் சொல்லுகிறார்.

பிராம்மணனானலும் என்னிடம் பக்தியில்லாதவன் இருகால் மிருகம். அவனுக்கு ஸம்ஸார பந்தம் நீங்காது. வேதாத்யயன சீலனான அவைஷ்ணவன், வேதாத்யயனம் இல்லாத வைஷ்ணவன்—இருவருள் என் பக்தனான வைஷ்ணவனே மேலாவான். வேதமும் விஷ்ணு பக்தியுமில்லா பிராம்மணன்—சண்டாளன், பதிதன், விராத்யன், புல்கஸன்,—இவர்களைவிட நிக்ருஷ்டன். வேதம், யக்ஞம், தபஸ்—இவற்றிலும் யக்ஞேசுவரனான என்னிடத்திலும் ப்ரியமில்லாதவன் கர்மசண்டாளனாய், புத்திசூன்யனாய், நிந்திக்கப்பட்டவனுமாயிருப்பான்.

"குழந்தாய்! நீ என்னிடமிருந்தே அங்கோபாங்கங்களான வேதங்களையும், அர்த்த சாஸ்திரம், காமசாஸ்திரம், சில்பம், வைத்யம்—இவைகளையும் அத்யயனம் பண்ணு. என்னுடைய அனுக்ரஹத்தினால் வேத சப்தங்களிலிருந்தே தேவதைகளையும், வர்ணாச்ரம தர்மங்களையும், ஸ்வர்க நரகங்களையும், லோகங்களையும், போகங்களையும், போகங்களின் நாம ரூபங்களையும் ஸ்ருஷ்டிப்பாயாக"—என்று சொல்லி மறைந்தார்.

3—ம் அத்.

*பிரம்மா தபஸ் செய்கையில் ஸ்ரீரங்க விமானம் ஆவிர்பவித்தது. அஷ்டாக்ஷர மாஹாத்மியம்.*

சிவன்—பிரம்மா பூதங்களையும் பதினாலு லோகங்களையும் ஸ்ருஷ்டித்து ஸத்ய லோகத்திலிருக்கையில், தேவதைகளின் வரலாறுகளையும், மஹான்களுக்குக்கூட கர்மம் போகானுபவத்தால் அழிவதையும், ஐசுவரியத்துக்கும் தன்னுடைய பதவிக்கும்கூட அழிவுண்டாகுமென்பதையும் வேதங்களிலிருந்தே தெரிந்துகொண்டு க்ஷீராப்தி சென்று, விஷ்ணுவைக்குறித்து நெடுநாள் தவம் செய்தார். விஷ்ணு கூர்மரூபியாக ப்ரத்யக்ஷமாகி,—"நான் உமக்கு ப்ரஸன்னனானேன்"—என்றார்.

பிரம்மா—பகவானே! நீர் எனக்கு ப்ரஸன்னனாகில், உம்முடைய நிஜஸ்வரூபத்தைக் காட்டும். அதொன்றையே நான் ஸேவிக்க விரும்புகிறேன். அது நீங்கலாயுள்ள உம்முடைய மத்ஸ்யம், கூர்மம், பக்ஷி, மனிதர், குதிரை—முதலிய ரூபங்களை நான் பார்த்தாயிற்று.

14 பகவான்—என்னுடைய அப்ராக்ருத திவ்ய மங்களரூபம் உம்போல்வரால் காண வரிதாகும். என்னுடைய அவதாரங்களை

மட்டுமே நீர் காணலாம். நினைத்தமாத்திரமே நான் சத்ருவைக் கொல்ல வல்லனுபினும், பக்தர்களுக்கு தரிசனம் கொடுப்பதற்காகவே அவதாரங்களெடுக்கிறேன்; அவர்களுக்கு ஸந்தோஷம் விளைப்பதற்காகவே பல லீலைகள் செய்கிறேன். மீன் பார்வையாலும், ஆமை நினைவாலும், பக்ஷிகள் ஸ்பரிசத்தாலும் தன் குஞ்சுகளைக் காப்பதுபோல, நானும் என் பிரஜைகளை அவரவர்க்குத் தக்கபடி ரக்ஷிக்கிறேன்—என்று உமக்குத் தெரிவிப்பதற்காக மத்ஸ்ய, கூர்ம, ஹம்ஸங்களின் ரூபத்தைக் காட்டினேன்; யோக க்ஷேமங்களை வஹிக்கிறேன் என்பதற்காக அசுவரூபமும் பௌருஷத்தைக் காட்டுவதற்காகப் புருஷரூபமும் காட்டப்பட்டன. என்னுடைய உத்தமமான நிஜரூபத்தைப் பார்க்கவிரும்பினால், இந்த மந்திரத்தை ஜபித்துக்கொண்டே மறுபடியும் தவம்செய்யும். இந்த அஷ்டாக்ஷர மந்திரத்தை தினந்தோறும் ஜபிப்பவன் ஸகல ஸித்திகளையும் பெறுவான். வேதமந்திரங்களில் இதற்கு ஸமமான மந்திரமே இல்லை. எல்லா மந்திரங்களிலும் இதுவே ஸாரமானது. இதற்கு மூல மந்திரமென்று பெயர். ஜகத்காரணனும், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு ஹேதுவும், மோக்ஷ தாதாவும், உபாயோபேயங்களும் ஸாத்யனும், ஸித்தனும் நானே என்று இந்த மந்திரம் தெரிவிப்பதால், இதுவே எனக்கு ப்ரியமான மந்திரம். ஜீவன் ஸ்ருஜ்யனும் பரதந்திரனுமிருப்பான்—என்பதையும், ஸம்ஸார மோக்ஷங்களையும் இந்த மந்திரமே சொல்லுகிறது. எனக்கும் என் பக்தர்களுக்கும் செய்யவேண்டிய சாசுவதமான ஆத்மநிவேதனம் இந்த மந்திரத்தினால் செய்யத்தக்கது. என் பக்தர்கள் ஐஹிகங்களாயும் ஆமுஷ்மிகங்களாயுமுள்ள மனோரதங்களையும் மோக்ஷத்தையும் இந்த மந்திரத்தினாலேயே ஸாதித்துக்கொள்வார்கள். அஷ்டாக்ஷர தத்துவமறியாதார்க்கும்,—தபஸ், விரதம், என் பக்தியில் விருப்பம்—இவை இல்லாதார்க்கும் நான் காணவரியன்.

சிவன்—நாரதமஹரிஷியே! பகவான் நம் பிதாவான பிரம்மாவினிடம் இப்படிச் சொல்லி மறைந்தார். பிரம்மா அஷ்டாக்ஷர மந்திரத்தைக்கொண்டு ஆயிரம் வருஷம் தவம் செய்ததும், க்ஷீராப்தியிலிருந்து ஸ்ரீரங்க விமானம் ஆவிர்பவித்தது. அப்பொழுது நீர் நாம் உள்ளிட்ட ஸகல தேவர்களும்,—ஸநந்தர், நந்தர், ஸநந்தர் ஸநகர் முதலான ரிஷிகளும்,—ஸத்யவாதிகளான இதரர்களும்,—கந்தர்வர், யக்ஷர், ஸித்தர், சாரணர், முதலானோர் யாவரும் காணப்

பட்டனர். திவ்ய விமானத்தை வேதமூர்த்தியான கருடன் வஹித்துக்கொண்டிருந்தார். ஆதிசேஷன் முத்துமயமான வெண்கொற்றக் குடை பிடித்தான்; விஷ்வக்ஸேனர் கையும் செங்கோலுமாய்ப் பின்புறமிருந்து உபசரித்தார். சந்திர ஸூர்யர்கள் இருபுறத்திலும் சாமரம் வீசினர். நாரதமஹரிஷியே! நீரும் தும்புருவும்,— கந்தர்வர், கின்னரர், அமரர் முதலானோரும் பகவானைப் பாடி ஸ்தோத்திரம் செய்து வந்தனம் பண்ணினீர்கள். நானும் இந்திரனும்— தேவர் ஸாத்யர், ஸித்தர், ஸாதகர்—முதலானோரும் "ஜிதந்தே"—என்று உரக்க ஸ்தோத்திரம் செய்தோம்; தேவ துந்துபிகள் முழங்கின; அப்ஸரஸ் ஸ்திரீகள் நடித்தனர்; புஷ்கலம் ஆவர்த்தகம்—என்ற மேகங்கள் புஷ்பவர்ஷம் வர்ஷித்தன. ரங்கவிமானம் வந்ததென்று எக்காளம் ஊதியது.

ஸ்வயம் வியக்தமாய், ஐசுவரியம் நிறைந்ததாய், தேஜோமயமாய், பிரணவாக்ருதியாயுள்ள ரங்கவிமானத்தைப் பார்த்து, பிரம்மா தவத்தினின்றெழுந்து நமஸ்கரித்தார்; நான்கு முகங்களாலும் நமோ நம:—என்று சொல்லிக்கொண்டு, வேதங்களுக்கொப்பான வாக்யங்களால் ஸ்தோத்ரம் செய்து, விமானத்தையும் பகவானையும் பார்த்தவாறே கைகூப்பி நின்றார். பகவத் தரிசனத்தை அனுபவிக்கும் ஸமயத்தில் பிரம்மாவின் ஸகலேந்திரியங்களும் கிருதார்த்தங்களாயின.

அப்பொழுது வேத்ரபாணியாய், அஞ்சலிஹஸ்தராயிருந்த ஸூநந்தர் பிரம்மாவிடம் சொல்லலானார்:—

"பிரம்மதேவரே! பகவானுடைய இவ்வாலயத்தைப் பாரும். ஸ்ரீரங்கமென்னும் இவ்வாலயம் உம்முடைய தவத்தின் பயனாய் வந்தது. இவ்விமானம் மூன்று அக்ஷரங்களுள்ள பிரணவமென்றும், பரப்ரம்மஸ்வரூபமென்றும், சப்தாத்மா வென்றும் வியவஸ்தை செய்யப்பட்டுள்ளது. ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரன் இதனுள் சயனித்திருக்கிறார். நாலுதிக்குகளிலும் நமஸ்காரம் செய்துகொண்டே நாலு பிரதக்ஷிணம் செய்து இந்த விமானத்தினுள் போய் எல்லோருக்கும் உபாஸ்யனான பகவானை உபாஸியும்.

4—ம் அத்.

*பிரம்மா ரங்கநாதனை தரிசித்து ஸ்தோத்திரம் செய்கிறார்.*

சிவன்—ஸூநந்தர் சொன்ன இவ்வார்த்தையைக் கேட்டு பிரம்மா மிகுந்த வணக்கத்தோடு விமானத்தினருகே சென்றார்.

ரங்கநாதன் எழுந்தருளியிருக்கும் விமானத்தில் தேவாஸுரர்களுடன் கூடியதாய் சராசரமாயுள்ள இந்த ஜகம் முழுவதும் தெரிந்தது. விமானத்துக்குமேலே ஸ்வர்கமும், கீழே பூமியும், மத்தியில் ஆகாசமும், உள்ளே ஆதிசேஷனும், வாசற்புறத்தில் ஜய விஜயர்களும், பக்கங்களில் விக்னபதியும் துர்கையும், சிகரத்தில் ஜகத்காரணமாய் ஓங்காரரூபியாயுள்ள ஸரஸ்வதியுமிருந்தார்கள். விமானத்தின் சிகரங்களில் வேதங்களும், நாஸிகா ஸ்தானத்தில் ஸகல ரஹஸ்யங்களும், பாதங்களில் யக்ஞங்களும், பலகங்களில் இஷ்டிகளும், ஹ்ருதயஸ்தானத்தில் சயநமும், வயிற்றில் ஹவிஸ்ஸும்,—உட்புறத்தில் தேவர்கள், அஷ்டவஸுக்கள், என்னோடு சேர்ந்த தசருத்ரர்கள், துவாதசாதித்யர்கள், நவக்ரஹங்கள், அச்வினீ முதலிய நக்ஷத்திரங்கள், நக்ஷத்திரரூபிகளான புண்யவான்கள், மரீசி முதலிய ஸப்த ரிஷிகள்,—இந்திரன், யமன், வருணன், குபேரன், அக்னி, நிருருதி, வாயு, ஈசானன், ஸோமன், பர்ஜன்யன் முதலானோரும் இருந்தனர்.

பிரம்மா ஒவ்வொரு திக்கிலும் நமஸ்காரம் செய்துகொண்டு விமானத்தை நாலுதரம் பிரதக்ஷிணம் செய்து உள்ளேபோய்,—அநந்தனுய், ஆதியாய், ஜகத்பூஜ்யனுய் நீல நிறத்தனுய், தெளிந்த முகத்தனுய், கிருபாமயனுய், ஸர்வாபரண பூஷிதனுய், ஒருகையைத் தலையிலணைத்து, மறுகைநீட்டி, ஒருகால் நீட்டி மறுகால் ஒடுக்கி, உலகின் காரியமனைத்தையும் தன் கட்டளைக்கீழாக்கிப் பாம்பணையில் பள்ளிகொண்ட பரமனைக் கண்டு வேதார்த்தம் பொதிந்த வாக்கியங்களால் ஸ்தோத்திரம்[1] செய்தார்:—

"பகவானே! உம்முடைய முகத்திலிருந்து பிராம்மணரும் கைகளிலிருந்து க்ஷத்திரியரும், துடைகளிலிருந்து வைசியரும் பாதங்களிலிருந்து சூத்ரரும் உண்டாயினராதலால், வர்ணாச்ரமாசாரங்களை நீரே விதித்தவராகிறீர். செய்யவேண்டிய யக்ஞமும் அடையவேண்டிய பரமபதமும் நீரேயாகிறீர். வேதம், வேதாங்கங்கள், பாஞ்சராத்ரம் முதலிய சாஸ்திரங்கள்—யாவும் உம்முடைய கட்டளைகளே. நீர் வேதாந்த சாஸ்திரத்தால்தான் அறியத்தக்கவர். நான் உம்முடைய பிரஸாத ரூபமாயும், ருத்ரன் க்ரோதரூபமாயும் இருக்கிறோம். வாயு, ஸூர்யன், சந்திரன், அக்னி, மிருத்யு—முதலானோர் உமக்கு பயந்தே காரியம் செய்கிறார்கள். நசிப்பதற்

1. இந்த ஸ்தோத்திரம் இங்கு நம்மால் சுருக்கி எழுதப்படுகிறது.

கும் நாசமில்லாதிருப்பதற்கும் நீரே காரணம். இந்த ப்ரபஞ்சம், உம்முடைய லீலையால் உண்டானது."

பிரம்மா இப்படி ஸ்தோத்ரம் செய்து முடித்ததும், ரங்கநாதன் பிரம்மாவைப்பார்த்து,—

"பிரம்மதேவரே! உம்முடைய தவத்தாலும் துதியாலும் மகிழ்ந்தேன். நீர் செய்த தபஸ்ஸும், என்னுடைய வைபவத்தைப் பிரகாசிப்பிக்கச் செய்த ஸ்தோத்திரமும் என்னுடைய அனுக்ரஹங்களே. நீர் இப்பொழுது செய்த இந்த ஸ்தோத்திரத்தால் என்னை ஸ்தோத்திரம் செய்பவனுக்கு நான் ஸகல பலன்களையும் கொடுப்பேன். உம்முடைய தவப்பயனாக நீர் இன்று என் ரூபத்தை தரிசித்தீர். இன்னும் நீர் விரும்புவதென்?"—என்று கேட்டார்.

5—ம் அத்.

ரங்கநாதன் பிரம்மாவுக்கு அர்ச்சாவதாரத்தின் ஸ்வரூபத்தை விவரிக்கிறார்.

பிரம்மா—இந்த விக்ரஹத்தைக் கொண்டே உம்மை நான் பூஜிக்க விரும்புகிறேன்.

பகவான்—பிரம்மதேவரே! உம்முடைய கருத்தறிந்தே என் விக்ரஹத்தையும் விமானத்தையும் உமக்குக் காட்டினேன். நீர் என்னை இவ்விமானத்திலேயே பூஜிப்பீராக. என்னை தினந்தோறும் பஞ்சகால பராயணனாயிருந்து[1] பூஜிப்பவனுக்கு நான் மோக்ஷத்தையே கொடுக்க ஸித்தமாயிருக்கிறேன்.

ஆவரணங்களோடு கூடிய இந்த அண்டகோசத்துக்குப் புறம்பாயுள்ள நான் உமக்கு தரிசனம் கொடுப்பதற்காகவே அர்ச்சாரூபியாய் அவதரித்தேன். என்னுடைய இந்த முதல் அர்ச்சாவதாரத்தை நீர் முக்தி பெறுவதற்காகப் பூஜியும். ஆதியில் ஒன்றிலும் பிரவ்ருத்தி செய்யாமல் உதாஸீனனாயிருந்த நான் லீலார்த்தமாக இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தேன். இந்த ப்ரபஞ்சம் ஒரு காரியமும் செய்ய சக்தியில்லாமல் அசேதனமாயிருந்தது; நான் ஸ்வேச்சையாலேயே என்னுடைய ஜீவனோடு இந்த ஜகத்தினுள் பிரவேசித்து, கர்மத்துக்கு வசமாகாமல் ஒவ்வொரு காரியத்தையும் நடத்துகிறேன். சேதனர்களிடம் எனக்குள்ள கிருபையினாலேயே அவர்களுடைய அக்ஞான இருளை நான் ஞானதீபத்தினால் நாசம் செய்கிறேன்.

1. இந்த அத்யாயத்தின் கடைசியில் விவரிக்கப்படுகிறது.

எள்ளுக்குள் எண்ணெயைப் போலவும், ஹிதமே செய்யும் தாய்போல வும், கூடவே இருப்பவனுமான என்னை மோஹத்தினால் யாவரும் அறிகிறதில்லை. அண்டத்துக்குப் புறம்பாயுள்ள நான் லோகானுக்ர ஹார்த்தமாகவே அண்டத்தினுள் வந்திருக்கிறேன்.

இந்த பிரம்மாண்டத்துக்குள் க்ஷீராப்தி, ஸூர்ய மண்டலம், தேவலோகம்—ஆக மூன்று ஸ்தானங்களில் நான் இருப்பதால் எனக்கு த்ரிதாமா—என்று பெயர். இம் மூன்றிடங்களிலுங்கூட ராஜஸர்களும் தாமஸர்களும் என்னைக்காண முடியாதாகையால், நான் கல்பந்தோறும் ஆயிரக்கணக்கான அவதாரங்களெடுக்கிறேன், நான் அவதரிப்பது பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காகவே. நான் சில விடங்களில் அவதரிக்கிறேன்; சிலரிடம் ஆவேசிக்கிறேன்; பிதா, புத்திரன், மித்திரன்—என்று ஸ்நேஹத்தினாலும், இன்னும் காமம், குரோதம், மாத்ஸரியம் முதலியவற்றாலும் ஜனங்கள் எப்படியிருக் கிறார்களோ அப்படியே நானும் ஜன்மமெடுக்கிறேன். என்னை எப்பொழுதும் கீர்த்தனம் செய்பவர்களின் குணங்களும் காரியங் களும் விருத்தியாவதற்காக—ஒன்றிலும் பற்றில்லாத நான் பற்றுள்ளவனாகக் காரியம் செய்கிறேன்.

பிரஜைகளை அனுக்ரஹிப்பதற்காக நான் தாரு, லோஹம், சிலை—இவற்றால் செய்யப்பட்ட மனுஷ்யாக்ருதியான அர்ச்சாரூபி யாக எல்லா த்வீபங்களிலும், தேசங்களிலும், புண்ணிய தீர்த்தங் களிலும், ஆலயங்களிலும், ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு கிருஹத்திலும் அவதரிக்கப்போகிறேன். பஞ்சோபநிஷந்[1] மய னான நான் பரம், வியூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற இந்த ஐந்து ஸ்தானங்களிலுமிருப்பேன். நான் ஆவிர்பவிக்கும்போது என்னுடைய ஸங்கல்பத்துக்கேற்ற சரீரத்தையுடையவனாகிறேன். ஆவேசாவதாரங்களிலும்[2] அம்சாவதாரங்களிலும்[3] என் சரீரம் பஞ்ச

1. ப்ரகிருதி மண்டலத்திலுள்ள பஞ்சபூதங்கள் போல அப்ராக்ருத மான பரமபதத்தில் வேறு பஞ்சபூதங்களுண்டு. அவையாவன-பரமேஷ்டீ, புமாந், விச்வ:, நிவ்ருத்த:, ஸர்வ:—உபநிஷத்துக்களால் அறியப்படுகிற இந்த அப்ராக்ருத பஞ்சபூதம் பஞ்சோபநிஷத் என்று வியவஹரிக்கப்படுகிறது. பகவானுடைய சரீரம் அப்ராக்ருத பஞ்சபூதமயமாகையால் பஞ்சோப நிஷந்மயம்.

2. ஸ்வரூபாவேசம் சக்தியாவேசம் என்று இரண்டு விதம். பரசு ராமாதி சேதன சரீரங்களில் தன்னுடைய அஸாதாரண விக்ரஹத்தோடே ஆவேசித்து நிற்கை ஸ்வரூபாவேசம். விதி சிவாதி சேதனர்களிடம் சக்தி மாத்ரத்தாலே ஸ்புரித்து நிற்கை சக்தியாவேசம்—(தத்வத்ரய வியாக்யா)

3. அம்சாவதாரமென்பது சக்தியாவேசமாயிருக்கலாம்.

பூதமயமாயிருக்கும். அர்ச்சாரூபமான என் சரீரம் தாரு, லோஹம், சிலே, மிருத்து—இவற்றுலாயிருக்கும். பரமாத்மாவான எனக்கு சேதனுசேதனங்களிரண்டுமே சரீரமாகும். அர்ச்சாரூபியாக அவதரித்த என்னை அக்ஞானத்தால் மரமாயும் கல்லாயும் நினைப்பவர் அநேக நரகங்களை அடைவார்கள். எனக்கு அர்ச்சனம், ஸ்தோத்திரம், கீர்த்தனம், நமஸ்காரம்—முதலியவற்றைச் செய்பவர் பரமபதம் பெறுவர்.

சாஸ்திரங்களில் என்னுடைய அர்ச்சாரூபத்தை நாலுவிதமாகச் சொல்லியிருக்கிறது; அர்ச்சாமூர்த்திக்கு ஸமமான என்னுடைய விமானங்களும் நாலுவிதம். அவையாவன—திவ்யம், ஸைத்தம், ஸ்வயம் வ்யக்தம், மானுஷம். இவற்றுள் ஸ்வயம் வ்யக்தம்மட்டும் அக்ருத்ரிமம்; மற்றை மூன்றும் க்ருத்ரிமங்கள். மூர்த்திகள் த்ரைவஸ்துகி யென்றும், ஏகவஸ்துகி யென்றும் இரண்டு வகைப்படும். ஏகவஸ்துகியானது[1] சலம் அசலம்—என்று இரண்டு விதமாயிருக்கும். பரம், வியூஹம், வியூஹாந்தரம்,[2] விபவம்—இவற்றுக்கும விபவத்திலுள்ள ஆவேசாவதாரம் அம்சாவதாரம்—இவற்றுக்கும் ஏற்பட்ட மூர்த்தி ஸுரூபமாய், சோபனமாய் கண்ணைக் கவருவதாய், நிகரில்லாததாய், மனோஹரமாய், பிரஸன்னமாயிருக்க வேண்டுமென்று சில்ப சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. மேல் பார்வையாயும், கீழ் பார்வையாயும், குறுக்குப் பார்வையாயுமுள்ள பிம்பத்தை விலக்கவேண்டும். அதிக உயரமில்லாததாய், மிகச் சிறிதாயில்லாததாய் சுத்தமான திரவியத்தால் செய்யப்பட்டதுமான பிம்பத்தையே பிரதிஷ்டை செய்யவேண்டும்.

(ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்கள்)

"ரங்கம்—என்று பெயருள்ளதாய், ஸ்வயம் வியக்தமுமாயுள்ள இந்த விமானமே முதல் முதலில் ஏற்பட்டது. இது தவிர, ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரி, ஸாளக்ராமம், நைமிசம், தோதாத்ரி, புஷ்கரம், பதரிகாச்ரமம்—ஆக இந்த எட்டும் பூமண்டலத்தில் என்னுடைய ஸ்வயம் வ்யக்த மூர்த்திகள்.

1. த்ரை வஸ்துகியின் பேதங்களைச் சொல்லாமல் ஏக வஸ்துகியின் பேதங்கள் மட்டுமே இங்கு சொல்லப்படுகின்றன. த்ரை வஸ்துகியின் பேதங்களைக் கண்டுகொள்க. புஸ்தகம் பூர்த்தியாவதற்குள் தெரிந்தால் நாமே கடைசியில் விவரிக்கிறோம்.

2. வியூஹம்—ப்ரத்யும்ந அநிருத்தாதி நால்வர். வியூஹாந்தரம்—கேசவ பத்மநாபாதிகள்.

(திவ்ய ஸ்தலங்கள்)

1. பிரம்மதேவரே! நீர் செய்யப் போகிற யாகத்தின் அக்னியில் நான் அனைவர்க்கும் வரதனாய் ஆவிர்பவிக்கப்போகிறேன். அவ்விடத்திலேயே அந்த ப்ரதிமையை நீர் பிரதிஷ்டை செய்வீர். நீர் என்னை ப்ரதிஷ்டித்தது முதல் எல்லோரும் பிரதிஷ்டிக்கப் போகிறார்கள்:— (இது காஞ்சீபுர விஷயம்)

2. தக்ஷிண ஸமுத்ரத்தில் அநந்தன்,
3. கர்ணிகாபுரத்தில் சிவன்,
4. நந்தையில் விச்வகர்மா,
5. வ்ருஷப பர்வதத்தில் தர்மராஜா,
6. அச்வினீ தீர்த்தத்தில் அச்வினி தேவதைகள்,
7. சக்ரதீர்த்தத்தில் இந்திரன்,
8. உத்பலாவதகத்தில் பூமி,
9. கிருஷ்ணமங்கலத்தில் வருணன்,
10. துவாரகையில் அக்னி,
11. ஸ்ரீநிவாஸக்ஷேத்ரத்தில் வாயு,
12. விஷ்ணுதீர்த்தத்தில் ஆகாசம்,
13. கும்பகோணத்தில் தேவாஸுரர்கள்,
14. ஸாரக்ஷேத்ரத்தில் காவேரி,
15. அன்னதீர்த்தத்தில் அன்னதேவதைகள்,
16. ஸ்வர்கத்வாரத்தில் அதிதிதேவி,
17. திருநாராயணபுரத்தில் வேதங்கள்,
18. வருணாசலத்தில் இந்திராணி,

இது முதலான இடங்களில் என்னை அநந்தன் முதலான தேவர்கள் பிரதிஷ்டை செய்யப்போகிறார்கள். இம்மாதிரியான மூர்த்திகளும் விமானங்களும் திவ்யங்களாகும்.

(ஸைத்த ஸ்தலங்கள்)

1. பிருகு தீர்த்தத்தில் பிருகு மார்கண்டேயர்கள்,
2. மந்தரக்ஷேத்ரத்தில் மரீசி,
3. சித்ரகூடத்தில் பதஞ்ஜலி,
4. தாம்ரபர்ணி தீரத்தில் அகஸ்தியர்,
5. ஸத்ய பர்வதத்தில் இந்திரத்யும்னன்,

6. பாண்டிய சிகரமான கோங்கணத்தில் குபேரன்,
7. நந்தி புரத்தில் சிபி சக்ரவர்த்தி,
8. கும்பத்வாரத்தில் மஹோதயன்,
9. வியாஸ தீர்த்தத்தில் கிருஷ்ண த்வைபாயனரான வியாஸர்,
10. தேவிகா தீரத்தில் மைத்ரேயர்,
11. சௌனகாச்ரமத்தில் சௌனகர்—

இதுமுதலான இடங்களில் என்னை பிருகு மார்க்கண்டேயர் முதலான ஸித்தர்கள் பிரதிஷ்டை செய்யப்போகிறார்கள். ஸித்தர்களால் பிரதிஷ்டை செய்யப்படும் பிம்பமும் விமானமும் ஸைத்தங்களாகும்.

மனுஷ்யர்களால் பக்தி ச்ரத்தைகளுடன் ஸ்தாபிக்கப்படுவது மானுஷமாகும்.

பிரதிஷ்டை செய்கிறவனுடைய தபோ பலத்தினாலும், பூஜையின் விசேஷத்தினாலும், பிம்பத்தின் ரூபத்தினாலும் நான் எப்பொழுதும் அந்த பிம்பத்தின் ஸமீபத்திலேயே இருப்பேன்.

ஸ்வயம் வியக்த க்ஷேத்ரத்தைச் சுற்றி இரண்டு யோஜனை தூரமுள்ள பிரதேசம் பாபத்தைப் போக்கடிப்பதாய் இறப்போர்க்கு மோக்ஷத்தைக் கொடுப்பதுமாயிருக்கும்.

திவ்ய தேசத்தைச் சுற்றி யோஜனை தூரமும், ஸைத்த க்ஷேத்ரத்தைச் சுற்றி அரை யோஜனை தூரமும், மானுஷ க்ஷேத்ரத்தைச் சுற்றி க்ரோச தூரமும் உத்தமமாகும்.

பகவத் பிம்பம் இருக்கும் வீடு சிரேஷ்டமாயிருக்கும். ஸாளக்ராமம் இருக்குமிடமெல்லாம் ஸ்வயவியக்த க்ஷேத்ரத்துக் கீடாகும். விஷ்ணு ஸ்தானமாயுள்ள ஸ்வயம் வியக்தம், திவ்யம், ஸைத்தம், மானுஷம்—ஆக இந் நாலில் ஒன்றேனும் பூஜிக்கப்படாத இடம் சண்டாள வாஸத்துக் கீடாகும். பிரம்மவாதிகள் அவ்விடத்தை த்யஜிக்கவேண்டும்.

ஸ்ரீமந் நாராயணனுடைய ஸன்னிதி பனிரண்டு உண்டாகில் அவ்விடம் ஸாளக்ராம க்ஷேத்ரத்துக்கு ஒப்பாகும்.

ஸ்வயம் வியக்த க்ஷேத்ரங்களுள் ஸ்ரீரங்கம் மஹா சிரேஷ்டமானது. இந்த க்ஷேத்திரத்திலுள்ள பக்ஷி மிருகம் முதலியனகூட முக்தி பெறும்.

பிரம்மதேவரே! பாஞ்சாரத்ரவிதிப்படி பஞ்சகால பராயணரா யிருந்து நீர் என்னை இவ்விமானத்தில் தினந்தோறும் திரிகாலம் ஆராதிப்பீராக.

பஞ்சகாலமாவது அபிகமனம்,[1] உபாதானம், இஜ்யை, ஸ்வாத் யாயம், யோகம். இந்த பஞ்சகால நிஷ்டை தவறுதிருப்பவன் பரமபதம் சேருவான்.

**6—ம் அத்.**

*ரங்கநாதனை ஆராதிப்பதற்காக ஏற்பட்ட சாஸ்திரம் மந்திரம்— முதலியவைகளும் ரங்கநாதன் ஸத்யலோகத்தில் பிரம்மாவின் ஆராதனத்திலிருப்பதும் சொல்லப்படுகின்றன.*

பிரம்மா—ஸ்வாமி! உம்மைப் பூஜிப்பதற்கு மந்திரம் யாது? கல் பம் என்ன? பூஜிப்போர்க்கு என்ன பலன்?—இவற்றைச் சொல்லு வீராக.

பகவான்—ஸாத்வதம் பௌஷ்கரம் என்று இரண்டு பாஞ்ச ராத்ர ஸம்ஹிதைகள் உள்ளன. நீர் தீக்ஷை செய்துகொண்டு தீக்ஷிதர் களான ஐவரோடுகூட அந்த ஸம்ஹிதைகளில் சொல்லியபடி துவாதசாக்ஷர[2] வித்யையினுலும் அஷ்டாங்க விதானத்தினுலும் என்னை தினந்தோறும் பூஜிப்பீராக.

அனேகம் பிரம்மாக்கள், மனுக்கள், இந்திரர்கள், சித்ரசிகண்டி கள்[3] முதலானேர் பூர்வகர்மத்தால் ஆதிபத்யம் பெற்றும், போகங் களை அனுபவித்தும், பல இடர்களால் கர்மசேஷத்தையடைகிறுர்கள். மனுஷ்யனுனுலும் தேவனுனுலும் என்னிடத்தில் எப்பொழுதும் பக்தியோடிருப்பவன் நிர்விக்னமாய் போகங்களை அனுபவித்து வைகுண்ட பதவியை அடைவான். ஆகையால், பிரம்மதேவரே! நீர் நிர்விக்னமாய் பிரஜைகளை ஸ்ருஷ்டித்துக்கொண்டு துவிதீய பரார் த்தின் முடிவில் என்னிடம் சேருமுன், அனேகம் பிரம்மாக்களால்

1. அபிகமனம்—காலையில் முதல் முதலாகச் செய்யும் பூஜை. உபாதானம்—பூஜைக்கு வேண்டிய ஸாமக்கிரிகளைச் சேகரிப்பது. இஜ்யை—பிரதான பூஜை. ஸ்வாத்யாயம்—வித்யை. யோகம்—யோ காப்பியாஸம்.

2. துவாதசாக்ஷர வித்யை—"ஓம் நமோ பகவதே வாஸுதேவாய" என்னும் துவாதசாக்ஷர மந்திரம்.

3. சித்ரசிகண்டிகளாவார் த்ருவ மண்டலத்தைச் சுற்றியுள்ள மரீசி அத்ரி முதலிய ஸப்தரிஷிகள்.

ஆராதிக்கப்பட்ட இந்த ரங்கவிமானத்தை துவாதசாக்ஷர நிஷ்டரா யிருந்து தினந்தோறும் அர்ச்சித்து வாரும். துவாதசாக்ஷர நிஷ்டரான என் பக்தர்களுக்கு நானே கதி. அவர்கள் இதர தெய்வத்தை அடைய மாட்டார்கள். என் பக்தன் மிகுந்த பாபியானாலும் அதோகதியை அடையான். அவனுடைய மனஸும் பாபத்தில் பிரவிருத்தியாது. ஆகையால், நீர் என்பக்தராய் தீக்ஷிதராயிரும். என்னையே ஆராதிப்பவன் சாசுவதமான என்னையே அடைவான். இதர தேவதைகளை ஆராதிப்பவன் பிரஷ்டனாய் அதோகதியை யடைவான். என் பக்தன் ஒருகால் பாபத்தில் பிரவிருத்தித்தாலும் ஒரு ஜன்மம் கழித்தாவது என்னைச் சேருவான். இதர கர்மம் நன்றாக அனுஷ்டிக்கப்பட்ட போதிலும் ஒருவனை ரக்ஷியாது; என் ஸம்பந்தமான கர்மம் குணமில்லாதவனையும் ரக்ஷிக்கும். அனேகம் ஜன்மங்களுக்குப் பிறகு ஞானியாகி என்னை யடைய வேண்டும். எல்லாம் வாஸுதேவனே என்ற ஞானமுள்ள மஹாத்மா துர்லபன். சந்திர ஸூர்யர்கள் போய்ப் போய்த் திரும்பி வருகிறார்கள். துவாதசாக்ஷர சிந்தையுள்ளவர்கள் இன்னமும் இந்த ஸம்ஸாரத்தில் மீளுகிறதில்லை. என் பக்தர்களையும், என் வித்யையையும், என் ஸ்தானமான ஸ்ரீரங்கத்தையும், என்னால் செய்யப்பட்ட ஸ்ரீபாஞ்சராத்ர மஹா சாஸ்திரத்தையும் தூஷிப்பவர்களுடைய நாக்கு அறுக்கத்தக்கது. ஜகம் முழுவதும் "ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்கம்" என்றே உச்சரிக்குமாகில் ஸ்வர்க நரகங்களாகிற இரண்டு லோகங்களும் அழிந்து விடும்.

தினந்தோறும் காலையில் இருபது[1] மந்திரங்களால் அபிகமனம் செய்து, ஔபசாரிகம், ஸாம்ஸ்பர்சம், போஜ்யம்—என்ற மூன்று வித போகங்களால் என்னை ஆராதியும்.

தூபம், தீபம், கண்ணாடி—முதலியன ஔபசாரிக போகங்கள்.

வஸ்திரம், ஆபரணம், சந்தனம்—முதலியன ஸாம்ஸ்பர்ச போகங்கள்.

பாயஸம், அபூபம், அன்னம்—முதலிய போஜ்ய போகங்கள்.

சிவன்—நாரதரே! ரங்கநாதன் எல்லா தேவர்களின் முன்னிலையில் பிரம்மாவினிடம் இவ்வாறு சொல்லி அவ்விமானத்திலேயே மௌனமாய் சயனித்திருந்தார். பிரம்மா விமானத்தை

1. இருபது மந்திரங்களால்—இம்மந்திரங்கள் யாவை யென்று தெரியவில்லை.

எடுத்துக்கொண்டு ஸத்ய லோகத்தின் எல்லைப்புறத்தில் விரஜா நதிக் கரையில் விச்வகர்மாவுடன் சாஸ்திர முறைப்படி ப்ரதிஷ்டை செய்தார். துலா மாஸத்தில் கிருஷ்ணபக்ஷ பத்ரையில்[1] சந்திரன் ரோஹிணீ நக்ஷத்திரத்திலிருக்கும்போது பகவான் பிரம்மாவுக்கு ப்ரத்யக்ஷமானார். அது முதல் ஸ்ரீரங்கவிமானம் ஸத்ய லோகத்திலேயே இருந்தது.

பிரம்மா பாஞ்சராத்ர மறிந்து தீக்ஷை பெற்றுக்கொண்ட ஐந்து பிராம்மணர்களோடு நித்ய நைமித்திக விதிகளால் ரங்கநாதனைப் பூஜித்துக் கொண்டிருந்தார்; அந்த ஸத்ய லோகத்திலேயே பிரம்ம ரிஷிகளோடுகூட விஷ்ணுநக்ஷத்ரமான திருவோணத்தில் முறைப்படி உத்ஸவத்தையும் அவபிருதத்தையும் செய்தார்; தக்ஷப்ரஜாபதி, ஸ்வாயம்புவ மனு முதலானோர்களையும், தன்னுடைய மானஸ புத்திரர்களையும், இன்னும் தமக்கு ப்ரியமானவர்களையும்கூட ரங்கநாதனைப் பூஜிக்கச் செய்தார்.

பிரம்மா ஸூர்யனுக்கு ரங்கவிமானத்தைக் காண்பித்தார். ரங்கநாதன் ஸூர்யனுக்குப் பாஞ்சராத்ரத்தை உபதேசித்தார். ஸூர்யனும் ஸத்ய லோகத்தில் ரங்கநாதனை நித்ய நைமித்திக விதிகளால் ஆராதித்துக்கொண்டிருக்கிறான். ஸூரியன் பாகவத தர்மமான பாஞ்சராத்ரத்தை மனுவுக்கு உபதேசித்தான். மனுவும் ரங்க விமானத்தில் பகவானை ஆராதித்தார்.

மனு தன் புத்திரனான இக்ஷ்வாகுவுக்கு வைஷ்ணவ தர்மங்களை உபதேசித்தார். இக்ஷ்வாகு தபஸ் செய்து ஸ்ரீரங்கவிமானத்தை பிரம்மாவினிடமிருந்து லபித்து சாஸ்திரப்படி அயோத்தியில் பிரதிஷ்டித்துப் பூஜை செய்தான்.

இப்படி பரம்பரையாகக் கிடைத்த ஸ்ரீரங்கவிமானத்தை ஸ்ரீராமபிரான் மஹாத்மாவான விபீஷணனுக்குக் கொடுத்தார். விபீஷணன் அந்த விமானத்தைக் கொண்டுவந்து காவேரியில் பிரதிஷ்டிப்பித்தான். அதுமுதல் பகவான் காவேரி தீரத்திலிருக்கிறார்.

பங்குனி மாஸம், சுக்லபக்ஷம், ஸப்தமி, சனிக்கிழமை, சந்திரன் ரோஹிணியிலும், குரு ரேவதியிலும் இருக்கும்போது, ஸ்திரீ

1. பத்ரை—நந்தா, பத்ரா, ஜயா, ரிக்தா, பூர்ணா—என்று திதி பதினைந்தும் ஐந்து விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. த்விதீயை, ஸப்தமி, த்வாதசி இம் மூன்று பத்ரைகளில் இங்கு த்விதீயையென்று ரோஹிணியால் நிச்சயிக்கலாம்.

புமான்களென்ற இரண்டு விதமாயுமுள்ள அபிஜித் காலமான மத்தியானத்தில் ஸ்ரீரங்கவிமானம் காவேரி தீரத்தில் விபீஷணனால் பிரதிஷ்டிக்கப்பட்டது. அது முதல் ஸ்ரீரங்கவிமானம் கல்பாந்த ஸ்தாயியாய் இப்பொழுதும் மனுஷ்யர்களால்கூட காணப்படுகிறது.

நாரதரே! இந்த ரஹஸ்யம் முழுவதும் உமக்குச் சொல்லப்பட்டது. இந்த ரஹஸ்யத்தை அறிந்தவன் மோக்ஷத்தை யடைவான். ரங்கவிமானத்தின் ஆவிர்பாவத்தை தினந்தோறும் கீர்த்தனம் செய்பவன் நற்கதியடைவான். வாஸுதேவனைவிட வேறு மங்களமும், பாவனமான வஸ்துவும், வேறு தெய்வமும் இல்லை. வாஸுதேவனுக்கு வணங்கினவன் துக்கத்தை யடையான்.

7—ம் அத்.

*இக்ஷ்வாகு ரங்கவிமானத்தை லபித்த விவரம்.*

நாரதர்—சிவபெருமானே! உத்தமமான ஸ்ரீரங்க விமானம் பிரம்மலோகத்திலிருந்து இங்கே எப்படி வந்தது? இக்ஷ்வாகு எப்படித் தவம் செய்து இந்த விமானத்தை லபித்தான்? விபீஷணன் இதை எப்படிக் காவேரிக்குக் கொண்டுவந்தான்? இந்த விமானம் கடைசியில் என்னவாகும்? இவற்றை யெல்லாம் ஸ்வாமி! எனக்குச் சொல்லுவீராக.

சிவன்—வராஹ கல்பத்தில் வைவஸ்வத மன்வந்தரத்தில் முதல் சதுர்யுகத்தின் ஆரம்பமான கிருதயுகத்தில் மனு புத்திரனான இக்ஷ்வாகு வென்னும் அரசன் அயோத்தியை ஆண்டு வந்தான். வேத வேதாந்த தத்வக்ஞனாய், நீதிசாஸ்திர வித்தமனாய், பஞ்சகால பராயணனாய், பிதாவினிடமிருந்து தனுர்வேதம் கற்றவனாய், பகவத் தர்ம மறிந்தவனாய், யாகம் செய்பவனாய், வஸிஷ்ட மஹர்ஷியின் சிஷ்யனாய், யுத்தத்தில் ஜயசீலனுமாயிருந்த இக்ஷ்வாகுவுக்கு இம்மாதிரி எண்ணம் உண்டாயிற்று:—

"விஷயத்தில் பற்றுள்ளவரின் மனஸ்ஸு ஒருக்காலும் மேன்மையை நாடாது. சிராத்த தேவரான என் பிதா மனுவும், பிதாமஹனான ஸூர்யனும், மற்றவர்களும் பிரம்மலோகம் போய், அங்கு பகவானை ஆராதித்து, போக மோக்ஷங்களைப் பெற்றனர். அவர்கள் போல நான் பிரம்மலோகம் போக முடியாது. என்னுடைய புத்திரர்களும் மற்று யாரும் பிரம்மலோகம் போக இயலாது. உலகமெல்லாம் என்னால் மோக்ஷம் பெறும்படியாக நான் எப்படி பகவானை ஆராதிப்பேன்!"—என்று ஆலோசித்துத் தனக்கு ஆசாரியரான வஸிஷ்டரைக் கேட்டான்.

வஸிஷ்டர்—ராஜனே! நீ நன்றே நிச்சயித்தாய்! உன் விருப்பம் தபஸ்ஸினால் தான் நிறைவேறும். சதகோடி ப்ரவிஸ்தரமான[1] புராணத்திலிருந்து முன்பு மஹர்ஷிகளும் நானும் பார்த்த பவிஷ்யத் விஷயத்தைச் சொல்லுகிறேன்:—

பகவானுடைய ஸ்தானமான ஸ்ரீரங்கவிமானம் ஸத்யலோகத்திலுள்ள பிரம்மாவினிடமிருந்து உன் மூலமாக இந்த லோகத்துக்கு வரப்போகிறது. உன்னுடைய தபஸ்ஸுக்கு ஸந்தோஷித்து பிரம்மா உனக்கு அந்த விமானத்தைக் கொடுப்பார். அது நெடுநாள் அயோத்தியிலிருக்கும். உன்னுடைய வம்சத்தில் ராமனாய் அவதரிக்கும் ஸர்வேசுவரன் ராவணனை வதம் செய்து, அவனுடைய தம்பியாய் தனக்குப் பிரியனாய் பிரியகாரியுமாயுள்ள விபீஷணனுக்கு அவ்விமானத்தைச் கொடுக்கப்போகிறார். விபீஷணன் விமானத்தைக் காவேரி தீரத்தில் புஷ்கரிணிக்கரைக்குக் கொண்டுபோவான். அது அங்கே உன்னுடைய வம்சியர்களான சோள ராஜாக்களால் ஆராதிக்கப்பட்டுக் கல்பம் முடியுமளவுமிருந்து, ஸத்யலோகத்துக்கு மீளும். கல்பந்தோறும் ரங்கநாதன் தேவலோகத்திலிருந்து பூலோகம் வருவார்; த்விதிய பரார்த்தத்தின் முடிவின் தன்னிருப்பிடம் செல்வார். காவேரி தீரத்தில் வஸிப்பவர்க்கு ரங்கநாதன் மிகவும் பிரியமாயிருப்பார். ஆகையால், ராஜனே! நீ லோக க்ஷேமத்தின் பொருட்டு அஷ்டாக்ஷரபரனாயிருந்து என் ஆச்ரமத்துக்கருகே தீவிரமாகத் தபஸ் செய்வாயாக.

சிவன்—வஸிஷ்டரின் சொல்படி இக்ஷ்வாகு தன் பத்தினியோடு கூடத் தவம் செய்தான். அவனுடைய தவத்தைக் கெடுக்க இந்திரன் அப்ஸரஸ் ஸ்திரீகளையும் மன்மதனையும் அனுப்பினான். இக்ஷ்வாகு அப்ஸரஸ் ஸ்திரீகளின் மயக்குகளுக்கு வசமாகாமல் அந்த ஸ்திரீகளுக்கும் மன்மதனுக்கும் பிரியமாக அதிதிபூஜை செய்தான்.

மன்மதன் இக்ஷ்வாகுவினுடைய நிஷ்டைக்கு வியந்து— "ராஜனே! நீ இந்திரியங்களை ஜயித்தவனாகிறாய்! நான் இதுவரையில் எந்த ரிஷியாலும் தோல்வியடையவில்லை. என்னை ஜயிக்க ஆரம்

---

1. சதகோடிப்ரவிஸ்தரம்—ராமாயணத்துக்கு அதிகமாகச்சொல்லப்படும் இந்த விசேஷணத்தைக்கொண்டு 24,000 சுலோகமாய் பூலோகத்திலுள்ள ராமாயணம் நூறுகோடி சுலோகமாக தேவலோகத்தில் விளங்குகிறதென்று பலர் சொல்வதுண்டு. இந்த ஸ்ரீரங்க மாஹாத்மியத்தில் சதகோடிப்ரவிஸ்தரமென்ற விசேஷணம் ராமாயணத்தைக் குறிக்காமல் புராண ஸாமான்யத்தைக் குறிக்கிறது. சதகோடி விஸ்தரமாயுள்ள புராணம் என்று அர்த்தம். "பலகோடி நூறுயிரம்" என்றாற்போல ராமாயணம் அவ்வளவு பெரிது—என்றுமட்டுமே பொருளாகும்.

பித்த ருத்ரன்கூட க்ரோதத்தினுல் தோல்வியடைந்தார். உலகம் முழுவதும் காமனுகிய என்னுலாவது க்ரோதத்தினுலாவது ஜயிக்கப் படுவது. காம க்ரோதங்களால் பிரம்மா, சிவன், இந்திரன்—முதலா ேனார் யாவரும் ஜயிக்கப்பட்டனர். ராஜனே! காமக்ரோதங்களாகிய நாங்கள் இன்று உன்னுல் ஜயிக்கப்பட்டோம். ஜகம் முழுவதையும் வசப்படுத்தும் காமக்ரோதங்களான நாங்கள் ஸர்வேச்வரனுன ஸ்ரீமந் நாராயணனுடைய வசத்திலிருக்கிறேம். விஷ்ணுபக்தியால் விஷ்ணு வுக்கு ஈடாயுள்ள உன்னுடைய இஷ்டம் நிறைவேறட்டும். நாங்கள் போகிறேம்."—

என்று சொல்லிப்போய் தேவர்களிடம் யாவற்றையும் தெரி வித்தான் (மன்மதன்.)

இக்ஷ்வாகு மீண்டும் தபஸ் செய்கையில், இந்திரன் ஐராவத மேறி வந்தான். இக்ஷ்வாகு அவனுக்கும் அதிதிபூஜை செய்ய லானுன். இந்திரன் இக்ஷ்வாகுவின்மீது வஜ்ராயுதத்தை வீசவும் இக்ஷ்வாகு விஷ்ணு சக்ரத்தை தியானித்தான். சக்ராயுதத்தினுல் வஜ்ராயுதம் சக்தியிழந்தது. இந்திரன் பிரம்மாவினிடம் போய் யாவற் றையும் தெரிவித்தான்.

பிரம்மா தம்முடைய எட்டுக் கண்களையும் மூடிக்கொண்டு இக்ஷ்வாகுவின் விருப்பத்தை யோகத்தாலறிந்தார்; இக்ஷ்வாகு ஸ்ரீரங்க விமானத்தைப் பெறுவதற்காகத் தவம் செய்கிறனென்று தெரிந்து கொண்டு மனம் கலங்கி விமானத்தினிடம் போனுர். அப்பொழுது ரங்கநாதன் பிரம்மாவுக்குச் சொல்லுகிறர்:—

"பிரம்மதேவரே! நீர் வருந்த வேண்டா. நான் முன்னதாக நிச்சயித்துவிட்டேன். நான் இப்பொழுது அயோத்திக்குப் போகி றேன். அங்கே நாலுசதுர்யுகம் ரகுவம்ச சத்தரசர்களால் ஆராதிக்கப் பட்டு பிறகு, சோளராஜாக்களால் ரக்ஷிக்கப்படும் காவேரி ப்ரதேசத் தில் சந்திர புஷ்கரிணிக் கரையில் சயனித்திருப்பேன். அங்கே ஏழு மன்வந்தரம் வரையிலிருந்து ஸாயங்காலத்தில் உம்மிடம் வரு கிறேன். இதே விமானத்தில் இந்த விக்ரஹத்துடனேயே போய் வருகிறேன். பிறகு, நீர் என்னைப் பூஜிக்கலாம். த்விதீய பரார்தத் தின் முடிவில் நான் உமக்கு முக்தி கொடுக்கிறேன்.

"ஒரு பிம்பத்துக்கு ஒரு நாள் பூஜையில்லாவிடினும் மஹா தோஷமுண்டாகும். அதற்காக ப்ராயச்சித்தம் ஏற்படும். ஆறு மாஸம் பூஜையில்லாவிடில் மறு பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று ஸச்சாஸ்திர மறிந்தோர் சொல்லுவர். உம்முடைய ஒரு நாளில்[1]

1. பிரம்மாவுக்கு ஒரு நாளின் அளவு அதிகம்.

மூன்று காலமும் எனக்குப் பூஜை நேரிடுமாகையால் தோஷ மில்லை. ஆதலால், நீர் பிராயச்சித்தமாவது பிரதிஷ்டையாவது செய்ய வேண்டாம். நானும் ஸ்வயம் வியக்தன்; நீரும் தவறுமல் என்னைப் பூஜிக்கிறீர். திவ்யம், ஸைத்தம், மானுஷம்—என்ற மூன்று பிம்பங்களுக்குப் பூஜையில் தந்திர ஸாங்கர்யம் (ஒரு சாஸ்திர முறை யாகப் பூஜை ஏற்பட்டிருக்க மற்ருெரு சாஸ்திர முறையில் நடக்கும் பூஜை) நேர்ந்தால் பிராயச்சித்தமுண்டு. ஸ்வயம் வியக்தத்துக்கு இந்த தோஷம் இல்லை.

"நான் ஸ்ரீரங்க விமானத்திலிருந்து ஜனங்களுக்கு ஹிதம் செய்யப்போகிறேன். ஆகையால், பிரம்மதேவரே! என்னை இக்ஷ்வாகுவுக்குக் கொடும். உமக்கு இந்தப் பகல் போய் ராத்திரி வரும்போது உம்மிடம் வருகிறேன்"

பகவான் இப்படிச் சொன்னதும், பிரம்மா விமானத்தை கருடன் மீது வைத்துக் கொண்டுவந்து இக்ஷ்வாகுவுக்குக் கொடுத்தார்.

## 8—ம் அத்.

ரங்க விமானம் காவேரி தீர்த்தத்துக்கு வந்த விவரம்.

இக்ஷ்வாகு ரங்க விமானத்தைப் பெற்றுக்கொண்டு அயோத்தி சேர்ந்து நகரத்துக்கு வடக்கில் அரை க்ரோச தூரத்தில் ஸரயூ நதிக்கும் தமஸா நதிக்கும் மத்தியில் தெற்கு முகமாக ப்ரதிஷ்டிப்பித்து பிராகாரம், கோபுரம், மண்டபம்—முதலியவற்ருல் அலங்கரித்தான். அநேகம் பிராம்மணர்களாலும், அர்ச்சகர்களாலும், பரிசாரகர்களாலும், தேவ தத்வமறிந்தவர்களாலும் நகரத்தை நிரப்பிவைத்து, சாஸ்திரோக்தங்களான நித்ய நைமித்திக உத்ஸவங்களையும் ரங்கநாதனுக்கு நடத்திஞன்; பங்குனி மாஸம் உத்தர நக்ஷத்திரத்தில் உத்ஸவ அவபிருதத்தையும் செய்தான்.

இக்ஷ்வாகுவுக்குப்பிறகு, அவனுடைய வம்சத்தரசர்களாலும் நாலு சதுர்யுகம் முடிய ரங்கநாதன் ஆராதிக்கபபட்டார். ஐந்தாம் சதுர்யுகத்தின் திரேதாயுகத்தில் தசரத சக்ரவர்த்தி புத்திரனைப் பெறுவதற்காக அசுவமேத யாகம் செய்யலாஞன். யாகத்துக்காக எல்லா ராஜாக்களும் வந்திருந்தனர். சோளதேசத்தை ஆண்டு கொண்டிருந்த தாமவர்மா என்பவனும் தசரத சக்ரவர்த்தியால் அழைக்கப்பட்டு யாகத்துக்கு வந்தபோது ஸ்ரீரங்க விமானத்தை தரிசித்தான். ரங்கநாதனுக்கு நடந்த பூஜையையும், தசரத சக்ரவர்த்தியினுடைய யாகத்தின் சிறப்பையும், அயோத்தியா நகரத்தின்

ஐசுவரியத்தையும் கண்டு— "இக்ஷ்வாகு தவம் கிடந்து பெற்ற ரங்க விமானத்தின் மஹிமையாலன்றோ இங்கு இத்தனை செழிப்பு உண்டாயிற்று! நானும் தவம் செய்து, போக மோக்ஷங்களைக் கொடுக்க வல்ல இவ்விமானத்தைப் பெறுகிறேன்!"— என்று நிச்சயித்து, யாகம் முடிந்தவுடன் தன் தேசம் போய் சந்திர புஷ்கரிணி தீரத்தில் தபஸ் செய்ய ஆரம்பித்தான்.

"உனக்கு துர்லபமானதொன்றுமே யில்லாதிருக்க, ராஜனே! நீ தவம் கிடக்கக் காரணமென்?"—என்று மஹரிஷிகள் தர்மவர்மாவைக் கேட்டார்கள்.

தர்மவர்மா— பகவானுடைய ஸ்வயம் வியக்த ஸ்தானமாயுள்ள ஸ்ரீமத் ரங்கத்தை என்னுடைய புண்ய கர்மங்களால் கொண்டுவர விரும்புகிறேன். பிரம்மா போலவும் இக்ஷ்வாகு போலவும் லோக க்ஷேமத்துக்காகவே நான் இப்படி ஸ்ரீரங்க விமான விஷயமாய் யத்தனிப்பது.

ரிஷிகள்— ராஜனே! நீ தபஸ் செய்யவேண்டாம். உன் இஷ்டம் நிறைவேறும். முன்பு நடந்ததோர் விஷயம் சொல்லுகிறோம்; கேள்:—

இங்கிருந்து வடக்கே க்ரோச தூரத்தில் உன்னுடைய புராதன நகரம் பாழாய்க் கிடக்கிறது. முன்பு சிவன் கோபங்கொண்டு மன்மதனை எரித்ததுபோல அந்த நகரத்தையும் எரித்துவிட்டார்.[1] அவ்விடத்துக்கும் வடக்கில் புலஸ்திய சிஷ்யராய், புண்ய சீலராய், ஹிரண்யகேசி யெனப்படுமவராயுள்ள தால்பியருடைய[2] ஆச்ரமம் இருக்கிறது. அதற்கு ஸத்யதர்மா[3] —என்றுபெயர். முன்பு நாங்கள் ஒரு காரியமாக அந்த ஆச்ரமத்துக்குப் போயிருந்தோம். அவ்வாச்ரமத்துக்கு வடமேற்கில் நீலீ வனம்[4] என்றொரு காடு உள்ளது. அவ்வனத்திலுள்ள வியாக்ராஸுரனை[5] பகவான் வதம் செய்துவிட்டு

1. புராணங்களில் பார்க்க வேண்டும்.

2. தால்பியருக்கே ஹிரண்யகேசி யென்பது காரணப் பெயராயிருக்கலாம்.

3. இந்திர ஸபைக்கு ஸுதர்மா என்ற பெயர்போல ஸத்யதர்மா என்று இங்கு ஆச்ரமத்துக்குப் புல்லிங்கமான பெயர்.

4. நீலீவனம்—திருவெள்ளறைக்கு மேற்கில் இரண்டு மைல் தூரத்திலுள்ள திருப்பைங்கிலி கிராமம்.

5. வியாக்ராஸுரவத விருத்தாந்தம் லக்ஷ்மீகாவ்யத்திலும் சொல்லப்படுகிறது.

நாங்கள் இருந்த ஆச்ரமத்துக்கு வந்தார். நாங்கள் பகவானை ஆராதித்து — "இவ்விடமே நித்ய வாஸம் செய்யவேண்டு"மென்று பிரார்த்தித்தோம்.

"மஹரிஷிகளே! உங்களுக்கு ஹிதம் செய்வதற்காக நான் சீக்கிரம் காவேரி தீரத்தில் சந்திர புஷ்கரிணிக் கரைக்கு வரப் போகிறேன். நான் ராமனாய் வந்து ராவணனை வதித்தபிறகு, என்னுடைய ஸ்ரீரங்க விமானத்தை விபீஷண வியாஜத்தாலே நீங்கள் புஷ்கரிணிக் கரையில் தரிசிப்பீர்கள்."— என்று சொல்லி பகவான் தேவர்களோடு புறப்பட்டார். நாங்களும் ஸூரிய மண்டலம் வரையில் பின் தொடர்ந்துபோனோம். அப்பொழுது ஸூரியன் எங்களிடம் சொன்னதாவது:—

"நான் முன்பு ரங்கநாதனை பிரம்மலோகத்தில் பூஜித்தபோது—'நீர் என்னுடைய புத்திர பௌத்திரர்களால் நித்யமாக ஆராதிக்கப் படவேண்டு'—மென்று பிரார்த்தித்தேன். உடனே பகவான் பிரஸன்னராகி— 'உன்னுடைய வம்சியர்களாலும் மற்றவர் களாலும் நான் அயோத்தியிலும் காவேரியிலும் ஆராதிக்கப் படுவேன். கலியுகத்தில் ஜனங்கள் கதியற்றுக்கிடக்கும்போது, நான் எல்லோருக்கும் ஸுலபனாயிருப்பேன். ஆனால், கலி காலத்தில் பாபிகளும் நாஸ்திகர்களும் வியாபிக்கும்போது நான் துர்லபனாவேன்.'— என்று சொன்னார். ஆகையால், சிரேயஸ்ஸை விரும்பும் பிராம்மணர்கள் காவேரி தீரத்தில் வஸிக்கட்டும். எனக்கு இக்ஷ்வாகு வம்சத்தவர்களும் சோள வம்சத்தவர்களும் பிரியமானவர்கள். சோளராஜனான தர்ம வர்மாவை உத்தேசித்து ரங்கநாதன் சீக்கிரத்தில் காவேரி தீரம் வருவார்."

தர்மவர்மனே! ஸூரியன் சொன்னதைக் கேட்டு நாங்கள் திரும்பி வந்தோம். அதுமுதல் நாங்கள் ரங்கநாதனுக்காக இங்கேயே வாஸம் செய்கிறோம். பகவான் ராமனாக அவதரித்திருக்கிறார்; ராவணனை வதம் செய்யப் போகிறார்; நம்முடைய பயம் நீங்கும். விபீஷணன் ரங்க விமானத்தைக் கொண்டுவருவான். நாங்கள் சொல்லுவது ஸத்யம். ராஜனே! நீ தபஸ்ஸைவிட்டு ராஜ்யபாலனம் செய்துகொண்டிரு. விபீஷணன் வந்ததும் உனக்குத் தெரிவிக்கிறோம்.

சிவன்— நாரதரே! ரிஷிகள் இப்படிச் சொன்னதும், தர்மவர்மா காவேரியின் தென்கரையிலுள்ள தன்னுடைய நிசுளாபுரிக்குப்

போனான். சில நாளுக்குப் பிறகு, ராமனால் ராவணன் கொல்லப் பட்டு விபீஷணன் லங்கையில் முடி சூட்டப்பட்டான். ராமன் அசுவமேதயாகம் செய்யத் தொடங்கினார். ராமனால் அழைக்கப் பட்ட தர்மவர்மா அயோத்திக்கு வந்து, யாகம் முடிந்தவுடன் ஏதோ காரியமாக ராமனிடம் விடை பெற்றுக்கொண்டு விரைவில் தன் ராஜ்யம் போய்ச் சேர்ந்தான். ராமன் விபீஷணனுக்கு உத் கிருஷ்டமாக ஸம்மானம் செய்ய விரும்பி, பகவானுடைய உத்ஸவத் துக்கு வேண்டிய ஸாமக்ரிகளையும், பூஜைக்கு வேண்டியவைகளையும், சாஸ்திரமறிந்த சில்பிகளையும், தபஸ்விகளான பிராம்மணர்களையும் சேர்த்து ரங்க விமானத்தை விபீஷணனுக்குக் கொடுத்தார். பங்குனி மாஸத்தில் வஸந்தருதுவில் ரோகிணி நக்ஷத்திரமும் பஞ்சமி திதியும் கூடிய சனிக்கிழமை உஷ: காலத்தில் சுபமுஹூர்த்தத்தில் இக்ஷ்வாகு வம்சத்தவர்களுக்குக் குலதனமான ஸ்ரீரங்கம் விபீஷணனுக்கு ராமனால் கொடுக்கப்பட்டது. விபீஷணன் ராமனை நமஸ்கரித்து விமானத்தை சிரஸில் வஹித்துக்கொண்டு தன்னுடைய மந்திரிக ளோடுகூட லங்கைக்குப் புறப்பட்டான்; ஸூரியன் உச்சிக்கு வந்ததும் சந்திரபுஷ்கரிணிக் கரையில் அநந்தபீடத்தில் விமானத்தை வைத்தான். ஸ்ரீரங்க விமானம் வந்த செய்தியை பிராம்மணர்கள் தர்மவர்மாவுக்கு அறிவித்தார்கள். தர்மவர்மா வந்தான். ராஜனும் மஹர்ஷிகளும் விபீஷணனை உபசரித்தார்கள். எல்லோரும் ரங்க நாதனைப் பூஜித்தனர்.

9—ம் அத்.

*ரங்கநாதன் காவேரிக்குத் தான் கொடுத்த வரத்தைச் சொல்லி விபீஷணனை ஸமாதானம் செய்கிறார்.*

பிறகு, விபீஷணன் ஸ்நானம் செய்து பகவானைப் பூஜித்தான். பகவான் விபீஷணனுடைய ஆராதனத்தாலும், தர்மவர்மாவினுடைய உபசாரத்தாலும், பிராம்மணர்களுடைய ஸ்தோத்ர பாடத்தாலும் திருப்தியடைந்தார். காவேரி தீரத்திலேயே சில நாள் வஸிக்க வேண்டுமென்று தர்மவர்மா விபீஷணனை ப்rார்த்தித்தான். "இக்ஷ்வாகு செய்த மஹோத்ஸவம்[1] நாளை ஆரம்பமாகையால், நான் சீக்கிரம் லங்கைக்குப் போக வேண்டும்"—என்றான் விபீஷ ணன். "இங்கேயே உத்ஸவம் நடக்கட்டும்"—என்று தர்மவர்மா

1. இப்பொழுது பங்குனி உத்தர மென்று நடக்கும் ஆதி பிரம்மோத்ஸவம்.

சொன்னதும், விபீஷணன் அதற்கு இசைந்தான்; பிரம்மாவின் சிஷ்யர்களான ஐந்து பிராம்மணர்களையும் தர்மவர்மாவின் திரவியத்தையும்கொண்டு முறைப்படி உத்ஸவத்தை நடத்தினன். ஒன்பது நாள் உத்ஸவமும் பூர்ணிமையன்று அவபிருதமும் நடந்தன. விபீஷணன் உத்ஸவ நிமித்தமாய் அரை மாஸம் காவேரி தீரத்தில் தங்கியிருந்து பதினாறுவது நாளான ஞாயிற்றுக்கிழமை ஸூர்யோதயத்துக்கு முன்பு லங்கைக்குப் புறப்பட்டான்; தர்மவர்மனிடத்திலும் பிராம்மணர்களிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு ரங்கவிமானத்தை எடுக்கும்போது, அது சிறிதும் சலிக்கவில்லை. எவ்வளவு யத்தனித்தும் முடியாமற் போயிற்று. விபீஷணன் கண்ணீர் சொரியக் கதறிக்கொண்டு பகவானுடைய பாதமூலத்திலேயே வீழ்ந்தான். அப்பொழுது பகவான் அவனை எழுப்பிச் சொன்னதாவது:—

"குழந்தாய்! காவேரியால் சூழப்பட்ட இந்த தேசம் மிக்க மனோஹரமாயுள்ளது. இந்தப் புஷ்கரிணி பாபத்தைப் போக்கவல்லது. ராஜா தர்மவர்மனும் என்னிடம் ஸதா பக்தியுள்ளவனுயிருக்கிறன். புண்யவான்களான ரிஷிகளும் இங்கு வஸிக்கிறார்கள். ஆகையால், நான் இங்கேயே வஸிக்க விரும்புகிறேன். விபீஷண! நீ லங்கைக்குப் போ. முன் நடந்ததொரு விஷயம் சொல்லுகிறேன்; கேள்—

"முன்பு விந்தியமலையின் அடிவாரத்தில் மஹாநதிகளெல்லாம் ஒன்று சேர்ந்தன. விச்வாவஸு என்னும் கந்தர்வன் அங்கே வந்து நதிகளுக்கு நமஸ்காரம் செய்து தெற்கு முகமாய்ப் போனன். கந்தர்வன் செய்த நமஸ்காரம் தனக்குத்தான்—என்று சொல்லிக்கொண்டதால் நதிகளுக்குள் பெரிய விவாதம் உண்டாயிற்று. கந்தர்வன் அநந்த சயநம் போய் புரட்டாசி மாஸத்தில் பத்மநாபனை எழுப்பிவிட்டு, உத்தராயணம் ஆரம்பித்ததும் வடக்குமுகமாகப் புறப்பட்டுப் போகையில், விந்திய பர்வதத்தின் அடிவாரத்தில் மறுபடியும் நதிகளுக்கு நமஸ்காரம் செய்தான். 'நீ யாருக்கு நமஸ்காரம் செய்தாய்?' —என்று நதிகள் கேட்க,— 'உங்களில் யாருக்கு ஆதிக்யம் உண்டோ அவளுக்கு நமஸ்காரம் செய்தேன்.' — என்று சொல்லிப் போனன் கந்தர்வன்.

"பிறகு, ஆதிக்ய விஷயமாக நதிகளுக்குள் விவாதம் உண்டாயிற்று. எல்லா நதிகளும் தங்களுக்கு ஆதிக்யமில்லையென்று ஒப்புக்கொண்டு விவாதத்தினின்றும் ஓய்ந்தன. கங்கைக்கும் காவேரிக்கும்மட்டும் விவாதம் தீரவில்லை. இருவரும் பிரம்மலோகம் போய் பிரம்மாவைக் கேட்டனர். 'அவர் கங்கைக்

குத்தான் ஆதிக்யம்'—என்று சொல்லிவிட்டார். பிரம்மாவின் வார்த்தையால் காவேரி மிகவும் துக்கித்து, ஸஹ்ய பர்வதம் போய், கங்கையைவிட ஆதிக்யம் பெறுவதற்காக நெடுநாள் தபஸ் செய்தாள். பிரம்மா காவேரிக்கு கங்கையின் ஸாமயத்தைமட்டும் கொடுத்துவிட்டு,— 'ஆதிக்யம் கொடுக்க என்னால் முடியாது'—என்றார்.

"விபீஷணா! பிரம்மா இப்படிச் சொல்லிப்போனதும், காவேரி ஸாரக்ஷேத்திரத்தில் என்னுடைய பிரதிமையை ப்ரதிஷ்டை செய்து ஆராதித்து,— 'உம்முடைய பாதஸம்பந்தத்தினால் கங்கை ஆதிக்யம் பெற்றாள். அவளைக்காட்டிலும் நான் உம்முடைய ஸம்பந்தத்தால் ஆதிக்யம் பெறவேண்டும்'—என்று பிரார்த்தித்தாள். 'காவேரி! உனக்கு என் ஸம்பந்தம் கிடைப்பதற்காக என்னுடைய வாஸஸ்தானமான ஸ்ரீரங்க விமானம் உன்னிடம் வரப்போகிறது. என்னுடைய நித்ய ஸம்பந்தத்தால் நீ கங்கையைக் காட்டிலும் ஆதிக்யம் பெறுவாய்'—என்று நான் முன்பே காவேரிக்கு ப்ரதிக்ஞை செய்துவிட்டேன். விபீஷணா! நான் உன்னைப் பார்த்தபடியே சயனித்துக்கொள்கிறேன் நான் கொடுத்த லங்கா ராஜ்யத்தை நிஷ்கண்டகமாக அனுபவி."

என்று சொன்னார் ரங்கநாதன்.

விபீஷணன்—உம்முடைய தீர்மானம் இப்படியாகில், நானும் இங்கேயே வஸிக்கிறேன். உம்மைவிட்டு நான் பிரிந்திரேன்.

ரங்கநாதன்— விபீஷணா! நான் மனுஷ்யர்களுக்கு ஹிதம் செய்வதற்காகவே இந்தக் கர்ம பூமியில் அர்ச்சா ரூபியாக ஆவிர்பவித்தேன். நான் மனுஷ்யர்களுக்குமட்டுமே எப்பொழுதும் ஹிதம் செய்யவேண்டும். நீ மனுஷ்யர்களுடன் வஸிக்கக்கூடாது. உனக்கு லங்கா ராஜ்யமும், ஆயுஸ்ஸும், ஐசுவரியமும் ராமனால் கொடுக்கப்பட்டன. இந்தக் கல்பத்தின் முடிவில் நீ என்னோடு பிரம்ம லோகத்துக்கு வந்து மீண்டும் என்னோடு கூடவே இங்கு வருவாய். த்விதீய பரார்தத்தின் முடிவில் உத்பத்தியும் அழிவுமில்லாத பரமபதத்துக்கு என்னோடு வருவாயாக.

விபீஷணன்— ஆயுஸ், ஆரோக்யம், ஐசுவரியம் யாவும் எனக்கு ராமனால் கொடுக்கப்பட்டன. நான் முக்தியை யாசித்தபோது ராமன் இந்த ரங்க விமானத்தை எனக்குக் கொடுத்தார். இனி நான் இந்த ஸம்ஸாரத்தினின்றும் எப்படி விடுதலையடைவேன்? அவ்வுபாயத்தை எனக்குச் சொல்லுவீராக.

ரங்கநாதன்—ரிஷிகள், முமுக்ஷுக்கள், போகார்த்திகளான புருஷர்கள், தேவர், அஸுரர்—முதலானோர் என்னுடைய ஆக்ஞையைப் பரிபாலிப்பதாகச் செய்யும் யக்ஞம், தானம், தபஸ்—முதலிய ஸத்கர்மாக்களால் எனக்கே பிரியம் செய்கிறார்களாகையால், நீயும் என் ஆக்ஞையைப் பரிபாலனம் செய். நான் கொடுத்த ராஜ்யத்தை தர்மமாக ஆண்டுகொண்டு என்னை தியானம் செய். நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் இந்த தேசத்துக்கு வரவேண்டாம். மோக்ஷத்துக்காக நான் உபதேசிக்கும் ரஹஸ்யமான உபாயமாவது—

"எல்லாக் கருமங்களையும் கர்மபலன்களையும் விட்டு, எல்லா பந்தங்களும் நீங்குவதற்காக என்னையே சரணமாகப்பற்று."[1]

சிவன்—ரங்கநாதன் இப்படிச் சொன்னதும், விபீஷணன் நமஸ்காரம் செய்து லங்கைக்குப் போனான். தர்மவர்மா பிராம்மணர்களைக்கொண்டு பகவானுக்கு வேண்டிய ஸகல காரியங்களையும் செய்து வைத்தான். அதுமுதல் ஸ்ரீரங்க விமானம் காவேரி தீரத்தில் கல்பாந்த ஸ்தாயியாய் மனுஷ்யர்களுக்கு தரிசனம் கொடுத்துக்கொண்டிருக்கிறது.

## 10—ம் அத்.

*நவ தீர்த்தங்களின் விவரம்.*

சிவன்—ஸ்ரீரங்கவிமானத்தைச் சுற்றிலும் இரண்டு யோஜனை தூரத்தில் வஸிக்கிறவர்களுக்குப் பாபமே இராது. ஸ்ரீரங்க யாத்திரையும் ஸ்ரீரங்கம் போகவேண்டுமென்ற விருப்பமுமே ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கவல்லது; அங்குச் செய்யும் நித்ய வாஸத்தின் பலனைச் சொல்லவேண்டுமோ!

சந்திர புஷ்கரிணி—

சந்திர புஷ்கரிணி ஸ்நானம் ஸகல பாபங்களையும் போக்கவல்லது. முன்பு காச்யபருடைய[2] சாபத்தினால் ஒளியிழந்த சந்திரன் சந்திரபுஷ்கரிணியின் பிரபாவத்தால் தேஜஸ்ஸை அடைந்தான். அங்கு நிழலோடும் மணத்தோடும் விளங்கும் புன்னைமரம் சந்திர

1. ஸர்வகர்மாணி ஸந்த்யஜ்ய ஸர்வகர்மபலாநிச
சரணம் மாம் ப்ரபத்யஸ்வ ஸர்வ பந்த விமுக்தயே.

2. சதாத்யாயீ 35ம் அத்தியாயத்தில் தக்ஷப்ரஜாபதியின் சாபத்தினால் சந்திரன் ஒளியிழந்தது தவிர இங்கு காசியபருடைய சாபத்தினால் ஒளியிழந்தது வேறு காண்கிறது. இங்கு சாபத்துக்குக் காரணம் தெரியவில்லை.

ஞல் பிரதிஷ்டிக்கப்பட்டது. அந்தப் புன்னையைப் பார்த்தால் பாபம் தீரும்; தொட்டால் ஐசுவரியமுண்டாகும்; ஆலிங்கனம் செய்தால் ஞானமுண்டாகும். அந்தப் புன்னையடியில் செய்யும் தானம், ஜபம், ஹோமம்—முதலியவை அக்ஷயமாயிருக்கும். அந்த தீர்த்தத்தில் வியாஸர்[1] இருக்கிறார். விஷ்ணுவின் பரிவாரங்களான புஷ்கரன் புஷ்கராக்ஷன், குமுதன், காலன்—இந்நால்வரும் புந்நாக தீர்த்தத்தை ரக்ஷிக்கிறார்கள். அந்த தீர்த்தத்திலுள்ள பகவானுக்கு வாஸுதேவன் என்று பெயர். கணநாதர்களை நமஸ்கரித்து, ஆசமனம் செய்து, வாஸுதேவனை தியானித்து மூலமந்திரத்தையும் புருஷஸூக்தத்தையும் சொல்லிக்கொண்டு ஸ்நானம் செய்து, வாஸு தேவ மந்திரத்தினல் தேவதை, ரிஷி, சந்திரன், கணநாதர்—இவர்களுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும். புந்நாக தீர்த்தத்தில் திலதானம் சிரேஷ்டமாகும்.

1. பில்வ தீர்த்தம்—

நாரதரே! சந்திரபுஷ்கரிணிக்குக்[2] கிழக்கில் பில்வ தீர்த்தம்[3] உள்ளது. முன்பு மஹாபலியின் யாகத்தில் பகவானுக்கு அபசாரம் செய்த சுக்ராசாரியர் தோஷம் நீங்குவதற்காக பில்வ தீர்த்தத்தில் தபஸ் செய்தார். அங்குள்ள பில்வ மரம் சுக்ராசாரியரால் ஸ்தாபிக்கப்பட்டது. அந்த தீர்த்தத்துக்கு சுக்ரனே தேவதையாயும் ரிஷியாயுமிருக்கிறன். அங்குள்ள பகவானுக்கு ஸ்ரீநிவாஸன் என்று பெயர். குமுதன் அந்த தீர்த்தத்துக்கு ரக்ஷகன். அங்கு வெள்ளியையும் தங்கத்தையும் விசேஷமாக தானம் செய்யவேண்டும். க்ஷமிக்கக் கூடாத அபசாரத்தையும் அங்கு பகவான் க்ஷமிக்கிறார். அங்குச் செய்யும் ஸ்நானமும் தானமும் பிரம்மஹத்தி தோஷத்தையும் போக்கும்.

---

1. 108 அத்யாயமாக ஸ்ரீரங்க மாஹாத்மியத்தைச் சொன்ன வியாஸர் தான் புஷ்கரிணியிலிருப்பதாகச் சொல்லவில்லை.

2. சந்திரபுஷ்கரிணியிலிருந்தே ஒவ்வொரு தீர்த்தத்துக்கும் திக்கு சொல்லப்படுகிறது.

3. ரங்கநாதன் பங்குனி 8ம் திருநாள் எல்லைக்கரை போகும் பாதையில் மங்கம்மாள் மண்டபம்—எனப்படும் இடம் பில்வ தீர்த்தம். இங்கு ரங்கநாதன் அந்த தினத்தில் தீர்த்தம் ஸாதித்து உபயம் கண்டருளுவார்.

2. ஜம்பு தீர்த்தம்—

புஷ்கரிணிக்கு ஆக்னேயத்தில் (தென்கிழக்கில்) என்னுடைய ஜம்பு தீர்த்தம் உள்ளது. நான் முன்பு பகவானுடைய ஆக்ஞையால் மோஹன சாஸ்திரங்களை ப்ரவர்த்திப்பித்து, அந்த தோஷம் நீங்குவதற்காக ஜம்பு தீர்த்தத்தில் தபஸ் செய்தேன். அதற்கு அஹிர்புத்நியர் ரிஷி. மஹேச்வரனான நான் தேவதை. அந்த தீர்த்தத்துக்கு ஸுநந்தன் ரக்ஷகன். பகவானுக்கு அச்சுதன் என்று பெயர். அந்த தீர்த்தத்தில் தான்ய தானம் செய்யவேண்டும். அங்குள்ள பகவான் பக்தாபசார மஹாத்தையும் போக்குவார். அந்த தீர்த்தத்தில் செய்யும் ஸ்நானமும் தானமும் அன்ன தோஷத்தைப் போக்கும்.

3. அச்வத்த தீர்த்தம்—

புஷ்கரிணிக்குத் தெற்கில் பெரிய அச்வத்த[1] விருக்ஷமுள்ளது. அஹலியையினிடம் போன தேவேந்திரன் அசுவத்த தீர்த்தத்தில் தபஸ் செய்தான். அந்த தீர்த்தத்துக்கு ரிஷி கௌதமர்; தேவதை வலஸூதனன்,[2] பகவான் அநந்தன்; கணநாயகனான நந்தன் ரக்ஷகன். அங்கு வஸ்திர தானமும் கன்யா தானமும் செய்தால் விசேஷம். அங்குச் செய்யும் ஸ்நானம் வ்யபிசார தோஷத்தைப் போக்கும்.

4. பாலாச தீர்த்தம்—

சந்திரபுஷ்கரிணிக்குத் தென் மேற்கில் பாலாச விருக்ஷம்[3] இருக்கிறது. என் புத்திரனான ஸுப்ரம்மண்யன் பாலாச தீர்த்தத்தில் தபஸ் செய்து சக்தியை (வேலாயுதத்தை) ஸம்பாதித்தான். அந்த தீர்த்தத்துக்கு அஹிர்புத்நியர் ரிஷி; தேவதை ஷண்முகனான ஸுப்ரம்மண்யன்; பகவான் கோவிந்தன்; ரக்ஷகன் கணநாயகனான பத்ரன். அங்கு கோதானம் விசேஷம். அங்குச் செய்யும் ஸ்நானமும் தானமும் ஸம்ஸர்க தோஷத்தைப் போக்கும்.

---

1. ஸ்ரீரங்கத்திலிருந்து திருவானைக்காவல் போகும் ரஸ்தாவில் தென்புறமாயுள்ளது அச்வத்த தீர்த்தம். இங்கும் பங்குனி 8ம் திருநாள் ரங்கநாதன் தீர்த்தம் ஸாதிக்கிறார்.

2. இந்திரன்.

3. ஜிய்யர்புரத்தில் உள்ளது இந்த தீர்த்தம். இங்கு பங்குனி 3ம் திருநாள் ரங்கநாதன் தீர்த்தம் ஸாதிக்கிறார்.

5. புந்நாக தீர்த்தம்—

புஷ்கரிணிக்கு மேற்கில் புந்நாக விருக்ஷம் இருக்கிறது. முன்பு அக்னி கிருத்திகா தேவிகளிடம் போன தோஷத்துக்காகப்[1] புந்நாக தீர்த்தத்தில்[2] தபஸ் செய்தான். அந்த தீர்த்தத்துக்கு ரிஷி மரீசி; தேவதை அக்கினி; பகவான் ஸ்ரீபதி; ரக்ஷகன் ஸுபத்ரன். அங்கு நெய் தானம் செய்வது சிரேஷ்டம். பரஸ்திரீகளிடம் போன தோஷம் அந்த தீர்தத்தில் ஸ்நானம் செய்து ஆசமனம் பண்ணினுல் நீங்கும்.

6. வகுள தீர்த்தம்—

புஷ்கரிணிக்கு வடமேற்கில் பெரிய வகுள மரம் இருக்கிறது. வகுள தீர்த்தத்துக்கு[3] பிருஹஸ்பதி ரிஷி; தேவதை இந்திரன்; பகவான் மாதவன்; ரக்ஷகன் சண்டகோபன். அங்கே தீர்த்த தானம் பண்ணினுல் ஆயுஸ் விருத்தியாகும். அந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் கோவதமும் ஸ்திரீ வதமும் நீங்கும்.

7. கதம்ப தீர்த்தம்—

புஷ்கரிணிக்கு வடக்கில் கதம்ப விருக்ஷம் இருக்கிறது. கதம்ப தீர்த்தத்துக்கு[4] பகவான் உத்தமர்; அங்கே ஜனகர் யாகம் செய்ததால்[5] அவரே அந்த தீர்த்தத்துக்கு ரிஷி; தேவதை பிரம்மா; ரக்ஷகன் கருடன்; ஆரோக்கியத்துக்காக அங்கே அன்னதானம் செய்யவேண்டும். தானம் வாங்கின தோஷம் அந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் நீங்கும்.

---

1. இவ்விஷயத்தை "அக்நிர்ந: பாது" யஜுர்வேதம் 3-ம் அஷ்டகம், 1-ம் ப்ரச்நம், முதல் பஞ்சாதியில் பார்க்க.

2. சந்திரபுஷ்கரிணியில்போல இங்கும் புந்நாக விருக்ஷமுள்ளது. ஆனுல், புஷ்கரிணிக்குப் புந்நாக தீர்த்த மென்று பெயரில்லை. இந்த தீர்த்தம் ஸ்ரீரங்கத்துக்கு மேற்கே மேலூரில் உள்ளது. பங்குனி 3-ம் திருநாள் தீர்த்தம். இதற்கு விருக்ஷ தீர்த்தமென்று வழக்கப்பெயர்

3. வகுள தீர்த்தம் குணசீலம் போகும் பாதையில் திருவாசி யென்னும் கிராமத்திலுள்ளது. இங்கும் பங்குனி 3-ம் திரு. தீர்த்தம் ஸாதிப்பது வழக்கம். இந்த தீர்த்தம் அருகிலுள்ள நஞ்சையோடு சேர்ந்து நஷ்டமாயிற்று. இதற்குக் கேஸர தீர்த்தமென்றும் பெயர்.

4. வட திருக்காவேரியின் வடகரையிலுள்ள உத்தமர் கோயிலுக் கருகிலுள்ளது. மாசி 5-ம் திருநாள் ரங்கநாதன் தாழைக்குடி எழுந்தருளும் போது இங்கு தீர்த்தம் ஸாதிப்பார்.

5. கதம்ப தீர்த்தத்தில் ஜனகர் யாகம் செய்த விஷயம் சதாத்யாயீ 77-ம் அத்யாயம் முதல் காண்க.

### 8. ஆம்ர தீர்த்தம்—

புஷ்கரிணிக்கு வட கிழக்கில்[1] ஆம்ர விருக்ஷம் இருக்கிறது. ஆம்ர தீர்த்தத்துக்கு[2] ரிஷி வஸிஷ்டர்; தேவதை ஸூர்யன்; பகவான் ஹ்ருஷீகேசன்; ரக்ஷகன் விஷ்வக்ஸேனன்; ஸாம்ராஜ்யம் ஸித்திப்பதற்காக அங்கே பூமிதானம் செய்யவேண்டும். ஆம்ர தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் மாதா பிதாக்கள் செய்த பாவம் நீங்கும்.

நாரதரே! இந்த ஒவ்வொரு தீர்த்தத்திலும் அதற்கு ஏற்பட்ட ரிஷி, தேவதை, அதிதேவதை, [3] ரக்ஷகன்—இவர்களோடு பிரம்மா, ஸூர்யன், இக்ஷ்வாகு, விபீஷணன்—இவர்களுக்கும், உமக்கும், எனக்கும் தர்ப்பணம் செய்யவேண்டும்.

அந்தந்த தீர்த்தத்தில் செய்யும் ஜபம், ஹோமம், அர்ச்சனம், தானம், பிராம்மண போஜனம்—முதலியவற்றை அந்தந்த அதிதேவதையின் பெயரால் செய்து, அந்த தேவதைக்கு ப்ரீதியையும் ஆசீர்வாதத்தையும் சொல்லவேண்டும்.

காவேரியிலும், ஸ்ரீரங்கத்திலும், எந்த நதியிலும் ஸ்நானம் செய்யினும்—"காவேரி! மனோ வாக் காயங்களால் செய்யப்பட்ட கொடுமையான பாபங்களையும் உன்னுடைய அமிருதமான ஜலத்தால் போக்கடித்து, எனக்கு க்ஷேமத்தைக் கொடுப்பாயாக"—[4] என்று ஸாம சாகைகளில் சொல்லப்பட்ட இம் மந்திரத்தை சொல்ல வேண்டும். பாபத்தைப் போக்கவல்லதாய் காவேரிக்கு ப்ரியமுமாயுள்ள இம் மந்திரம் நாராயணிய சாகையில் பிரம்மாவினால் காணப்பட்டது.

---

1. புஷ்கரிணி பிரதான தீர்த்தமாய் மற்றை எட்டும் அதற்கு அங்கமாயிருப்பதால் ஒவ்வொன்றுக்கும் புஷ்கரிணியிலிருந்தே எல்லை சொல்லப்படுகிறது. 8-ம் அத்தியாயத்தில் அந்தந்த தீர்த்தத்தினின்று மற்றொரு தீர்த்தத்துக்கு எல்லை சொல்லுவதாக எழுதியதை மாற்றிப் புஷ்கரிணியிலிருந்தே எல்லை கண்டு கொள்க. சதாத்யாயி 81-ம் அத்தியாயத்திலும் இப்படியே கண்டு கொள்க.

2. ஆம்ர தீர்த்தம் தாழைக்குடியிலிருக்கிறது. மாசி 5-ம் திரு. தீர்த்தம் ஸாதிக்கப்படும்.

3. ஒவ்வொரு தீர்த்தத்துக்கும் தேவதை அதி தேவதை இரண்டு உண்டு. அதி தேவதை பகவானுயிருக்கும்.

4. "யத்யத் தீவ்ரம் துஷ்க்ருதம் யச்ச கிஞ்சிச் சாரீரம் வா மானுஷம் வாசிகம் வா ஸத்ய: புநீஹி பயஸாம்ருதேந கவேர கந்யே மம சர்ம யச்ச." இது ஸாம சாகைகளின் கிலமாயிருக்குமாகையால் இன்ன இடத்திலுள்ளதென்று சொல்ல முடியாது.

எட்டு தீர்த்தங்களோடு கூடியதாய், எட்டு விருக்ஷங்களால் உபசரிக்கப்படுவதாய், விஷ்ணுவால் அடையப்பட்டதுமாயுள்ள சந்திர புஷ்கரிணியைப் பார்த்தாலும், ஸ்பரிசித்தாலும், அதில் ஸ்நானம் செய்தாலும், அதன் பெயரைச் சொன்னாலும், கேட்டாலும் ஸகல பாபங்களும் போகும். இந்த நவ தீர்த்தங்களிலும் ப்ரதக்ஷிணமாக ஸ்நானம் செய்து ரங்கநாதனை தரிசிப்பவன் பத்து தலைமுறையைப் பரிசுத்தமாக்குவான். ஏகாதசியில் உபவாஸமிருந்து துவாதசியில் இந்த ஒன்பது தீர்த்தத்திலும் ஸ்நானம் செய்பவன் இருபத்தொரு தலைமுறையைக் கரையேற்றுவான்.

இந்த தீர்த்தங்களில் செய்யும் சிராத்தம் கயா ச்ராத்தத்துக்கு ஈடாகும். இந்த தீர்த்தங்களில் பசுவுக்குப் பிடி புல் போட்டாலும் பித்ருக்கள் திருப்தியடைவார்கள்.

நாரதரே! ஸ்ரீரங்க மாஹாத்மியம் முழுவதையும் உமக்குச் சொல்லிவிட்டேன். ஸ்ருஷ்டி முதல் பிரளயம் வரைக்குமுள்ள விஷயங்கள் அடங்கிய இந்த ஸ்ரீரங்க மாஹாத்மியத்தையும் பகவானுடைய வியாப்தியையும் கேட்டு உமக்கு ஸந்தேஹம் நீங்கிற்றா? நிச்சய புத்தியுண்டாயிற்றா?

நாரதர்—ஸ்வாமி! உம்மிடம் இந்த மாஹாத்மியத்தைக்கேட்டு நான் கிருதார்த்தனானேன். நீர் ஸர்வக்ஞராயும் தயாளுவாயுமிருப்பதால் இதை எனக்குச் சொன்னீர்.

சிவன்—இந்த ஸ்ரீரங்க மாஹாத்மியத்தை நாஸ்திகனுக்கும், சிரத்தையில்லாதவனுக்கும், விஷ்ணுத்வேஷிக்கும் சொல்லக் கூடாது; விஷ்ணு பக்தனாய், ஜிதேந்திரியனாய், ஆசையற்றவனாய், கோபத்தை ஜயித்தவனுமாயுள்ள பிராம்மண சிரேஷ்டனிடமிருந்தே இந்த மாஹாத்மியத்தைக் கேட்கவேண்டும். இந்த ஸ்ரீரங்க மாஹாத்மியத்தைக் கேட்போர், படிப்போர், சொல்பவர்,—முதலானோர்க்கு இஷ்டங்கள் நிறைவேறும்.

தசாத்யாயீ முற்றிற்று.

---

[தசாத்யாயியில் சேராத ரங்கவிமான ப்ரதக்ஷிண மாஹாத்மியம் தனி அத்யாயமாகத் தொடர்கிறது.]

# ரங்கவிமான ப்ரதக்ஷிணம்[1]

ஸநத் குமாரர்—பிரம்ம தேவரே! ரங்கநாதனுடைய பிரபாவம், விஷ்ணுவுக்கு ப்ரியமான தர்மங்கள், க்ஷேத்ர வாஸத்தின் வைபவம் முதலிய யாவும் உம்மால் நன்கு சொல்லப்பட்டன. ஆயினும், எனக்கு த்ருப்தியுண்டாகவில்லை. ஸ்வாமி! ஸம்பத்து, பிரவ்ருத்தி, தீர்காயுஸ், பகவத் கிருபை, மோக்ஷம் இத்தனையும் கிடைக்கும்படியான தொரு தர்மத்தைச் சொல்லும்.

பிரம்மா—குழந்தாய்! உன்னுடைய கேள்வி லோகானுக்ரஹமாகவே ஏற்பட்டது. தர்மமென்பது விஷ்ணுவுக்கு ப்ரியத்தை உண்டுபண்ணுவதாகவே இருக்கும். நான் சொல்லுவதை ஸாவதானமாய்க் கேள். இதைக் கேட்பதில் உனக்குள்ள ஆதரத்தை அறிந்து, முக்திக்கு முதல் ஸாதனமாயுள்ள இந்த ரஹஸ்யமான தர்மத்தை உனக்குச் சொல்லுகிறேன்.

காவேரிநடுவில் சந்திர புஷ்கரிணிக் கரையில் ரங்கவிமானமிருப்பதாய்ச் சொல்லியிருக்கிறேன். அதை ப்ரதக்ஷிணம் பண்ணினால் நல்ல கதி கிடைக்கும். ஆயிரம் அக்னிஷ்டோமத்துக்கும் பதினாயிரம் வாஜபேயத்துக்கும் ஏற்பட்ட பலன் ரங்கவிமான ப்ரதக்ஷிணத்துக்கு உண்டு. ரங்க விமானத்தை ப்ரதக்ஷிணம் செய்ய விரும்புகிறவனுக்கு தேவதைகள் எல்லோரும் பிரஸன்னராயிருப்பார்கள். ரங்கவிமான ப்ரதக்ஷிணத்தினால் தீர்காயுஸ், ராஜ்யலக்ஷ்மி, ரோகமின்மை, புத்ர பௌத்ர லாபம்—முதலியவை நிச்சயமாய் உண்டாகும். ரங்க விமானத்துக்கு ப்ரதக்ஷிணம் செய்வதைவிட வேறு தர்மம் கிடையாது. ஸ்ரீரங்க விமானத்தை பக்தி ச்ரத்தையோடு பிரதக்ஷிணம் செய்ய விரும்புகிறவன் நாராயணனாகவே விளங்குவான். ரங்க விமானத்தை ப்ரதக்ஷிணம் செய்யக் கால நிர்ணயம் கிடையாது.

---

1. இந்த அத்தியாயம் பாப்பாக்குரிச்சி கிருஷ்ணையங்கார் ஸீலக 1908-ம் வருஷத்தில் வெளியிட்ட ஸ்ரீரங்க மாஹாத்மியம் தசாத்யாயியில் 11-வது அத்தியாயமாகக் காட்டப்பட்டுள்ளது. பத்து அத்தியாயம்போல சிவன் நாரதருக்குச் சொல்லுகிற கிரமமாயிராமல், பிரம்மா ஸநத்குமாரருக்குச் சொல்லுவதாயிருப்பதால் இது பதினொன்றும் அத்தியாயமாகாது. மைசூரில் அச்சிட்ட தெலுங்குப் புஸ்தகத்தில் முன்பின் ஸம்பந்தமில்லாமல் பிரம்மாண்ட புராணம் 9-ம் அத்தியாயம் என்று காண்கிறது. இதுவும் சரியில்லையாகையால் நாம் இதைத் தனி அத்தியாயமாகக் காட்டியிருக்கிறோம்.

"ரங்க விமானத்தை ப்ரதக்ஷிணம் செய்தவனுடைய பந்துக்களுக்குக்கூட நீங்கள் நமஸ்காரம் செய்யுங்கள்"—என்று ஸ்ரீரங்கத்தின் பிரபாவமறிந்த யமன் தினந்தோறும் தன் கிங்கரர்களுக்குச் சொல்லுகிறான்.

நான், தேவர்கள், ஸாத்யர்கள், ரிஷிகள், பித்ருக்கள், வஸுக்கள்—முதலானோர் தினந்தோறும் பனிரண்டு தடவை ரங்கவிமானத்துக்கு ப்ரதக்ஷிணம் செய்கிறோம்.

பிரம்மஹத்தி, ஸ்திரீஹத்தி, கன்றைக் கொன்ற தோஷம்—முதலிய யாவும் ரங்கவிமான ப்ரதக்ஷிணத்தினால் நீங்கும்.

ஒரு ஸமயம் லக்ஷ்மி பகவானை ஏகாந்தமாகப் பின்வருமாறு கேட்டாள் :—

"ஸம்ஸாரத்தில் மூழ்கிக் கிடப்பவர்கள் கரையேறும் வழி யாது? அனுஷ்டானத்தில் எளிதாயும் பல ப்ராப்தியில் பெரிதாயுமுள்ள தர்மம் யாது? இம்மாதிரியான தர்மத்தைச் சொல்லுவீராக."

பகவான்—என்னுடைய ஸ்ரீரங்கவிமானத்தை தரிசிப்பது, அதற்கு நமஸ்காரமும் ப்ரதக்ஷிணமும் செய்வது--இம்மூன்று தர்மங்களாலும் மனுஷ்யன் என்னுடைய ஸாயுஜ்யத்தை அடைவான். இம்மூன்றிலும் ப்ரதக்ஷிணம் சிறந்தது. என்னிடத்தில் பக்தியுள்ளவனுக்கும் ஏழு ஜன்மமாக தர்மம் செய்பவனுக்கும்தான் பிரதக்ஷிணம் செய்யும் பாக்கியம் கிடைக்கும். என்னிடம் பக்தி ச்ரத்தைகளோடு அடிமேலடிவைத்து, கைகள் அசையாமல், வாயால் ஸ்தோத்திரமும் மனத்தால் தியானமுமான—இந்த சதுரங்க ப்ரதக்ஷிணத்தை தினந்தோறும் நூற்றெட்டு அல்லது இருபத்திநாலு தடவை எவன் செய்கிறானோ, அவன் என்னுடைய சின்னங்களால் அலங்கரிக்கப்பட்டு கருட வாகனத்திலேறிக்கொண்டு, விஷ்வக்ஸேனர் முதலானோரால் பூஜிக்கப்பட்டு, என்னுடைய லோகத்துக்கு வந்து, பிரம்மானந்தத்தை அநுபவித்துக்கொண்டு என்னோடு கூடவே ஆதிசேஷன்மீது வீற்றிருப்பான்.

என் விமானத்தை ஒருதரம் அல்லது இரண்டுதரம் பிரதக்ஷிணம் செய்பவன் எல்லா லோகங்களையும் பிரதக்ஷிணம் செய்த பலனை அடைவான்.

பனிரண்டுதரம் என் விமானத்தை ப்ரதக்ஷிணம் செய்பவன் செய்விக்கிறவன்—இருவரும் துவாதசாக்ஷர மந்திரத்தை லக்ஷம் தடவை ஜபித்த பலனை அடைவார்கள்.

இருபத்திநாலுதரம் ரங்கவிமானத்தை ப்ரதக்ஷிணம் செய்பவன் காயத்ரியைக் கோடிதடவை ஜபம்செய்த பலனைப் பெறுவான்.

நூற்றெட்டுதரம் ரங்கவிமானத்தை ப்ரதக்ஷிணம் செய்கிறவனும் செய்விக்கிறவனும் என்னுடைய அம்சத்தைப் பெறுவார்கள். அவர்கள் பிரம்ம வாதிகளாலும் பூஜிக்கத்தக்கவர்கள்.

தினந்தோறும் நூற்றெட்டு அல்லது இருபத்திநாலுதரம் என் விமானத்தை ப்ரதக்ஷிணம் செய்கிறவனுக்கும் செய்விக்கிறவனுக்கும் என்னுடைய லீலா விபூதி நித்ய விபூதி —என்ற இரண்டு ராஜ்யங்களைக் கொடுத்தாலும் எனக்கு த்ருப்தியிராது.

---

[ப்ரம்மாண்ட புராணாந்தர்கதமாய் நாரதரால் பிரஹ்லாதனுக்கு உபதேசிக்கப்படுவதாய், ஒரே அத்யாயமாயுமுள்ள ஸ்ரீரங்க ப்ரம்ம வித்யையும் எழுதப்படுகிறது.]

# ஸ்ரீரங்க ப்ரம்ஹ வித்யை

பிரஹலாதன் யதிருச்சையாக வந்த நாரதருக்கு அர்கிய பாத்யங்களால் உபசாரம் செய்து,—

"ஸ்வாமி! நீர் எவ்வளவு வித்யைகளை எனக்கு உபதேசித்திருந்தாலும், ரங்கநாதனுக்கு ப்ரியமாயுள்ள ஸ்ரீரங்க ப்ரமஹ வித்யையை உபதேசிக்கவில்லையாகையால், எனக்கு த்ருப்தியுண்டாகவில்லை. அந்த வித்யையை எனக்கு உபதேசிப்பீராக"—என்று லோகானுக்ரஹமாகக் கேட்டான்.

நாரதர்—ரங்கநாதனுக்கே ரங்கமென்று பெயர். ரங்க ஸ்தலம் போல ரங்க வித்யையும் பிரகாசிக்கிறது.

ரங்கவிமானம் பிரணவாகாரமாய் வேதங்களையே சிகரங்களாகக் கொண்டதுமாயிருக்கும். பகவான் ரங்கநாதன் பிரணவார்த்தத்தை ப்ரகாசிப்பிக்கிறார்.

பிரணவத்துக்கு ஆதி ரூபமாய், அந்தத்திலுள்ள சக்தியாய், பிரணவத்தின்மேலுள்ளதுமாயிருக்கும் ஸ்ரீரங்க ப்ரம்ஹம்.

கர்மகாண்டத்தின் ஸ்வரூபமும், பக்திகாண்டமான பாவனையும், ஞான காண்டத்திலுள்ள ஆத்ம த்ருப்தியும் ரங்க வித்யையினால் அறியப்படும். வேத வித்யை, யக்ஞ வித்யை, பிரம்ம வித்யை—முதலிய ஸகல வித்யைகளும் வித்வானுக்கு ரங்க வித்யையிலேயே புலப்படும். நதிகள் ஸமுத்திரம் சேர்வதுபோல ஸகல வித்யைகளும் ரங்க வித்யையில் சேர்கின்றன.

எல்லா ஜந்துக்களும் தாயைக்கொண்டு விருத்தியடைவது போல, எல்லா தேவதைகளும் ஸ்ரீரங்கத்தைக்கொண்டே விருத்தியடைகிறார்கள். ரங்கவிமானம் பூர்வரங்கம்; க்ஷீராப்தி அந்தரங்கம்; வைகுண்டம் பஹிரங்கம். ஆகையால், பிரபஞ்சம் முழுவதும் ரங்கமயமாயிருக்கிறது.

ரங்க விமானம் க்ஷீராப்தியிலிருந்து விரஜா நதிக்கும், விரஜையிலிருந்து ஸரயூவுக்கும் வந்ததுகண்டு காவேரி இருபுறத்திலும் பாய்கிறது.

ஸ்ரீரங்கமென்னும் தாமரைப் பூவுக்கு சந்திரபுஷ்கரிணி கர்ணிகமாயும், அதைச்சுற்றியுள்ள எட்டுத் தீர்த்தங்கள் இதழ்களாயும், காவேரி கொடியாயும், ஸஹ்ய பர்வதம் மூலமாயுமுள்ளது. இம்

மாதிரியான தாமரையின் மத்தியில் ரங்கநாதன் ஸ்ரீதேவியோடு எப்பொழுதும் ரமிப்பதால் ஸ்ரீரங்கமென்று பெயராயிற்று.

கங்கா ஸ்நானத்தாலும், தபஸ்ஸினாலும் பாபம் மட்டுமே போகும்; ரங்க வித்யையினால் அம்ருதத்தையும் அனுபவிக்கலாம்.

வேதங்கள், வேதாங்கங்கள், புராணம், தர்ம சாஸ்திரம், மீமாம்ஸை, ஓங்காரம், வியாஹ்ருதிகள், காயத்ரி, உபவேதங்கள், மற்றை வித்யைகள்—யாவும் ஸ்வரூபத்தோடு ரங்கநாதனை உபசரிக்கின்றன.

பகவானுக்கெதிரில் (தெற்கில்) ருக்வேதமும், மத்தியில் யஜுர் வேதமும், வடக்கில் ஸாமவேதமும், நாற்புறத்திலும் அதர்வண வேதமும் இருக்கின்றன. ஒரே வேதம் யாகத்துக்காக அடியும் நுனியுமாயுள்ள ருக்வேதமாயும் ஸாமவேதமாயும் இரண்டாகப் பிரிந்ததுபோல, ஒரே காவேரி ரங்கநாதனை ஸேவிப்பதற்காக இரண்டாய்ப் பிரிந்தது. வேதம் பிரம்மாவினிடமிருந்து வெளியானதுபோல, காவேரி ஸஹ்ய பர்வதத்திலிருந்து வெளியாகிறது. இரண்டு காவேரிகளின் நான்கு கரைகளே நான்கு புருஷார்த்தங்கள் எப்படியெனில்:— வட திருக்காவேரியின் தென்கரை தர்மம், வட கரை அர்த்தம்; தென் திருக்காவேரியின் தென்கரை காமம், வட கரை மோக்ஷம். வேதத்தினுடைய ஸம்ஹிதா பாகம்தான் காவேரியின் வேகம்; பதமும் க்ரமமும் அலையாயும் சுழலாயுமிருக்கின்றன. காவேரியின் சிறிய அலையே வேதத்தின் வர்ண க்ரமம். வேதத்தினுடைய ஜடை காவேரியின் வக்ர கதியாயிருக்கிறது. வேதத்துக்குள்ள உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம்—என்ற ஸ்வரங்கள் நாலும் காவேரி கரைபுரண்டிருப்பதும், ஸ்வல்ப ஜலத்தோடிருப்பதும், இடுப்பளவு ஆழமாயிருப்பதும், ஆழம் அண்டாமலிருப்பதுமாயுள்ளன. காவேரி கரையை உடைத்துக் கொண்டு பாய்வது, மடுவாய்த் தேங்கியிருப்பது, மெதுவாகப் போவது, மேலே வழிந்து போவது—இந்நான்கும் வேதத்தினுடைய அநுஸ்வாரம், ப்லுதம், கம்பம், விஸர்கங்களாகும். காவேரியில் ஸ்நான பானம் செய்வது வேதத்தினுடைய பதங்களின் அர்த்தமாகும். காவேரியிலுள்ள செந்தாமரைகள் வேதத்தின் க்ரியார்த்தம்; வேதத்தின் பரமார்த்தம் பகவானுடைய ஸேவை. வேதத்துக்குள்ள மூன்று அர்த்தங்களும் இப்படி மூன்று விதமாயுள்ளன. காவேரியிலிருந்து வழிந்துபோகிற ஜலம் வேதத்தினுடைய

போகிறவர்கள் வேதத்தினுடைய ஸ்வரங்கள். காவேரி பாய்கிற தேசங்கள் வேதத்தினுடைய மண்டலங்களாயும், யோஜனைகள் அத்யாயங்களாயு முள்ளன. காவேரி ஒழுங்காக ப்ரவஹிப்பது வேதத்தினுடைய ஸூக்தங்கள். வேதத்தினுடைய வர்கமெல்லாம் காவேரியின் கரை மரங்கள். காவேரியின் துறைகளே வேதத்தின் ருக்குகள். வேத தேவதைகளே காவேரி தேவதைகள். வேதத்தில் சொல்லப்பட்ட ரிஷிகளே காவேரி தீரத்தில் தபஸ் செய்யும் ரிஷிகள். வேதத்தின் சந்தஸ்ஸு காவேரியின் அக்தராளம்.

ஸ்ரீரங்கத்துக்கு மத்தியிலுள்ள சந்திரபுஷ்கரிணி யஜுர்வேதம். புஷ்கரிணியின் மத்தியில் பொன்னிறமான ஆமை சக்ராயுதத்தினால் அடையாளம் செய்த சரீரத்தோடிருக்கிறது. தலையில் ரத்தினம் விளங்கும் அனேகம் ஸர்ப்பங்கள் சரீரத்தைக் குறுக்கிக்கொண்டு எப்பொழுதும் புஷ்கரிணி தீர்த்தத்தை ரக்ஷிக்கின்றன. கண்ணுடியில் முகம் பார்ப்பதுபோல, சந்திர புஷ்கரிணியில் வைகுண்டத்தைப் பார்க்கலாம். காவேரியின் வடபாகம் (கொள்ளிடம்) ஸாமவேதமாகும். ஸாம வேதத்தினுடைய ருக், ஸம்ஹிதை, சாகை — முதலியன உத்தர காவேரியின் இரு கரையிலுமுள்ள வாய்க்கால்கள்.

புஷ்கரிணியைச் சுற்றி எட்டு திக்கிலுமுள்ள எட்டுத் தீர்த்தங்கள் அதர்வண வேதம். மேன்மையை நாடும் தேவதைகளும் பிரம்ம ரிஷிகளும் அங்குள்ளனர்.

ஸப்த ப்ராகாரங்களும் ஸப்த லோகங்கள்—

பூ:, புவ:—என்னும் வியாஹ்ருதிகளான ஸப்த லோகங்களே ஸப்த ப்ராகாரங்கள். காயத்ரீ முதலான ஸப்தச் சந்தஸ்ஸுகளும் ஸப்த ப்ராகாரத்துக் குள்பட்ட வீதிகளாகும்.

முதல் ப்ராகாரம் காயத்ரீச் சந்தஸ்ஸோடு சேர்ந்த ஸத்யலோகம்.
இரண்டாவது—உஷ்ணிக் சந்தஸ்ஸோடு தபோ லோகம்.
மூன்றுவது—அனுஷ்டுப் சந்தஸ்ஸோடு ஜனர் லோகம்.
நான்காவது—ப்ருஹதீ சந்தஸ்ஸோடு மஹர் லோகம்.
ஐந்தாவது—பங்க்தீச் சந்தஸ்ஸோடு ஸுவர் லோகம்.
ஆறுவது—த்ரிஷ்டுப் சந்தஸ்ஸோடு புவர் லோகம்.
ஏழாவது—ஜகதீச் சந்தஸ்ஸோடு பூலோகம்.

**கோபுரம் முதலியவை வேத தேவதைகள்—**

வேதத்திற் சொல்லப்பட்ட தேவதைகள் ஸ்ரீரங்க ப்ராகாரங்களின் கதவுகளாயும், பாதைகளாயும், துவாரங்களாயும், கோபுரங்களாயும், தோரணங்களாயும், மேடைகளாயுமிருக்கிறார்கள்.

**மடைப்பள்ளி வியாகரண சாஸ்திரம்**[1]

வியாகரண சாஸ்திரமான வேதாங்கம் ஸ்ரீரங்கம் கோயிலின் மடைப்பள்ளியாயுள்ளது. மடைப்பள்ளிக்கு இந்திராக்னி என்னும் தேவதை அதிஷ்டான தேவதையாயிருக்கிறது. பகவானுக்கு ஹவிஸ்ஸை நிவேதனம் செய்வதற்காக இந்திராக்னிகளான தேவதைகள் பகவானுடைய வாயில் இருக்கிறார்கள். பஞ்சபூத மயமாயுள்ள இந்த ப்ரபஞ்சமே ஹவிஸ் ஸ்வரூபமாக பகவானுடைய வாயில் பிரவேசிக்கின்றன. நெல் முதல் ஓஷதிவரைக்குமுள்ள எல்லாப் பயிர்களும் பிருதிவியைச் சேர்ந்தவை. பால் முதலியன ஜலத்தைச் சேர்ந்தவைகள். மிளகு முதலியவை அக்னியால் உண்டாவன. சமையலிலிருந்து உண்டாகும் மணம் வாயுஸ்வரூபமாயுள்ளது ஷட் ரஸங்களும் ஹவிஸ்ஸிலுள்ள இனிப்பும் ஆகாச ரூபமாயுள்ளன. மடைப்பள்ளியிலுண்டாகும் சப்தங்களே வியாகரண சாஸ்திரமாகும்.

கோயிலிலும் வீதிகளிலும் செய்யும் அலங்காரம் கல்ப சாஸ்திரம்.

கருடன் முதலான வாஹனங்கள் சந்தஸ் சாஸ்திரம்.

ஆபரணங்கள் ஜோதிஸ் சாஸ்திரம். ரங்கநாதனுடைய ஆபரணங்களை தரிசித்தால் ஸூரியன் முதல் த்ருவன் வரையிலுமுள்ள ஸகல ஜோதிகளும் தெரியலாகும்.

ரங்கநாதன் உகக்கும் எல்லாப் புஷ்பங்களும் சிக்ஷா சாஸ்திரம்.

வாத்தியங்களின் சப்தம் நிருக்த சாஸ்திரம்.

பத்ரம், புஷ்பம், பலம் முதலியவை நிறைந்த ரங்கநாதனுடைய ஆராமங்கள் வேதத்திலுள்ள ஆரண்யகம்.

பிராம்மணர்கள் தரிசனத்துக்காக வரும் மார்கம் வேதத்திலுடைய பிராம்மண பாகம்.

(1) இதுவரையில் வேதங்கள் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திலிருக்கும் பிரகாரத்தைச் சொல்லி, இனி வேதாங்கங்களின் பிரகாரத்தைச் சொல்லுவதற்காக முதலில் வியாகரணம் எடுக்கப்படுகிறது.

தீபங்கள் புராணம்—

பகவானுக் கெதிரில் பிரகாசிக்கும் நெய் தீபங்கள் எல்லாவற்றையும் பிரகாசப் படுத்தும் புராணங்கள். புராணத்துக்கு ஐந்து லக்ஷணமுண்டு; தீபமும் பஞ்சபூதமயமாயிருக்கும். எப்படியெனில்—தீபத்தின் பாத்ரம் ப்ருதிவி; எண்ணெய் நெய்கள் ஜலம்; திரி வாயு; பிரகாசம் ஆகாசம்; தீபம் தேஜஸ். (ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம், ஸூர்ய சந்திர வம்சங்கள், மன்வந்தரங்கள், வம்சங்களின் சரித்திரம்—ஆக இவ்வைந்து விஷயங்களும் அடங்கிய புராணம் ரங்கவித்யையில் சொல்லப்படுகிற பிரகாரம் யாதெனில்—) பகலும் ராத்திரியும் ஸ்ருஷ்டி; அகவிருளைப் போக்குவது ஸம்ஹாரம்; பகலிலும் ராத்திரியிலும் கிடைக்கும் பகவத்ஸேவை ஸூர்ய சந்திர வம்சங்கள்; அந்தந்த காலத்தில் நடக்கும் காரியங்கள் மன்வந்தரங்கள்; நித்ய பூஜை வம்சங்களின் சரித்திரம்.

பஞ்சகால நியமத்தோடு ரங்கநாதனுக்கு த்ரிகாலத்திலும் நடக்கும் ஆராதனம் தர்க்க சாஸ்திரமாகும்.

வெளிப்புறத்திலும் உட்புறத்திலுமாய் இரண்டு விதமாயுள்ள பூஜை சாமான்கள் யாவும் பிரம்ம மீமாம்ஸை கர்ம மீமாம்ஸை—என்று இருவிதமாயுள்ள மீமாம்ஸா சாஸ்திரம்.

கர்ஷணம் முதல் பிரதிஷ்டை வரைக்கும், பிரதிஷ்டை முதல் உத்ஸவம் வரைக்குமுள்ள எழுபத்திரண்டு கர்மாக்களும் தர்ம சாஸ்திரமாகும்.

விமான லக்ஷணம்—

பிரணவமே விமானமாயிருக்கிறது. ரங்கமண்டபம் காயத்ரீ. (ஆனதுபற்றியே காயத்ரீ மண்டபமென்று வழங்கப்படுகிறது) துவாரத்தின் இருபுறத்திலுமுள்ள ஸ்தம்பங்கள் (திருமணத்தூண்கள்) ஹரி என்னும் இரண்டு அக்ஷரங்கள். அகாரம், உகாரம், மகாரம்—என்ற மூன்று அக்ஷரங்களான ஓம் என்னும் பிரணவம் கிரமமாக உத்ஸாஹ சக்தி, பிரபு சக்தி, மந்திர சக்தி—என்ற மூன்று சக்திகளையுடையது. காயத்ரீ மண்டபத்திலுள்ள இருபத்திநாலு ஸ்தம்பங்களும் காயத்ரீ மந்திரத்திலுள்ள இருபத்திநாலு எழுத்துக்கள். பகவானுடைய கேசவ, நாராயண—என்று பனிரண்டாயும் வாஸுதேவ, ஸங்கர்ஷண—என்று பனிரண்டாயுமுள்ள இருபத்திநாலு மூர்த்திகள் அந்த ஸ்தம்பங்களின் தேவதைகள்.

பத்து திக்குகளும் காயத்ரியிலுள்ள தத், ஸவிது :, வரேண்யம், பர்க :, தேவஸ்ய, தீமஹி, திய :, ய :, ந :, ப்ரசோதயாத்—என்னும் பத்து பதங்கள். பத்து அவதாரங்களும் பத்து திக்குகளுக்கு அதி தேவதைகள்.

ஸன்னிதி த்வாரத்தில் இருபுறத்திலும் மேலேயுமுள்ள மூன்று தேவதைகள் இரண்டு மீமாம்ஸையிலுமுள்ள மூன்று காண்டங்கள். (கர்ம காண்டம், தேவதா காண்டம் பிரம்ம காண்டம்.) இருபத்தி நாலு வேதங்கள், பக்ஷங்கள், தத்வங்கள், மூர்த்திகள், அக்ஷரங்கள்—பக்கத்திலுள்ள ஸ்தம்பங்களின் அடியிலுள்ளன. (இந்த விஷயம் மூலத்திலுள்ளபடியே எழுதப்பட்டது. இதனால் யாதும் விளங்க வில்லை).

பிரஹலாதனிடம் வாத்ஸல்யமுள்ள ந்ருஸிம்ஹன் தேவதைகளினுடைய ஹிதத்துக்காகவும் ராக்ஷஸர்களின் விநாசத்துக்காகவும் ஸ்தம்பத்திலிருந்து வெளியானர்; இந்த பிரம்மாண்டத்துக்கே ஸ்ரீரங்கம் மூலஸ்தம்பம், அதில் ரங்கநாதன் த்ரிகுண ஸ்வபாவத்தோடிருக்கிறார். விமானத்தினுடைய மூல மத்ய அக்ர பாகங்கள் பூ: புவ : ஸுவ :—என்னும் வியாஹ்ருதிகள்.

விமான கலசங்கள்—

விமானத்தின் மேலுள்ள ஒன்பது தங்கக் கலசங்களும் ஓம், ஆப :, ஜ்யோதி:, ரஸ :, அம்ருதம், பிரஹ்ம, பூ :, புவ :, ஸுவ :—என்னும் காயத்ரியின் ஒன்பது சிரஸ்ஸுகள். ஒன்பது கிரஹங்களும் இந்த ஒன்பது கலசங்களை உபசரிக்கின்றன.

ஸ்ரீரங்கத்திலுள்ள குளம், குட்டை, கிணறு—முதலிய ஜல ப்ரதேசங்கள் உபவேதங்களாயும் சாஸ்திரங்களாயுமிருக்கின்றன ஸ்ரீரங்கம் இயற்கையாகவே கல்ப விருக்ஷத்துடன் கூடியது.

மஹரிஷிகள் செய்த ஆகமங்கள், மஹாபாரதம், மூல ராமாயணம்—முதலியவை சித்திர ரூபமாயுள்ளன.

வர்ண ஆச்ரம குல ஆசாரங்கள் நான்கும் நாலு பக்கங்களிலும் ஜங்கம ரூபங்களாயுள்ளன.

பீஜாங்குர ந்யாயம்போல இந்த ப்ரபஞ்சம் முழுவதும் ரங்க க்ஷேத்திரத்திலேயே ஒடுங்கி அதிலிருந்தே வெளியாகின்றன.

விபீஷணன்—

அகாலத்தில் ஆபத்து உண்டானால் விபீஷணன் வந்து சாஸ்திரப்படி ரங்கநாதனைப் பூஜிப்பான். விபீஷணன் போனபிறகு, மனுஷ்யர்கள் வழக்கம்போல ஸுகமாக ரங்கநாதனைப் பூஜிப்பார்கள். முன்பு தேவதைகள் தவம் கிடந்து பகவானை தரிசித்தார்கள்; இப்பொழுது விபீஷணன் எல்லோருக்கும் எளிதாக பகவானை தரிசனம் செய்து வைக்கிறான்.

தர்மவர்மா—

ஸூர்ய வம்சத்தைச் சேர்ந்த தர்மவர்மா என்பவன் சந்திர புஷ்கரிணீதீரத்தில் தவம்செய்து, லோகஹிதத்துக்காகவும் வேதார்த்தம் ஸித்திப்பதற்காகவும் விபீஷணனிடமிருந்து பிரணவாத்மகமான ரங்கவிமானத்தைப் பெற்றான். தர்மத்தையே வர்மமாக (கவசமாக) பூண்டவனாகையால் அவனுக்கு தர்மவர்மா என்று பெயர்.

பதினாறு வித்யைகளும் தர்மவர்மனோடு ரங்கநாதனை உபசரிக்கின்றன. தர்மவர்மா என்றும் தீக்ஷிதன் விபீஷணனை ஆசார்யனாகவும் பக்தர்களை ரித்விக்குகளாகவும்கொண்டு ரங்க யக்ஞத்தை நடத்தினான். பிரகிருதி யாகம் ஆதிசேஷன், விக்ருதியாகம் கருடன். வைதிகங்களாயும் தாந்திரிகங்களாயுமுள்ள நித்யோத்ஸவம் முதலியவற்றால் ரங்கநாதன் பூஜிக்கப்படுகிறார். சந்திரபுஷ்கரிணிஜலமான ஸோம ரஸத்தைப் பானம் செய்துகொண்டு தர்மவர்மா ஸமாதியோடு ரங்கநாதனைப் பூஜித்தான். தர்மவர்மா ரங்க வித்யை யென்னும் ரஸத்தைப் பானம் செய்து மேகம்போல ஸாதுக்களுக்கு அந்த ரஸத்தையே வர்ஷிக்கிறான். மனுஷ்யன் சரீரத்தை உபசரித்தால் ஸந்தோஷப்படுவதுபோல பகவான் ரங்கவித்யையை அப்யஸித்தால் திருப்தியடைகிறார்.

ரங்க க்ஷேத்ரம் பிரம்ம சரீரம்; அதற்கு விமானம் சிரஸ்ஸு; இரண்டு காவேரிகளும் கைகள்; எட்டுத் தீர்த்தங்களும் கால்கள்; இரண்டு ஸ்தம்பங்களும் வாய்; சந்திரபுஷ்கரிணி ஹிருதயம்; ரங்கமென்னும் இரண்டு அக்ஷரங்கள் பிராணன். எல்லா ப்ராணிகளின் காலடியும் யானையின் காலடியில் அடங்குவதுபோல, மர்த்யாநந்தம் ஸுராநந்தம், பிரம்மாநந்தம், ஸத்யாநந்தம்—என்னும் ஆநந்த சதுஷ்டயமும் ரங்கவித்யையில் அடக்கம்.

பிரஹலாதன், நாரதர், வியாஸர், புண்டரீகர், பராசரர், அர்ஜுனர் இருவர், பலி, ருக்மாங்கன், வஸிஷ்டர், சுகர், சௌநகர், அம்பரீஷன், பீஷ்மர், தால்பியர், த்ருவன், விபீஷணன்—இவர்களும் மற்றை மஹாத்மாக்களும் பாத்ம புராணத்தில் சிவபெருமான் சொன்ன ரங்கவித்யையை இன்றைக்கும் படித்துக்கொண்டிருக்கிறார்கள். பரமசிவன் பார்வதியோடுகூட இன்னும் ரங்கவித்யையால் ஆனந்தமடைகிறார். பிரம்மா, இக்ஷ்வாகு, விபீஷணன்—இம்மூவரும் தபஸ் செய்து இந்த ஸ்ரீரங்க ப்ரம்ம வித்யையை லபித்தார்கள். சிவன் ஸ்வயமாகவே ரங்கவித்யையைப் பெற்று ப்ரகாசிக்கிறார்.

ரங்கவித்யை யென்னும் லதை க்ஷீராப்தியில் உண்டாய், விரஜையில் முளைவிட்டு, ஸரயூவில் தளிர்த்துப் பூத்து, காவேரியில் பழம் கொடுத்தது. அந்தப் பழத்தின் ரஸத்தை பிரம்மா முதலான தேவர்களும் விபீஷ்ணன் முதலானோரும் அனுபவிக்கிறார்கள். பிரஹ்லாதனே! இப்படி ரஹஸ்யமாயுள்ள வித்யை கைலாஸத்தில் சிவனுடைய உபதேச மூலமாக எனக்குக் கிடைத்தது. இதை நான் உனக்கு சுருக்கமாகச் சொன்னேன். ரங்கவித்யையைப் படிப்பவன் இதர விஷயங்களில் மனம் செலுத்தான்.

---

# ஸ்ரீரங்கநாத அஷ்டோத்தர சத நாமங்கள்

இதுவும் பிரம்மாண்ட புராணத்திலுள்ளதாகச் சொல்லப்படுகிறது. ரங்கநாதனுக்குச் சொல்லப்படும் நூற்றெட்டுப் பெயர்கள் ஒவ்வொன்றிலும் "ரங்க" என்னும் பதம் கலந்திருப்பது இங்கு விசேஷம். இதை மூலத்திலேயே கண்டுகொள்க.

---

# ஸ்ரீரங்கபட்டண மாஹாத்மியம்[1]

(பிரம்மாண்ட புராணோக்தம்)

1—ம் அத்.

கௌதமர் கோதாவரி தீரத்தைவிட்டுக் காவேரி தீரம் போனார்.

நாரதர்—ஸ்வாமி! நீர் முன்பு காவேரியின் ப்ரஸ்தாவத்தில் ஸ்ரீரங்க மாஹாத்மியத்தை எனக்குச் சொன்னீர். மூன்று ரங்கம் இருப்பதாக நான் கேள்விப்படுகிறேன்; அதைச் சொல்லவேண்டும்.

சிவன்—நாரதரே! ஸுப்ரம்மண்யனுக்குச் சொன்னபடியே உமக்கும் சொல்லுகிறேன் :—

ஸ்ரீமந் நாராயணனுடைய அர்ச்சா ரூபங்களில் ஆத்யமாயும் ஸ்வயம் வியக்தமாயுமுள்ள ரங்கம் ஸத்யலோகம் போய் பிரம்மாவினால் ஆராதிக்கப்பட்டது. ரங்கம் பூலோகத்தில் மூன்றாயிற்று. முதலாவது பூர்வரங்கம். இரண்டாவது தக்ஷிண ரங்கம். மூன்றாவது பச்சிம ரங்கம்.

காவேரியின் முதல் த்வீபமான ஸ்ரீரங்கபட்டணத்திலுள்ளது பச்சிம ரங்கம். அது திவ்ய மென்றும், காவேரியின் பிரார்த்தனையால் வந்ததுபற்றி ஆர்ஷமென்றும் சொல்லப்படும். பூர்வ ரங்கத்திலுள்ள பகவான் பதினாலாவது சதுர்யுகத்துக்குப் பிறகு கௌதமரால் பிரார்த்திக்கப்பட்டு அங்கு ஆவிர்பவித்தார்.

தக்ஷிண ஸமுத்திரத்திலுள்ள அநந்த சயனம் தக்ஷிண ரங்கமென்றும், அந்தரங்கமென்றும் சொல்லப்படுகிறது. அங்கு பகவான் அநந்தனால் ஆராதிக்கப்படுகிறார்.

இந்த மூன்று ரங்கமும் ஒன்றேயாகும். ஒரே விஷ்ணுவுக்கு விஷ்ணு காயத்ரியில் நாராயணன், வாஸுதேவன், விஷ்ணு—என்ற மூன்று பெயர்கள் உண்டானதுபோல, ஒரே ரங்கம் மூன்றிடத்திலும் உள்ளது. விஷ்ணு என்னும் பெயர் ருக்வேதத்திலும், நாராயணன் என்னும் பெயர் யஜுர்வேதத்திலும், வாஸுதேவன் என்னும் பெயர் ஸாமவேதத்திலும் சொல்லப்படுகிறது. பகவான் பூர்வ ரங்கமான ஸ்ரீரங்கத்தில் த்வாதசாக்ஷர மந்திரத்தினாலும், பச்சிம ரங்கமான ஸ்ரீரங்க பட்டணத்தில் அஷ்டாக்ஷரத்தினாலும்,

1. மைசூர் ஸ்ரீரங்க பட்டணத்தைப்பற்றி ஐந்து அத்தியாயமாயுள்ள இந்த மாஹாத்மியத்தில் ஸ்ரீரங்கத்தைப் பற்றிய விஷயமும் இருப்பதால், இதுவும் சுருக்கமாக எழுதப்படுகிறது.

அந்தரங்கமான அநந்த சயனத்தில் ஷடக்ஷரத்தினாலும் பூஜிக்கப் படுகிறார்.

ஸ்ரீரங்கபட்டணத்துக்கு கௌதம க்ஷேத்ரமென்று பெயர்.

நாரதர்—கோதாவரீ தீரத்தில் தபஸ் செய்துகொண்டிருப்பதாக ப்ரஸித்தரான கௌதமர் இந்த க்ஷேத்ரத்துக்கு எப்படி வந்தார்?

சிவன்—முன்பு பூமண்டலம் முழுவதும் பன்னிரண்டு வருஷப் பஞ்சம் வந்தது. கோதாவரீ தீரம் மாத்திரம் ஸுபிக்ஷமாயிருப்பது கண்டு ஒவ்வொரு திக்கிலுமுள்ள ரிஷிகளும் அங்கு வந்தார்கள். அங்கிருந்த கௌதமர் அவர்களைக் களிப்புடன் வரவேற்று உபசரித்தார். அந்த க்ஷேத்திரத்தில் பயிர்கள் மிகவும் செழிப்பாயிருந்ததால் பொறாமையுற்ற சில ரிஷிகள்—கௌதமரை அவ்வாச்ரமத்தினின்றும் விரட்டிவிட நினைத்து, ஓர் பசுவைப் பயிரில் ஓட்டினார்கள். கௌதமர் அந்தப் பசுவை அடித்தார்; அது இறந்தது. உடனே ரிஷிகள்—கௌதமர் கோவதம் செய்தார்—என்று கூக்குரலிட்டனர். இப்படி நேர்ந்ததன் காரணத்தை கௌதமர் ஞானதிருஷ்டியாலறிந்து—பொய்ப் பாபம் கல்பிக்கும் நீங்கள் விஷ்ணுத்வேஷிகளாயும், பாஷண்டிகளாயும், வேதஹீனர்களாயும், சிவ விஷ்ணு ஸாம்யம் கொள்பவர்களாயும் ஆவீர்களென்று சபித்து, அவ்வாச்ரமத்தை விட்டுத் தன் சிஷ்யர்களோடு தீர்த்த யாத்ரையாகப் புறப்பட்டுக் காவேரியின் மேற்கு பாகத்துக்குப் போனார். அங்கே காவேரி மேற்கு முகமாயும், கிழக்கு முகமாயும், தெற்கு முகமாயும் மூன்றாய் ஓடுகிறது. கௌதமர் அங்கே யாகம் செய்தார்; ரங்கநாதன் பிரத்தியக்ஷமாகி, கௌதமரை அந்தக் காவேரி தீரத்திலேயே வஸிக்கச் சொன்னார்,

[2-ம் அத்-கௌதமர் ரிஷிகளுக்குச் சொன்ன ஸ்ருஷ்டி க்ரமம். இவ்விஷயம் சதாத்யாயி 5, 6, 7—அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டதால் இங்கு எழுதப்படவில்லை. சதாத்யாயியைவிட இங்கு சுருக்கமாயும் தெளிவாயுமிருக்கிறது.]

### 3—ம் அத்.

மூன்று ரங்கம் ஏற்பட்ட விவரம்.

நாரதர்—ரங்க விமானம் பரமபதத்திலிருந்து ஸத்யலோகம் போனதையும் ஸத்யலோகத்திலிருந்து சந்திரபுஷ்கரிணிக்குப் போனதையும் கேட்க விரும்புகிறேன்.

சிவன்—பிரம்மா பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்துவிட்டுத் தன்னுடைய ஜன்மம் அஸ்திர மென்றறிந்து தபஸ் செய்தார். பகவான் ரங்க விமானத்தில் ஆவிர்பவித்து, பிரம்மா விரும்பியபடியே ஸத்ய லோகம் போய், தன்னை ஆராதிப்பதற்காகப் பாஞ்ச ராத்ர மென்னும் ஸாத்வத சாஸ்திரத்தை பிரம்மாவுக்குக் கொடுத்தார்.

பாதாளத்தில் விஷ்ணுரூபியாயிருக்கும் கபிலர் இதையறிந்து, தானும் ரங்கநாதனை ஆராதிக்க விரும்பி, ஸத்யலோகம் போய் விரஜா தீரத்தில் தபஸ் செய்தார். ரங்கநாதன் பிரம்மாவை அழைத்து,—"கபிலருக்காக நான் அஷ்டாக்ஷராத்மகமான விமானத்துடன்[1] பாதாளம் போகிறேன். நீர் கபிலருக்குப் பாஞ்சராத்ர சாஸ்திரத்தை உபதேசியும். வாஸுதேவாத்மகமான என்னுடைய விமானத்தை நீர் பூஜித்துக்கொண்டிரும்"—என்று சொல்லிக் கபிலரோடு பாதாளம் போகலானார்; அப்பொழுது கங்கைக்கு ஈடாயிருக்க விரும்பித் தவம் செய்த காவேரியைக் கண்டு,—"சில காலம் கழிந்து உன்னிடம் நான் வருவேன்"—என்றும் அனுக்ரஹித்தார்.

பிறகு, வைவஸ்வத மன்வந்தர ஆரம்பத்தில் இக்ஷ்வாகு தபஸ் செய்து, வாஸுதேவ விமானத்தை ஸத்யலோகத்திலிருந்து அயோத்திக்குக் கொண்டுபோனான். அந்த விமானம் ராமனால் விபீஷணனுக்குக் கொடுக்கப்பட்டு ஸ்ரீரங்கத்தில் சந்திர புஷ்கரிணிக் கரையில் பிரதிஷ்டிதமாயிற்று.

ரங்கநாதனை இழந்த துக்கத்தினால் பிரம்மா தக்ஷிண ரங்கத்தில் எப்பொழுதும் பகவானுடைய நாபிகமலத்திலேயே[2] வீற்றிருந்த போது—"என்னுடைய விஷ்ணுவாத்மகமான இந்த ரங்க விமானத்தை ஆராதித்துக்கொண்டிரும்"—என்று பகவான் பிரம்மாவை அனுக்ரஹித்தார்.

4—ம் அத்.

ரங்கநாதன் ஸ்ரீரங்கபட்டணத்தில் கௌதமருக்காகவும் காவேரிக்காகவும் பிரதிஷ்டிக்கப்பட்டார்.

---

1. கபிலரோடு போய், பிறகு ஸ்ரீரங்கபட்டணத்தில் பிரதிஷ்டிக்கப்பட்டது முதல் விமானம்; பிரம்மாவினிடமிருந்து, பிறகு ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டிக்கப்பட்டது இரண்டாவதாக உண்டான வேறொரு விமானம் —என்று இந்த மாஹாத்மியத்தின் கருத்து.

2. இவ்விடம் சரியாகப் பொருள்படவில்லை.

நாரதர்—ஸ்வாமி! ரங்க விமானம் கௌதமருக்குக் கிடைத்த விவரம் யாது?

சிவன்—தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்ட கௌதமர் பதிரிகாச்ரமம்வரைக்கும் போய்த்திரும்பி, சந்திரபுஷ்கரிணிக் கரையில் நெடுநாள் தவம் செய்து, ரங்கநாதன் பிரத்தியக்ஷமானதும், "கோதாவரி தீரத்தில் என்னுடைய ஆச்ரமத்தில் நித்ய வாஸம் செய்யவேண்டும்"—என்று பிரார்த்தித்தார்.

ரங்கநாதன்—கௌதமரே! லங்கையை நோக்கிப் படுத்திருப்பதாக விபீஷணனுக்கு ப்ரதிக்ஞைசெய்த நான் இவ்விடம்விட்டு அகலமாட்டேன். நீரும் கோதாவரி தீரம் போகவேண்டாம். உம்மால் சபிக்கப்பட்ட க்ரூரர்கள் இருக்கும் இடமாயிற்று அது. நான் உமக்கொரு ரஹஸ்யம் சொல்லுகிறேன் கேளும்:—

மேற்கில் ஸஹ்யம் என்றொரு குலபர்வதம் இருக்கிறது. காவேரி அந்த மலையிலிருந்து உண்டாகி கங்கைபோல மூன்றாய்ப் பிரிந்து கிழக்காயும், தெற்காயும், மேற்காயும் பாய்கிறது. இப்படி மூன்றாய்ப் பிரிந்த காவேரி மறுபடியும் சேரும்வரையிலுள்ள க்ஷேத்திரம் மிகவும் உத்தமமானது. கபில நதிக்கு வடக்கு, ஸித்த பர்வதத்துக்குத் தெற்கு, காவேரியும் கபிலையும் கூடுமிடத்துக்கு மேற்கு, காவேரியும் ஹேமவதியும் சேருமிடத்துக்கு முன்னதாகவுமுள்ளது அந்த க்ஷேத்திரம். அனேகம் புண்ய தீர்த்தங்களோடு கூடிய அந்த க்ஷேத்திரத்தில் அஷ்டாக்ஷராத்மகமான விமானத்தில் மறைவாயிருக்கும் நான் உமக்காக ஆவிர்பவிக்கப்போகிறேன்.

கௌதமர்—நீர் அவ்விடத்தில் மறைந்திருக்கக் காரணமென்ன?

ரங்கநாதன்—"என்னுடைய ஜலத்தில் ஸ்நானம்செய்யும் ஜனங்களுடைய பாபத்தை என்னால் தாங்கமுடியவில்லை. ஆகையால், நீர் என்னிடம் ஸான்னித்யம் கொள்ளவேண்டும்."—என்று பிரார்த்தித்த காவேரிக்காகவும், அங்குள்ள மஹரிஷிகளுக்காகவும், உமக்காகவும் நான் அங்கு துளஸீவனத்திலிருக்கிறேன். சற்று தூரத்தில் லக்ஷ்மியும் இருக்கிறாள். நீர் அங்கு போம். நாரதரிடமிருந்து ஸாத்வத சாஸ்திரத்தை கிரஹித்துக்கொண்டு என்னை ஆராதிப்பீராக.

5—ம் அத்.

ரங்கநாதனுடைய பிரதிஷ்டை.

நாரதர்—ஸ்வாமி! பிறகு கௌதமர் என்செய்தார்?

சிவன்—கௌதமர் நாரதரிடமிருந்து ஸாத்வத சாஸ்திரத்தை கிரஹித்துக்கொண்டுபோய், காவேரியின் உத்பத்தி ஸ்தானத்தில் ஆமலகரூபமாயுள்ள பகவானை தரிசித்து, அனேகம் ரிஷிகளோடு வைஷ்ணவ இஷ்டி, நாராயண யாகம், வாஸுதேவ யாகம்—இம் மூன்றையும் செய்து துளஸீவனத்திலிருந்த புத்தைப் பிரித்து ரங்க விமானத்தையும் அப்பாலிருந்த லக்ஷ்மியையும் கண்டெடுத்தார்.

சித்திரை மாஸம், சுக்ல பக்ஷம், ஸப்தமி, சனிக்கிழமை, பிரஜாபதி நக்ஷத்திரம், அபிஜித் லக்னத்தில் ரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் பிரதிஷ்டிக்கப்பட்டார்கள். அந்த க்ஷேத்திரத்தில் ரங்கநாதன் கிழக்குப் பார்த்து, தெற்கே முடியும் வடக்கே அடியும் வைத்து சயனித்திருக்கிறார்.

---

# பாரமேசுவர
# ஸ்ரீரங்க மாஹாத்மியம்

1. பாரமேசுவர ஸம்ஹிதை—

ஸ்ரீரங்கம் கோயில் ஆராதனத்துக்காக ஏற்பட்ட பௌஷ்கர ஸம்ஹிதைக்கு விவரணமாயிருப்பது பாரமேசுவர ஸம்ஹிதை. இந்த ஸம்ஹிதையின் 10-ம் அத்தியாயத்தில் ஸ்ரீரங்க மாஹாத்மியம் சொல்லப்படுகிறது.

2. பத்தாம் அத்தியாயத்தின் விவரம்—

இந்த அத்தியாயத்தில் 387½ சுலோகங்களுள்ளன. இதில் அடங்கிய விஷயங்கள் பின்வருமாறு:—

| | | |
|---|---|---|
| 1. | விமான லக்ஷணம் | 106 |
| 2. | பிரம்மாவின் உற்பத்தி | 121 |
| 3. | பிரம்மாவின் தபஸ் | 151 |
| 4. | ரங்கவிமான தரிசனம் | 210½ |
| 5. | பௌஷ்கரோபதேசம் | 225 |
| 6. | இக்ஷ்வாகுவின் தபஸ் | 257 |
| 7. | இக்ஷ்வாகுவுக்கு ரங்கவிமானம் கிடைத்தது | 272 |

8. விபீஷணனால் ரங்க விமானம் காவேரி தீரம் சேர்ந்தது 290½
9. ஸ்ரீ ரங்க க்ஷேத்ர மஹாத்மியம் 317½
10. திவ்ய சாஸ்திராதிபேதம் } பாரமேச்வர ச்ரைஷ்டியம் } 387½

3. விமான லக்ஷணம்[1] —

முதல் 106 சுலோகங்களில் விமான லக்ஷணம் வெகு விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. விமானத்தின் ஒவ்வொரு பாகமும் விவரிக்கப்பட்டு அதிலுள்ள தேவதை—முதலிய விசேஷமும் இங்கு வியக்தமாய்க் காண்கிறது. இது வெகு விஸ்தாரமாயிருப்பதால் 4-வதான ரங்கவிமான தரிசனத்தில் சொல்லப்படும் சுருக்கமான விமான லக்ஷணம் மட்டும் கீழே காட்டப்படுகிறது. அதாவது—

1. பீடம்முதல் சிகைவரையில் ஸத்யலோகம் முதலான ஸப்தலோகங்கள்; புவநாத்வாமுதல் வர்ணாத்தாவரையிலுள்ள ஆறு அத்வாக்கள்; பிருதிவி முதல் ஜீவன் பர்யந்தமான இருபத்தைந்து தத்துவங்கள்.

2. பீடத்தின் ஆதார பாகத்தில் அநந்தன் என்னும் நாக ராஜன், ஸஹஸ்ரார சக்ரம், ஸாமர்த்திய சக்தி முதலான சக்திகள் ஞானாதி அஷ்ட சக்திகள், பல வீர்யாதி அஷ்ட சக்திகள்.

3. பீடப்ரதேசத்தில் தர்மாதி 16 தேவதைகள், கால சக்ரம், மூன்று தேஜோ மண்டலத்தையுடைய தாமரஸ புஷ்பம், அதன் மத்தியில் ஞானஸ்வரூபனான புருஷன்.

4. நாலு திக்குகளிலும் அநந்தன் முதலியவர்கள்.

5. சரணவர்கத்தின் திக்குகளில் வாஸுதேவாதி மூர்த்திகள்

1. ஸ்ரீரங்கம் அர்ச்சகர் வ. ரங்கஸாமி பட்டர் இந்தப் பத்தாம் அத்தியாயம் முழுவதையும் தமிழில் எழுதியிருக்கிறார். அதை முற்றிலும் இச்சிறு புஸ்தகத்தோடு சேர்க்க ஸாத்யமில்லாமலிருக்கிறது. 106 சுலோகங்களிலுள்ள விமான லக்ஷணத்தை முற்றிலும் அச்சிட்டால்கூட இவ்விஷயம் ஸாமான்யர்களுக்கு விளங்காது. ரங்க விமானத்தைப் பெரிய படத்திலெழுதி அந்தந்த பாகத்தில் ஒவ்வொரு லக்ஷணத்தையும் குறித்தால் இவ்விஷயம் நன்றாய் விளங்கும். அந்தப் படம் இச்சிறு புஸ்தகத்தோடு சேரமுடியாதாகையால் தனியாய் வெளியிடப்படும்.

6. சாகாமூலத்தில் ஸுதர்சனம்.

7. இருபக்கங்களிலும் ஞானதத்வம், கிரியாதத்வம்.

8. மேல்பாகத்தில் அதிஷ்டாதாவான பரமேச்வரன்.

9. பின்பாகத்தில் தர்மதேவதை.

10. இரண்டு கதவுகளிலும் காலாக்னி, வருணன்.

11. சுகநாஸா ஸ்தம்பங்களில் இச்சா சக்தி, பிராண சக்தி.

12. கவாக்ஷங்களில் அக்னி, ஸோமன்.

13. ஜங்கை முதலான 12 நடுபாகங்களில் காலன்முதல் பூமிவரையிலுள்ள தேவதைகள்.

14. ஜங்கையின் நுனியில் கேசவன் முதலான மூர்த்திகள்.

15. கபோத ஸ்தானத்திலுள்ள ஒன்பது நாஸிகைகளிலும் சக்கிரம் முதலான ஆயுதங்கள்.

16. சுகநாஸா முகத்தில் ஜகத்பதியான வாஸுதேவன் (பரவாஸுதேவன்)

16. மற்றுமுள்ள மூன்று நாஸிகைகளில் அச்சுதன் முதலானவர்கள்.

17. இலை கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட மேடைகளில் ஆறு அரங்களுள்ள சக்கிரம்.

18. நாலு பக்கங்களிலும் வாஸுதேவாதிகள்.

19. சக்கிரங்களிலும் அவற்றின் நுனியிலும் அமலசக்ரம் முதல் உதித சக்ரம் வரைக்குமுள்ள சக்கிரங்கள்.

20. சுகநாஸா கடங்களில் அத்யக்ஷன்முதல் ஆதிமூர்த்தி பர்யந்தமான தேவதைகள்.

4. பிரம்மாவின் உத்பத்தி முதலியவை—

பிரம்மாவின் தபஸ், ரங்கவிமான தரிசனம், பௌஷ்கரோப தேசம், இக்ஷ்வாகு தபஸ், இக்ஷ்வாகுவுக்கு ரங்கவிமானம் கிடைத்தது, விபீஷணனால் ரங்கவிமானம் காவேரிதீரம் சேர்ந்தது— இந்த ஏழு விஷயங்களும் அனேகமாய் தசாத்யாயியிலுள்ளபடியே.

5. ஸ்ரீரங்க க்ஷேத்ர மாஹாத்மியம்—

1. தக்ஷயாகத்தில் ருத்ரனால் அவமதிக்கப்பட்ட சந்திரன் ஸ்ரீரங்கத்தில் தபஸ் செய்ததால் ருத்ரனுடைய தலையில் விளங்குகிறான்.

2. வாமனப்பெருமாளுக்கு ஸ்ரீரங்கத்தில் உபநயன ஸம்ஸ்காரம் நடந்தது.

3. பின்னால் ஸ்தாபிக்கப்படும் ரங்கவிமான ரக்ஷணார்த்தமாக கணேசனும் யோக நித்ரையும் முன்னதாகவே ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பப்பட்டார்கள்.

(இந்த ஸம்ஹிதையில் மட்டுமுள்ள அதிசயங்கள் இம்மூன்றும்.)

ஸ்ரீரங்க மாஹாத்மிய மூலகிரந்தங்கள்:– மைசூர் சக்ரவர்த்தி அய்யங்கார் 1895-ம் வருஷத்தில் தெலுங்கு எழுத்தில் அச்சிட்ட புஸ்தகத்தில் சதாத்யாயி, தசாத்யாயி, ரங்கவிமான ப்ரதக்ஷிணம், ஸ்ரீரங்க ப்ரஹ்மவித்யை, ஸ்ரீரங்கநாத அஷ்டோத்தர சத நாமங்கள், ஸ்ரீரங்கபட்டண மாஹாத்மியம், ஸ்ரீரங்கநாத மங்களம்—என்ற ஏழு கிரந்தங்களுள்ளன. இவற்றுள் தசாத்யாயியும் விமான ப்ரதக்ஷிணமும் நாகர எழுத்திலும் கிரந்த எழுத்திலும் பலவிடங்களில் வெளியிடப்பட்டிருக்கிறது. சதாத்யாயி கோயில் உபாத்தியாயரிடத்திலும், அடையார், தஞ்சாவூர் கையெழுத்துப் புஸ்தகசாலைகளிலும் இருக்கிறது. ஸ்ரீரங்க ப்ரஹ்மவித்யை, ஸ்ரீரங்கபட்ட மாஹாத்மியம் முதலியவை மைசூர்ப் புஸ்தகம் தவிர வேறிடத் இருப்பதாய்த் தெரியவில்லை.

ஸ்ரீரங்கம் பஹுபுராணப்ரஸித்த வைபவம்—என்று தேசிகன் அருளிச் செய்தபடி ஸ்ரீரங்கத்தைப்பற்றி பிராமாணிகமான புராணங்களில் கிடைக்கக்கூடிய விவரங்களையெல்லாம் தேடியெடுத்து ஒரு புஸ்தகமாக வெளியிடும் பிரயத்தினம் இப்பொழுது இவ்வளவோடு நிறுத்தப்படுகிறது.